உ

கணபதி துணை.

திருக்கைலாயபரம்பரைத் தருமபுரவாதீனத்தைச்சார்ந்த

காசிமடாலயம்

குமரகுருபரசுவாமிகளால்

அருளிச்செய்யப்பட்ட

# பிரபந்தத்திரட்டு.

முதற்பாகம்.

இதில்

திருச்செந்தூர்கந்தர்கலிவெண்பா.

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

குறம் இரட்டைமணிமாலை

இந்நான்கும் அடங்கியிருக்கின்றன.

இவை

மகாவித்வான் புரசை அஷ்டாவதானம்

சபாபதிமுதலியாரவர்கள் மாணாக்கர்களிலொருவர்

வித்வான்,

காஞ்சீபுரம்-இராமசாமிநாயுடு அவர்களால்

செய்யப்பட்ட

உரையுடன்

வையூர்க்கோட்டம்-பெ-சுந்தரமுதலியார் குமாரர்

திருவேங்கடசாமி முதலியார் அவர்களால்

சென்னைப் பண்டித மித்திர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

சார்வரி௵ சித்திரை௴



இதன் விலை படத்துடன் ரூபாய் ஒன்று.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.



திருமக ளகலாப் பரமவை குந்த
நன்னக ருதித்த செந்நெறிக் குரிசி
லைந்தெனும் பருவம் வந்துறு மளவு
மழுக்குண மொருவி மிழற்றிடாச் செம்மல்
செந்திலம் பதிவாழ் கந்தன தருளா
லோதா துணர்ந்த போதனாய் முன்னர்க்
கலிவெண் பாவெனு மொலிபெறு மலங்கலக்
குகன்றிரு முடிதனக் குகந்திடச் சூட்டிப்
பிள்ளைக் கவிமுதல் வெள்ளைக் கிழத்தி
மாலை யிரூச் சால்பமை பிரபந்த
மூந்நான் கியற்றித் தன்னுஞ் சமய
நிலையையுங் காட்டி யுலைவிலா தியாருந்
தீதெலா மொருவி நீதியே புரிய
நீதிநெறி விளக்கமென் றேதமில் பனுவலு
மியற்றின னில்லறந் தியக்குறு மென்ன
விளமையிற் றுறந்து வளமைசேர் தருமை
மாசிலா மணியெனுந் தேசுறு குரவன்
பதமலர் பழிச்சுமற் புதகுண குமர
குருபர னெனும்பெயர் மருவிய முனியே.



---

து முற்காலத்தது ; இயற்றினோர்பெயர் காணப்படவில்

# அட்டவணை.



காசியில்மடங்கட் கேதாரீசரருளால் உபயகருடன்வட்டிட் எல்லைவரையில்நபாபுமடங்கட்டி
குமாரசாமிமட மெனப்பெயரும்மோஹரும் பர்வானாவு மளித்து. தத்தஞ்செய்தது.

சுவாமிகளைத் துதித்தார்கள். பொறாமை யதிகரித்துள்ள துருக்கர்களோ தங்கள்கருத்து முற்றாமையால் முகம்புலர்ந்து, தலைகவிழ்ந்து நிற்க; சுவாமிகள் யாதொரு சலனமுமின்றி அரசனுடைய வேண்டுகோளின்படியே அந்த இரும்பை, எறிந்துவிட்டுச் சபையிலே வீற்றிருந்தருளினார்.

பின்னொருநாள் அத்துருக்கர்கள் அரசனையடைந்து, "துறவிகளுக்குச் சாதிபேதங்கூடாது" என்று சாஸ்திரங்களிலே சொல்லப்பட்டிருத்தலால், துறவியாகிய குமரகுருபரசுவாமிகளுக்கு நமது கிருகத்திலே போசனஞ்செய்விக்கவேண்டும்." எனக்கூறக்கேட்டு, அரசனும் அதற்குடன்பட்டவனாய்ச் சுவாமிகளுக்கு விண்ணப்பஞ்செய்ய; அதற்குமிசைந்து, தமது வேலைக்காரனொருவனை ஒருதட்டிலே சில செவ்வரத்தம்பூவைவைத்து ஒரு வெள்ளைப்பரிவட்டத்தாலே மறைத்துக்கொண்டுவரும்படி நியமித்துவிட்டு, தாம் முற்சென்று, அங்கே தமக்காகப் படைக்கப்பட்டிருந்த மாமிசங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியேவினாவி, "பன்றிமாமிசம் ஒன்றுமாத்திரம் தவறியதுபோலும்; ஆனால் அது என்னிடத்திலிருக்கின்றது." என்றுசொல்லி, வேலைக்காரன் கொண்டுவந்த தட்டைவாங்கும்படி கைநீட்ட; அம்மிருகத்தின்பெயரையுஞ்சொல்லாத துருக்கர்களோடு அரசனும் வெட்கப்பட்டு அதனைத்தடுத்தான். சுவாமிகள் அரசனைத் தம்வயமாக்கவிரும்பி, அங்கேபடைத்துள்ள மாமிசங்களனைத்தையும் உற்றுநோக்க; அவைகளெல்லாம், காய், கனி, முதலிய பல அரிய தின்பண்டங்களாயின. அதுகண்ட அரசன் சுவாமிகளை வணங்கிக் குறையிரந்து, "இனி அடியேன் செய்யவேண்டிய பணியாது?" என்று வினவ; சுவாமிகள், "உமது ஆளுகையிலுள்ள இக்காசிமாநகரத்தில் நாம் எண்ணிவந்த தருமத்தை நடாத்துதற்கு ஓரிடம்வேண்டும்." என்றார். அரசனும் "தேவரீருக்குப் பிரீதியான இடந்தருவேன்." என்று உடன்பட்டான். அன்றிரவு நித்திரைசெய்

ய்தனர். அப்போது ஞானாசாரியர் பிரிவாற்றாமையால் வருந்தும் மாணிகளை நோக்கி,

"காட்டிருந் தாலு மலையிருந் தாலுங் கருதரிய
நாட்டிருந் தாலு நமக்கென்ன காணல்ல தோர்கமலை
வீட்டிருந் தாண்டருள் ஞானப்ர காசன் விரைமலர்த்தாள்
கேட்டிருந் தாலும் பிறவா நெறிவந்து கிட்டிடுமே."

ன்னும் கட்டளைக்கலித்துறையை யருளிச்செய்து, சொக்கலிங்க ர்த்தியையும் மீனாட்சியம்மையையும் கிரியாபூசையாக எழுந்தரு ப்பண்ணிக்கொடுத்து, திருவருள்பாலித்து விடையளித்தனர். சுவ கள் அவ்வாக்ஞையைச் சிரமேற்கொண்டு வணங்கி விடைபெற்று ங்கே எழுந்தருளிவிளங்கும் சொக்கலிங்கமூர்த்தியின் சந்நிதி ப நமஸ்கரித்தெழுந்து, அங்கு நின்று நீங்கி, காசியையடைந்து, அங் பதருமங்களை யியற்றிக்கொண்டு சிவோதுபூதிக்கெல்வராய்க் லம் வீற்றிருந்து, வைகாசிமாசத்திலே, சுக்கிலபக்ஷ திருதிகை லே, சிவபெருமான் திருவடிநீழலிற் கலந்தருளினார்.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

குமாரகுருபரசுவாமிகள் திருவடி வாழ்க

லிந்திரசா லம்புரிவோன் யாவரையுந் தான்மயக்குந்
தந்திரத்திற் சாராது சார்வதுபோன்—முந்துங்
கருவின்றி நின்ற கருவா யருளே
யுருவின்றி நின்ற வுருவாய்த்—திரிகரண
மாகவரு மிச்சை யறிவியற்ற லாலிலய
போகவதி காரப் பொருளாகி—யேகத்
துருவு மருவு முருவருவு மாகிப்
வ வடிவம் பலவா—யிருண்மலத்துஞ்
ாகமுறும் பல்லுயிர்க்கு முத்தியளித் தற்குமல
முற வேகலைக்கண் பாலித்துத்—தேகமுறத்
ந்த வருவுருவஞ் சார்ந்தவிந்து மோகினிமான்
பந்த முறவே பிணிப்பித்து—மந்த்ரமுத
லாறத்து வாவுமண்டத் தார்ந்தவத்து வாக்களுமுற்
கூறந் தநுஞ்சிமிழ்ப்பிற் கூட்டுவித்து—மாறிவரு
மீரெண்டு தோற்றத் தெழுபிறப்புள் யோனியெண்பா
னாயவந்த நான்குநூ றாயிரத்துட்—டீர்வரிய
கன்மத்துக் கீடாய்க் கறங்குஞ் சகடமும்போற்
சென்மித் துழலத் திரோதித்து—வெந்நிரய
சொர்க்காதி போகமெல்லாந் துய்ப்பித்துப் பக்குவத்தா
னற்கா ரணஞ்சிறிது நண்ணுதலுந்—தர்க்கமிடுந்
தொன்னூற் பரசமயந் தோறு மதுவதுவே
நன்னூ லெனத்தெரிந்து நாட்டுவித்து—முன்னூல்

விரதமுத லாய பலமெய்த்தவத்தி னுண்மைச்
சரியைகிரி யாயோகஞ் சார்வித்—தருள்பெருகு
சாலோக சாமீப சாரூப மும்புசிப்பித்
தாலோகந் தன்னை யகற்றுவித்து—நால்வகையாஞ்
சத்திநி பாதந் தருதற் கிருவினையு
மொத்துவருங் கால முளவாகிப்—பெத்த
மலபரி பாகம் வருமளவிற் பன்னா
ளலமருதல் கண்ணுற் றருளி—யுலவா
தறிவுக் கறிவாகி யவ்வறிவுக் கெட்டா
நெறியிற் செறிந்தநிலை நீங்கிப்—பிறியாக்
கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென் றோர்திருப்பேர் கொண்டு—திருநோக்கா
லூழ்வினையைப் போக்கி யுடலறுபத் தெட்டுநில
யேழுமத்து வாக்க ளிருமூன்றும்—பாழாக
வாணவ மான படலங் கிழித்தறிவிற்
காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டிப்—பூணு
மடிஞானத் தாற்பொருளு மான்மாவுங் காட்டிக்
கடியார் புவனமுற் றுங் காட்டி—முடியாது
தேக்குபர மானந்தத் தெள்ளமுத மாகியெங்கு
நீக்கமற நின்றநிலைகாட்டிப்—போக்கும்
வரவு நினைப்பு மறப்பும் பகலு
மிரவுங் கடந்துலவா வின்ப—மருவுவித்துக்

கன்மமலத் தார்க்குமலர்க் கண்மூன்றுந் தாழ்சடையும்
வன்புலியூ மானும் மழுவுடன் மால்விடைமேன்—மின்னிடத்துப்
பூத்த பவளப் பொருப்பொன்று வெள்ளிவெற்பில்
வாய்த்ததனைய தெய்வ வடிவாகி—மூத்த
கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள்செய் துண்ணின்
றொருமலத்தார்க் கின்ப முதவிப்—பெருகியெழு
மூன்றவத்தை யுங்கழற்றி முத்தருட னேயிருத்தி
யான்றபர முத்தி யடைவித்துத்—தோன்றவரும்
யானெனதென் றற்ற விடமே திருவடியா
மோனபரா னந்த முடியாக—ஞானந்
திருவுருவா விச்சை செயலறிவு கண்ணா
வருளதுவே செங்கை யலரா—விருநிலமே
சந்நிதியா நிற்குந் தனிச்சுடரே யெவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே—மின்னுருவந்
தோய்ந்தநவ ரத்நச் சுடர்மணியாற் செய்தபைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியுந்—தேய்ந்தபிறைத்
துண்டமிரு மூன்றுநிரை தோன்றப் பதித்தனைய
புண்டரம் பூத்தநுதற் பொட்டழகும்—விண்ட
பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்
கருள்பொழியுங் கண்மலரீ ராறும்—பரிதி
பலவு மெழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவு மகரக் குழையும்—நிலவுமிழும்

புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயுஞ்
சென்மவிடாய் தீர்க்குந் திருமொழியும்—வின்மலிதோள்
வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூரனைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்துந் திருமுகமு—மெவ்வுயிர்க்கு
மூழ்வினையை மாற்றி யுலவாத பேரின்ப
வாழ்வுதருஞ் செய்ய மலர்முகமுஞ்—சூழ்வோர்
வடிக்கும் பழமறைக ளாகமங்க ளியாவு
முடிக்குங் கமல முகமும்—விடுத்தகலாப்
பாச விருடுரந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமு—நேசமுடன்
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கு
மோக மளிக்கு முகமதியுந்—தாகமுடன்
வந்தடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவுந்
தந்தருளுந் தெய்வமுகத் தாமரையுங்—கொந்தவிழ்ந்த
வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டு—மாரமுதந்
தேவர்க் குதவுந் திருக்கரமுஞ் சூர்மகளிர்
மேவக் குழைந்தணைந்த மென்கரமு—மோவாது
மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
சேர வணிந்த திருக்கரமு—மார்பகத்தில்
வைத்த கரதலமும் வாமமருங் கிற்கரமு
முப்த்த குறங்கி லொருகரமு—மொய்த்த

சிறுதுடிசேர் கையுமணி சேர்ந்ததடங் கையுங்
கறுவுசம ரங்குசஞ்சேர் கையும்—தெறுபோ
ரதிர்கே டகஞ்சுழற்று மங்கைத் தலமுங்
கதிர்வாள் விதிர்க்குங் கரமு—முதிரா த
கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் வேட்டணைந்த
வம்பொன் மணிப்பூ ணகன்மார்பும்—பைம்பொற்
புரிநூலுங் கண்டிகையும் பூம்பட் டுடையு
மரைஞாணுங் கச்சை யழகுந்—திருவரையு
நாதக் கழலு நகுமணிப்பொற் கிண்கிணியும்
பாதத் தணிந்த பரிபுரமுஞ்—சோதி
யிளம்பரிதி நூறா யிரங்கோடி போல
வளந்தருதெய் வீக வடிவு—முளந்தனிற்கண்
டாதரிப்போர்க் காருயிரா யன்பரகத் தாமரையின்
மீதிருக்குந் தெய்வ விளக்கொளியே—யோதியவைந்
தோங்காரத் துள்ளொளிக்கு முள்ளொளியா யைந்தொழிற்கு
நீங்காத பேருருவாய் நின்றோனே—தாங்கரிய
மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப்—பந்தனையா
லொத்த புவனத் துருவே யுரோமமாத்
தத்துவங்க ளேசத்த தாதுவா—வைத்த
கலையே யவயவமாக் காட்டுமத்து வாவி
னிலையே வடிவமா நின்றோய்—பலகோடி

## கந்தர்கலிவெண்பா.

யண்ட முருவாகி யங்கஞ் சராசரமாய்க்
கண்டசத்தி மூன்றுட் காரணமாய்த்—தொண்டுபடு
மாவிப் புலனுக் கறிவளிப்ப வைந்தொழிலு
மேவித் தனிநடத்து மெங்கோவே—மேவ
வருமட்ட மூர்த்தமாம் வாழ்வேமெய்ஞ் ஞானந்
தருமட்ட யோகத் தவமே—பருவத்
தகலாத பேரன் படைந்தோ ரகத்துட்
புகலாகு மின்பப் பொருப்புஞ்—சுகலளிதப்
பேரின்ப வெள்ளப் பெருக்காறு மீதானந்
தேரின்ப நல்குந் திருநாடும்—பாரின்ப
மெல்லாங் கடந்த விருநிலத்துட் போக்குவர
வல்லா துயர்ந்த வணிநகருந்—தொல்லுலகி
லீறு முதலுமகன் றெங்குநிறைந் தைந்தெழுத்தைக்
கூறி நடாத்துங் குரகதமு—மேறுமதந்
தோய்ந்து களித்தோர் துதிக்கையினாற் பஞ்சமலங்
காய்ந்தசிவ ஞானக் கடாக்களிறும்—வாய்ந்தசிவ
பூரணத்துட் பூரணமாம் போதம் புதுமலரா
நாரகத்துட் கட்டு நறுந்தொடையுங்—காரணத்து
ளைந்தொழிலு மோவா தளித்துயர்ந்த வான்கொடியும்
வந்தநவ நாத மணிமுரசுஞ்—சந்ததமு
நீக்கமின்றி யாடி நிழலசைப்பான் போற்புவன
மாக்கி யசைத்தருளு மாணையுந்—தேக்கமழ்ந்து

வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே—தேசுதிகழ்
பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி—யாங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்றாது விண்ணோர் முறைக்கிரங்கி
யைந்து முகத்தோ டதோமுகமுந்—தந்து
திருமுகங்க ளாறாகிச் செந்தழற்க ணாறு
மொருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப—விரிபுவன
மெங்கும் பரக்க விமையோர்கண் டஞ்சுதலும்
பொங்கு தழற்பிழம்பைப் பொற்கரத்தா—லங்க
ணெடுத்தமைத்து வாயுவைக்கொண் டேகுதியென் றெம்மா[ன்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுபோ—யடுத்ததொரு
பூதத் தலைவகொடு போதியெனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப்—போதொருசற்
றன்னவளுங் கொண்டமைதற் காற்றாள் சரவணத்திற்
சென்னியிற்கொண் டுய்ப்பத் திருவுருவாய்—முன்ன
ரறுமீன் முலையுண் டழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன்—குறுமுறுவற்
கன்னியொடுஞ் சென்றவட்குக் காதலுருக்காட்டுதலு
மன்னவள்கண் டவ்வுருவ மாறினையுந்—தன்னிரண்டு
கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறு மொன்றாக மேவுவித்துச்—செய்ய

முகத்தி லணைத்துச்சி மோந்து முலைப்பா
லகத்துண் மகிழ்பூக் களித்துச்—சகத்தளந்த
வெள்ளை விடைமேல் விமலன் கரத்திலளித்
துள்ள முவப்ப வுயர்ந்தோனே—கிள்ளைமொழி
மங்கை சிலம்பின் மணியொன் பதிற்றோன் றுந்
துங்க மடவார் துயர்தீர்ந்து—தங்கள்
விருப்பா லளித்தநவ வீரருக்குண் முன்னோன்
மருப்பாயுந் தார்வீர வாகு—நெருப்பிலுதித்
தங்கட் புவன மனைத்து மழித்துலவுஞ்
செங்கட் கடாவதனைச் சென்றுகொணர்ந்—தெங்கோன்
விடுக்குதியென் றுய்ப்பவதன் மீதிவர்ந்தெண் டிக்கு
நடத்தி விளையாடு நாதா—படைப்போ
னகந்தை யுரைப்பமறை யாதி யெழுத்தொன்
றுகந்த பிரணவத்தி னுண்மை—புகன்றிலையாற்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ங னென்றுமுனங்
குட்டிச் சிறையிருத்துங் கோமானே—மட்டவிழும்
பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரமமொழிந்தோனே—கொன்னெடுவேற்
றாரகனு மாயத் தடங்கிரியுந் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே—சீரலைவாய்த்
தெள்ளு திரைகொழிக்குஞ் செந்தூரிற் போய்க்கருணை
வெள்ள மெனத்தவிசின் வீற்றிருந்து—வெள்ளைக்

கயேந்திரனுக் கஞ்ச லளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்திற் புக்கிமையோர் வாழச் — சயேந்திரனாஞ்
சூரனைச்சோ தித்துவரு கென்றுதடந் தோள்விசய
வீரனைத்தூ தாக விடுத்தோனே — காரவுணன்
வானவரை விட்டு வணங்காமை யாற்கொடிய
தானவர்க ளாற்படையுஞ் சங்கரித்துப் — பானு
பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய் — சகமுடுத்த
வாரி தனிற்புதிய மாவாயக் கிடந்தநெடுஞ்
சூருடலங் கீண்ட சுடர்வேலோய் — போரவுண
னங்கமிரு கூறா யடன்மயிலுஞ் சேவலுமாய்த்
துங்கமுட னார்த்தெழுந்து தோன்றுதலு — மங்கவற்றுட்
சீறுமர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
வேறி நடாத்து மிளையோனே — மாறிவரு
சேவற் பகையைத் திறல்சேர் பதாகையென
மேவத் தனித்துயர்த்த மேலோனே — மூவர்
குறைமுடித்து விண்ணங் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத்தாட் கொண்டளித்த தேவே — மறைமுடிவாஞ்
சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவுந்
தெய்வக் களிற்றை மணஞ்செய்தோனே — பொய்விரவு
காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப் — பூமருவு

கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போ
லேனற் புனங்காத் தினிதிருந்து—மேன்மைபெறத்
தெள்ளித் தினைமாவுந் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே—யுள்ளமுவந்
தாறு திருப்பதிகண் டாறெழுத்து மன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே—நாறுமலர்க்
கந்திப் பொதும்பரெழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திற் பதிபுரக்குஞ் செவ்வேளே—சந்ததமும்
பல்கோடி சன்மப் பகையு மவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி
பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பிசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையுந்—தீதகலா
வெவ்விடமுந் துட்ட மிருகமுத லாமெவையு
மெவ்விடம்வந் தெம்மை யெதிர்ந்தாலு—மவ்விடத்திற்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளு
மச்ச மகற்று மயில்வேலுங்—கச்சைத்
திருவரையுஞ் சீறடியுஞ் செங்கையு மீரா
றருள்விழியு மாமுகங்க ளாறும்—விரிகிரணஞ்
சிந்தப் புனைந்த திருமுடிக ளோராறு
மெந்தத் திசையு மெதிர்தோன்ற—வந்திடுக்க
ணெல்லாம் பொடிபடுத்தி யெவ்வரமுந் தந்துபுரந்
தல்லாச மாக வுளத்திருந்து—பல்விதமா

மாசுமுத னூற்கலியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையு—மோசை
யெழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்—தொழுக்கமுட
னிம்மைப் பிறப்பி லிருவா தனையகற்றி
மும்மைப் பெருமலங்கண் மோசித்துத்—தம்மைவிடுத்
தாயும் பழைய வடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்
டடியேற்கு முன்னின் றருள்.

(இ - ள்.) பூமேவு - அழகுபொருந்திய, செங்கமலப்புத்தே ளும் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவனும், தேற அரிய - யாவராலும் தெளிந்தறிதலருமையாகிய, பாமேவு - சந்தோ ரூபமாகிய. தெய்வம் - தெய்வத்தன்மையமைந்த, பழமறையும் - அநாதியாகிய வேதங்களும், தே மேவும் - அழகு பொருந்திய, நாத மும் - நாததத்துவமும், நாதாந்த முடிவும் - நாதாந்தத்தின் முடி வும், நவைதீர்ந்த போதமும் - குற்றமற்ற அறிவும், காணாத போத மாய் - அறியாத அறிவுருவாகி, ஆதி நடு அந்தம் கடந்த - முதல் நடு இறுதிகளைக்கடந்த, நித்தியானந்தபோதமாய்-அழிவற்ற ஆனந்த உருவான அறிவாகி, பந்தம் தணந்த - பந்தத்தை நீங்கின, பரஞ்சுட ராய் - பரஞ்சோதியாகி, வந்த - உண்டான, குறியும் குணமும் ஒரு கோலமும் அற்று - குறியும் குணமும் ஒப்பற்ற உருவும் ஒழிந்து, எங்கும் செறியும் - எவ்விடத்தும் வியாபித்திருக்கின்ற, பரமசிவ மாய் - பரமசிவமாகி, அறிவுக்கு அனாதியாய் - அறிவுக்கு முற்பட்ட தாகி, ஐந்தொழிற்கும் அப்புறமாய் - பஞ்சகிருத்தியங்கட்கும் அப்

பாற்பட்டதாகி, மனாதிகளுக்கு எட்டா வடிவாய் - மனமுதலியவற்றிற்கு எட்டாத உருவமாகி, தனது அருளின் பஞ்சவிதரூப பரசுகமாய் - தனது அருளினால் ஐவகையாகிய உருவத்தையுடைய மேலான இன்பமாகி, எவ்வுயிர்க்கும் தஞ்சமென நிற்கும் தனிப்பொருளாய் - எல்லாவுயிர்களுக்கும் ஆதாரமாக நிற்கின்ற ஒப்பற்ற பொருளாகி, எஞ்சாத பூரணமாய் - குறையாத நிறையுருவாகி, நித்தமாய்- அழியாப்பொருளாகி, போக்கும் வரவும் புணர்வுங் காரணமும் இல்லாக்கதியாகி - போதலும் வருதலும் நிலைத்திருத்தலும் ஏதுவும் இல்லாதகதியாகி, தாரணியில் - பூமியில், இந்திரசாலம் புரிவோன்- இந்திரசாலஞ்செய்பவன், யாவரையும் - எல்லாரையும், தான் மயக்கும் - தான் மயக்குகின்ற, தந்திரத்தில் - உபாயத்தில், சாராது சார்வதுபோல் - பொருந்தாது பொருந்துவதுபோல, முந்தும் கரு இன்றி நின்ற கருவாய் - (தனக்கு) முற்பட்ட பிறப்பிடமின்றி நின்ற பிறப்பிடமாகி, உரு இன்றி நின்ற அருளே உருவாய் - வடிவின்றி நின்ற அருள்வடிவாகி, திரிகரணமாக வரும் - முக்கரணங்கள் ஏதுவாக உண்டாகின்ற, இச்சை அறிவு இயற்றலால் - இச்சை அறிவு தொழில் என்பவற்றால், இலயம் போகம் அதிகாரப்பொருளாகி - ஒடுக்கம் அனுபவம் அதிகாரம் என்னும் முப்பொருளாகி, ஏகத்து உருவம் அருவம் உருவருவும் ஆகி - ஒன்றான உருவமும் அருவமும் உருவருவமும் ஆகி, பருவவடிவம் பலவாய்-பக்குவவுருவங்கள் பலவுமாகி, இருள் மலத்துள் மோகமுறும் பல்லுயிர்க்கும் - அந்தகாரரூபமாகிய மலங்களுள்ளே மோகத்தையடைகின்ற பல ஜீவர்களுக்கும், முத்தி அளித்தற்கு - முத்தியைக்கொடுக்கும்பொருட்டு, மலபாகம் உற - மலபரிபாகமுண்டாகும்படி, கடைக்கண் பாலித்து - அவர்களைக் கடைக்கண்ணால் நோக்கி, தேகம் உற - சரீரம் எடுக்க, தந்த- கொடுத்த, அருவுருவம் சார்ந்த - அருவுருவங்களைப் பற்றின, விந்து மோகினி மான் - விந்து மோகினி மான் என்கின்ற தத்துவங்க

ளோடு, பெந்தமுற பிணிப்பித்து - கட்டுண்ணக் கட்டுவித்து, மந்த்ர முதல் ஆறு அத்துவாவும் - மந்திரமுதலாகிய ஆறு அத்துவாக்களை யும், அண்டத்து ஆர்ந்த அத்துவாக்களும் - உலகத்திலுள்ள வழி களையும், முன் கூறத்தகும் சிமிழ்ப்பில் கூட்டுவித்து - முன்னே சொல்லத்தகுந்த கட்டில் சேர்வித்து, மாறி வரும் - மாறிமாறி வரு கின்ற, ஈர் இரண்டு தோற்றத்து - நால்வகைத் தோற்றத்தினை யுடைய, எழு பிறப்புள் - எழுவகைப் பிறப்பினுள், எண்பான் ஆர வந்த நான்கு நூறாயிரத்து யோனியுள் - எண்பத்துநான்கு லட்சம் ஜீவராசிகளுள், தீர்வு அரிய கன்மத்துக்கு ஈடாய் - நீங்குதற்கரிய கன்மங்களுக்கு ஏற்க, கறங்கும் சகடமும்போல் - காற்றாடியும் சக டக்காலும்போல, சென்மித்து உழல திரோதித்து - பிறந்து உழ லும்படி மறைத்து, வெம் நிரய சொர்க்காதிபோகம் எல்லாம் துய்ப் பித்து - வெவ்விய நரக சுவர்க்கமுதலிய போகங்கள் எல்லாவற்றை யும் நுகர்வித்து, பக்குவத்தால் நற்காரணம் சிறிது நண்ணுதலும் - பருவத்தினால் நன்மையாகிய காரணம் சிறிது உண்டாதலும், தர்க் கம் இடும் தொல்நூல் - தர்க்கஞ்செய்தற்குரிய பழைய நூல்களை யுடைய, பரசமயந்தோறும் - இதர சமயங்கடோறும், அது அது வே - அவ்வச் சமயநூலையே, நல்நூல் என - நல்ல நூலென்று கைக்கொள்ளும்வண்ணம், தெரிந்து நாட்டுவித்து - ஆராய்ந்து நிலை பெறுவித்து, முன் நூல் - முதனூல்களுள் சொல்லப்பட்ட, விரதம முதலாய - விரதம் முதலான, பல மெய் தவத்தின் - பல மெய்த் தவத்தினது, உண்மை - உண்மையோடு, சரியை கிரியா யோகம் சார்வித்து - சரியை கிரியை யோகங்களை யடைவித்து, (அவை வாயிலாக) அருள் பெருகு - திருவருள் பெருகாநின்ற, சாலோக சாமீப சாரூபமும் புசிப்பித்து - சாலோக சாமீப சாரூபங்களையும் நுகர்வித்து, ஆலோகம் தன்னை அகற்றுவித்து - (அவற்றிலுள்ள) நோக்கத்தை நீக்கி, நால்வகையாம் - நான்குவகையாகிய, சத்தினி

பாதம் தருதற்கு - சத்திநிபாதத்தைக் கொடுக்கும்பொருட்டு, இருவினையும் ஒத்துவரும் காலம் உளவாகி - இருவினைகளும் ஒத்துவரும் காலம் உள்ளனவாகி, பெத்த மலபரி பாகம் வரும் அளவில் - பந்த மலத்தின் பரிபாகம் வருஞ்சமயத்தில், பல் நாள் அலமருதல்-நெடுங் காலம் மலபந்தத்தில் பிணிப்புண்டு உழலுதலை, கண்ணுற்றருளி - நோக்கியருளி, உலவாது - கெடாமல், அறிவுக்கு அறிவாகி - அறிவினுக்கறிவாகி, அ அறிவுக்கு எட்டா நெறியின் செறிந்த நிலைநீங்கி - அந்த அறிவினுக்கும் எட்டாத நெறியில் பொருந்திய நிலையினின்றும் நீங்கி, பிறியா - வேறுபடாத, கருணை திருவுருவாய் - அருளே திருமேனியாகக்கொண்டு, காசினிக்கு தோன்றி - நிலவுலகத்தி லவதரித்து, குருபரன் என்ற ஓர் திருப்பேர்கொண்டு - குருபரர் என்று சொல்லப்பட்ட ஒப்பற்ற திருநாமத்தைக்கொண்டு, திருநோக்கால் - திருநோக்கத்தால், ஊழ்வினையைப் போக்கி - பழவினையை நீக்கி, உடல் அறுபத்தெட்டும் - அறுபத்தெட்டுடலும், நிலம் ஏழும் - ஏழ் நிலங்களும், அத்துவாக்கள் இருமூன்றும் - ஆறு அத்துவாக்களும், பாழ் ஆக - அற்றொழிய, ஆணவம் ஆன படலம் கிழித்து - ஆணவமாகிய படலத்தை அறுத்து, அறிவின் காண் அரிய - அறிவினால் காண்டற்கரிய, மெய் ஞானக்கண் காட்டி - மெய்ஞ்ஞானக் கண்ணைக் காட்டி, பூணும் அடி ஞானத்தால் - பொருந்தின பதிஞானத்தால், பொருளும் ஆன்மாவும் காட்டி - பதிப்பொருளையும் பசுப் பொருளையும் காட்டி, சடி ஆர் புவனம் முற்றும் காட்டி - மிகுதியாகிய பாசப்பொருள் முழுமையும் காட்டி, முடியாது - அழியாமல், தேக்கு-எங்கும் நிறைந்த, பரமானந்தம் தெள் அமுதமாகி-பேரின்பமாகிய தெளிந்த அமுதமயமாகி, எங்கும் நீக்கம் அற நின்ற நிலை காட்டி - எவ்விடத்தும் நீங்குதலின்றி நின்ற நிலையையுங் காட்டி, போக்கும் வரவும் நினைப்பும் மறப்பும் பகலும் இரவும் கடந்து உலவா இன்பம் மருவித்து - போதலும் வருதலும் நினைத்தலும் மறத்

தலும் பகலும் இரவும் ஆகிய இவற்றைக்கடந்து அழியாத இன்பத்தை அடைவித்து, கன்மமலத்தார்க்கு - கன்மமலமுடையவர்க்கு, மலர்க்கண் மூன்றும் - மலர்போன்ற கண்கள் மூன்றும், தாழ் சடையும் - நீண்ட சடையும், வல் மழுவும் - வலிய மழுப்படையும், மானும் - மான் கன்றும், உடல் மால்விடைமேல் - பகைவரைக் கோபிக்கின்ற மால்விடைமீது, மின் இடத்துப் பூத்த - மின் கொடியை இடதுபக்கத்தில் பொருந்தின, பவளப் பொருப்பு ஒன்று - ஒரு பவளமலையானது, வெள்ளி வெற்பில் - வெள்ளிமலையின்மேல், வாய்த்தனைய - ஊர்ந்துவந்தாற்போன்ற, தெய்வ வடிவாகி - தெய்வ வுருவங்கொண்டு, மூத்த கருமமலக் கட்டறுத்து - முதிர்ந்த கன்மமலக்கட்டைச் சேதித்து, கண் அருள் செய்து - கிருபைக்கண்ணால் நோக்கி, உள் நின்று - உள்ளே நிலைபெற்று, ஒரு மலத்தார்க்கு இன்பம் உதவி - ஒரு மலத்தை யுடையவர்களுக்கு இன்பத்தைத் தந்து, பெருகி எழும் மூன்று அவத்தையும் கழற்றி - பெருகியெழாநின்ற மூன்று அவஸ்தைகளையும் கழலச்செய்து, முத்தருடனே இருத்தி - முத்தரோடு இருக்கும்வண்ணஞ்செய்து, ஆன்ற பர முத்தி அடைவித்து-பெரியமேலான முத்தியை யடையச்செய்து, தோன்றவரும்-காண வருகின்ற, யான் எனது என்ற அற்ற இடமே - யான் எனது என்றுசொல்லப்படுவன அற்றவிடமே, திருவடியா-திருவடியாகவும், மோன பரானந்தம் - மோனநிலையாகிய பேரானந்தமே, முடியாக - திருமுடியாகவும், ஞானம் - ஞானமே, திருவுரு ஆ - திருவுருவாகவும், இச்சை செயல் அறிவு - இச்சையும் கிரியையும் ஞானமுமே, கண் ஆ - கண்களாகவும், அருளதுவே - அருளே, செங்கை அலர், ஆ - செங்கைமலராகவும், இரு நிலமே - பெரிய பூமியே, சந்நிதி ஆ - சந்நிதியாகவும் (கொண்டு), நிற்கும் - நிலைபெற்றிருக்கின்ற, தனி - ஒப்பற்ற, சுடரே - சோதியே, எவ்வுயிர்க்கும்-எல்லாவுயிர்களுள்ளும், பின்னம் அற நின்ற - வேற்றுமையில்லாமல் நின்ற,

பெருமானே - பெருமையுடையோனே,! மின்உருவம்தோய்ந்த - மின்னின் வடிவம்பொருந்திய, நவரத்நம் - நவரத்நங்கள் என்கிற, சுடர்மணியால் - ஒளியுள்ள மணிகளாலே, செய்த - செய்யப்பட்ட, பைம்பொன்வாய்ந்த - பசும்பொன்னாலியன்ற,கிரணம் - ஒளியுள்ள, மணிமுடியும் - அழகியமகுடமும், தேய்ந்தபிறைத்துண்டம்-தேய்ந்த சந்திரகண்டங்கள், இரு - பெரிதாகிய, மூன்று-மூன்றனை, நிரை தோன்றபதித்தனைய - வரிசையாய்த்தோன்றும்படி பதித்தாற்போன்ற, புண்டரம்பூத்த - திரிபுண்டரமிட்ட, நுதல் - நெற்றியின், பொட்டு அழகும் - திலகத்தின் அழகும், விண்ட - மலர்ந்த, பருவ மலர் - பருவகாலத்து மலர்தலையுடைய, பன்னிரண்டு புண்டரிகம் பூத்தாங்கு - பன்னிரண்டு தாமரைமலர்கள் பூத்தாற்போல, அருள் பொழியும் - கருணைபொழிகின்ற, கண்மலர் ஈர் ஆறும் - கண்மலர்கள் பன்னிரண்டும், பரிதிபலவும் எழுந்து - பன்னிரண்டு சூரியர்களும் உதித்து, சுடர்பாலித்தாற்போல - ஒளியைப்பரப்பினாற்போல, குலவும் - விளங்குகின்ற, மகரக்குழையும் - மகரகுண்டலங்களும், நிலஉமிழும் - நிலவைவீசுகின்ற, புன்முறுவல்பூத்து அலர்ந்த- புன்சிரிப்பைக்கொண்டு விரிந்த, பூகுமுதம் செவ்வாயும்-குமுதமலர் போலும் செம்மையாகிய வாயும், சென்மவிடாய்தீர்க்கும் திருமொழியும் - பிறவிவிடாயை நீக்குகின்ற திருவார்த்தையும்,வில்மலி தோள் வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெம்சூரனை தடிந்து தெவ்வர் உயிர்சிந்தும் திருமுகமும் - வில்லேத்தாங்கிய புயத்தையுடைய வெவ்விய அசுரர் துதிக்கின்ற கொடிய சூரபன்மனைக்கொன்று பகைவர் உயிரைவாங்குகின்ற அழகியமுகமும், எவ்வுயிர்க்கும் ஊழ்வினையைமாற்றி உலவாத பேர்இன்ப வாழ்வுதரும் செய்யமலர்முகமும் - எல்லாவுயிர்களுக்கும் பழவினையைநீக்கி அழியாத பேரின்பவாழ்வை யருளிச்செய்கின்ற செந்தாமரை மலர்போன்றமுகமும், சூழ்வோர் வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள் யாவும் முடிக்கும் கமலமுகமும் - ஆராய்வோராகிய வேதியரால் தெளிவிக்கப்படுகின்ற பழமையாகிய

வேதங்களும் ஆகமங்களும் ஆகிய எல்லாவற்றையும் முடித்தக்காட்டுகின்ற தாமரைமலர்போன்றமுகமும், விடுத்து அகலா பாசஇருள்துரந்து பல்கதிரின் சோதிவிடும் வாசமலர்வதனமண்டலமும்-ஆன்மாக்களைவிட்டு நீங்காத பாசவிருளைத்துரத்திப் பலசூரியர்கள்போல ஒளிவிடுகின்ற மணமுள்ள தாமரைமலர்போன்ற திருமுகமண்டலமும், நேசமுடன் போகம்உறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும் மோகம் அளிக்கும் முகமதியும் - அன்புடன் போகத்தை நுகர்கின்ற வள்ளிநாயகிக்கும் தெய்வயானையார்க்கும் மோகத்தைத் தருகின்ற பூரணச்சந்திரன் போன்ற திருமுகமும், தாகமுடன்வந்து அடியில் சேர்ந்தோர் மகிழவரம்பலவும் தந்தருளும் தெய்வமுகத்தாமரையும்-விருப்பத்தோடுவந்து திருவடியைச்சேர்ந்தோர் மனமகிழும்படி பலவரங்களையும் அவர்க்குக்கொடுத்தருளுகின்ற தெய்வீகமாகிய தாமரைமலர்போன்ற திருமுகமும், நொந்து அவிழ்ந்த வெரிக்கடம்பும் விரைக்குரவும் பூத்து அலர்ந்த பாரப்புயசயிலம் பன்னிரண்டும் - கொத்தாய்விரிந்த மணமுள்ள கடப்பமலரும் மணமுள்ள குராமலரும் பூத்தலர்ந்த பருமையாகிய மலைபோன்ற தோள்கள் பன்னிரண்டும், ஆர் அமுதம் தேவர்க்கு உதவும் திருக்கரமும் - அரிய அமிர்தத்தைத் தேவர்க்குக் கொடுத்தருளின திருக்கையும், சூர்மகளிர் மேவக்குழைந்து அணைந்தமென்கரமும் - தெய்வமகளிர் தழுவும்படி குழைந்தணைந்த மெல்லிய திருக்கையும், ஓவாது மாரிபொழிந்த மலர்க்கரமும் - இடையறாமல் மழைபெய்விக்கின்ற தாமரைமலர் போன்ற திருக்கையும், பூந்தொடையல் சேரஅணிந்த திருக்கரமும் - பூமாலைகளை ஒருங்கே அணிந்த திருக்கையும், மார்பகத்தில்வைத்த கரதலமும் - திருமார்பில் அமைத்த திருக்கையும், வாமம் மருங்கில் கரமும் - இடப்பக்கத்திருவரையில் அமைத்ததிருக்கையும், உய்த்தகுறங்கில் "ஒருகரமும் - திருத்தொடையின்மீது அமைத்த ஒரு திருக்கையும், மொய்த்த சிறுதுடி சேர்கையும் - நெருங்கிய சிறியதுடிசேர்ந்த திருக்கையும், மணிசேர்ந்த தடங்கை

யும் - மணிதங்கிய பெரிய திருக்கையும், கறுவு சமர் அங்குசம் சேர் கையும் - (பகைவரைக்) கோபிக்கின்ற போர்க்குரிய அங்குசம்பொருந்திய திருக்கையும், தெறுபோர் அதிர் கேடகம் சுழற்றும் அங்கைத்தலமும் (பகைவரை) வெல்லுகின்ற போரினிடத்து தொனிக்கின்ற கேடகத்தைச் சுழற்றுகின்ற அழகிய கைத்தலமும், கதிர் வாள் விதிர்க்கும் கரமும் - ஒளியையுடைய வாளாயுதத்தை யசைக்கின்ற திருக்கையும், முதிர்ந்த கும்பமுலை செவ்வாய் கொடியிடையார் வேட்டு அணைந்த அம்பொன் மணிபூண் அகல்மார்பும்-முதிர்ந்த குடம்போன்ற தனங்களையும் செவ்வாயையும் கொடியிடையையும் உடைய தெய்வமகளிர் விருப்பி அணைந்த அழகிய பொன்னினாலும் மணியினாலும் இயன்ற திருவாபரணங்களையணிந்த அகன்ற திருமார்பும், பைம்பொன் புரிநூலும் - பைம்பொன்னாலியன்ற முப்புரி நூலும், கண்டிகையும்-திருக்கண்டிகையும், பூம்பட்டு உடையும் - அழகிய பட்டாடையும், அரைஞாணும் - திருவரைநாணும், கச்சை யழகும் - கச்சையின் அழகும், திருவரையும் - திருவிடையும், நாதக் கழலும், ஓசையையுடைய வீரக்கழலும், நகுமணிபொன் கிண்கிணியும் -விளங்குகின்ற மணியினாலும் பொன்னாலும் இயன்ற கிண்கிணியும், பாதத்து அணிந்த பரிபுரமும் - திருவடியில்தரித்த நூபுரமும், சோதி இளம்பரிதி நூறாயிரங்கோடிபோல வளர்ந்தரு தெய்வீக வடிவும் - ஒளியையுடைய நூறாயிரங் கோடிபால சூரியர்கள்போல ஒளிவீசுகின்ற தெய்விகமான திருவுருவமும் (ஆகிய இவற்றை), உள்ளம் தன்னில் கண்டு ஆதரிப்போர்க்கு-மனத்தினால் நோக்கி விரும்புவோர்க்கு, ஆர்உயிர் ஆய் - அரியவுயிராகி, அன்பர் அகத்தாமரையின் மீது இருக்கும் - அன்பரது மனக்கமலத்தின்மீது வீற்றிருக்கின்ற, தெய்வவிளக் கொளியே - தெய்விகமான விளக்கொளியே, ஓதிய- அறிஞரால் ஓதப்பட்ட, ஐந்து ஓங்காரத்து - ஐந்தெழுத்துருவாகிய ஓங்காரத்தின், உள் ஒளிக்கும் - உள்ளொளிக்கும், உள் ஒளியாய் - உள்ளொளியாகி, ஐந்தொழிற்கும் - பஞ்சகிருத்தியங்களுக்கும், நீங்

காந்த - வேறுபடாத, பேர் உரு ஆய்நின்றோனே - பேருருவாகி நின்றவனே, தாங்கு அரிய மந்திரமே சோரியா - தாங்குதலருமையாகிய மந்திரமே உதிரமாகவும், வான்பதமே மாமுடியா-மேலாகியபதமே பெரிய முடியாகவும், தொர்தம் உறம்வன்னமே தொக்குஆக - தொடர்புள்ளவன்னமேதுவக்காகவும், பந்தனையால் ஒத்தபுவனத்து உருவே உரோமமா - பந்தத்தால் ஒத்தபுவனத்துருவே உரோமமாகவும், தத்துவங்களே சத்ததாது ஆ-தத்துவங்களே சத்ததாதுக்களாகவும், வைத்தகலையே அவயவமா - அமைத்தகலையே உறுப்புக்களாகவும், காட்டும் - காட்டுகின்ற, அத்துவாவின் நிலையே வடிவமா - அத்துவாவின் நிலையே உருவமாகவும், நின்றோய் - நின்றோனே, பலகோடி அண்டம்உருவு ஆகி - பலகோடியண்டங்களும் உருவாயும், சராசரம் அங்கமாய் - சராசரப் பொருள்கள் உறுப்புக்களாயும், கண்டசத்திமூன்று - காணப்பட்ட, சத்திமூன்றும், உள்கரணமாய் - அகக்கரணங்களாயும், தொண்டுபடும் - அடிமைப்படுகின்ற, ஆவிப்புலனுக்கு-உயிர்ப்புலனுக்கு, அறிவு அளிப்ப - அறிவைக்கொடுக்க, ஐந்தொழிலும் ஏவி - பஞ்சகிருத்தியங்களையும் ஏவி, தனிநடத்தும் - ஒப்பற நடத்துகின்ற, எம்கோவே-எம்மிறைவனே, மேவவரும் அட்டமூர்த்தம் ஆம்வாழ்வே - பொருந்தவருகின்ற அட்டமூர்த்தமாகிய செல்வமே, மெய்ஞானம் தரும் - மெய்ஞ்ஞானத்தைத் தந்தருளுகின்ற, அட்டயோகத்தவமே - அட்டாங்கயோகத் தவப்பயனே, பக்குவத்து அகலாத - பக்குவத்தினின்று நீங்காத, பேர்அன்பு அடைந்தோர் அகத்துள் - பேரன்பையடைந்தவர்கள் மனத்தில், புகல்ஆகும் - புகுதற்குரிய, இன்பப்பொருப்பும் - ஆனந்தமலையும், சுகலளிதப் பேரின்பவெள்ளப் பெருக்காறும் - சுகவெழிலமைந்த பேரானந்த வெள்ளப்பெருக்காகிய நதியும், மீதானம்தேர் இன்பம் நல்கும் திருநாடும் - மேலிடத்தாரும் ஆராய்தற்குரிய இன்பத்தைத் தருகின்ற திருநாடும், பார்இன்பம் எல்லாம் கடந்த இருநிலத்துள் - உலக இன்பங்களெல்லாவற்றையுங் கடந்த

பெரிய நிலத்தில், போக்குவரவு அல்லாது உயர்ந்த அணிநகரும் - போக்குவரவுகளற்றுயர்ந்த அழகியநகரும், தொல் உலகில் - பழமையாகிய உலகத்தில், ஈறும்முதலும் அகன்று, முடிவும்முதலும் நீங்கி, எங்கும்நிறைந்து - எல்லாவிடத்தும் வியாபித்து, ஐந்து எழுத்தைக் கூறி நடாத்தும் குரகதமும் - ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உச்சரித்துச் செலுத்துகின்ற குதிரையும், ஏறுமதம்தோய்ந்து - அதிகரித்த மதத்தைப்பொருந்தி, களித்து - களிப்படைந்து, ஓர் துதிக்கையினால் - ஒப்பற்ற துதிக்கையால், பஞ்சமலம் காய்ந்த - பஞ்சமலங்களையும் கொன்ற; சிவஞானக் கடாக்களிறும் - சிவஞானமென்னும் ஆண் யானையும், வாய்ந்த சிவபூரணத்துள் பூரணம்ஆம் - பொருந்திய சிவபூரணத்துள் நிறைவாகிய, போதம் - ஞானம், புதுமலரா - புதிய மலராகக்கொண்டு, நாரகத்துள் கட்டும் - அன்புள்ள மனநாரினால் கட்டப்பட்டு, நறுந்தொடையும் - நறுமணமுள்ள மாலையும், காரணத்துள் - காரணங்களுக்குள்ளே; ஐந்தொழிலும்-பஞ்சகிருத்தியங்களையும், ஓவாது அளித்து - நிலையறாது தந்து, உயர்ந்த - மேலான, ஆன்கொடியும் - இடபக்கொடியும், வந்த நவநாத மணிமுரசும்-உண்டான நவவித நாதமாகிய அழகிய முரசமும், சந்ததமும்-சதாகாலமும், நீக்கமின்றி - நீங்குதல் இல்லாமல், ஆடிநிழல் அசைப்பான் போல் - கண்ணாடியில் தன்னிழலையழைத்துப் பார்ப்பவன்போல, புவனம் ஆக்கி - எல்லா வுலகங்களையும் சிருஷ்டித்து, அசைத்தருளும் ஆணையும் - (அவற்றை) அசைத்தருளுகின்ற திருவாணையும், (ஆகிய இவற்றை), தேக்கமழ்ந்து வீசும் பனுவல்-அழகு பரிமளித்து வீசுகின்ற நூல்களையுடைய, விபுதர் - அறிஞர், தனித்தனியே பேசும் - தனித்தனியாய்ச் சொல்லுகின்ற, தசாங்கமெனப் பெற்றோனே-தசாங்கமாகப் பெற்றவனே, தேசுதிகழ்பூம் கைலைவெற்பில்-ஒளிவிளங்குகின்ற அழகிய கைலைமலையில், புனை மலர்பூ கோதை - அலங்கரிக்கப்பட்ட அழகிய பூமாலையணிந்தவளாகிய உமாதேவி, இடப்பாங்கு உறையும் - இடதுபாகத்தில் தங்கப்பெற்ற, முக்கண்

பரஞ்சோதி-மூன்று கண்களையுடைய பரஞ்சோதியாகிய சிவபெருமான், ஆங்கு ஒருநாள் - அவ்விடத்து ஒருகாலத்தில், வெம் தகுவர்க்கு ஆற்றாத விண்ணோர் முறைக்கு இரங்கி - கொடிய அவுணர்க்கு ஆற்றாத தேவர்களுடைய முறைப்பாட்டிக்கு இரங்கி, ஐந்து முகத்தோடு அதோமுகமும் தந்து - தமது ஐந்துமுகத்தோடு அதோமுகத்தையும் உண்டாக்கிக்கொடுத்து, திருமுகங்கள் ஆறு ஆகி-ஆறு திருமுகங்களையுடையவராகி நிற்க, செம் தழல்கண் ஆறும் ஒருமுகமாய் தீப்பொறி ஆறு உய்ப்ப - சிவந்த நெருப்புக்கண்கள் ஆறும் ஒருங்கே ஆறுதீப்பொறிகளைச் சிந்த, (அவை) விரிபுவனம் எங்கும் பரக்க - இடமகன்ற உலமெல்லாவற்றிலும் பரவ, (அப்படிப் பரவுவதை) இமையோர் கண்டு அஞ்சுதலும் - தேவர்கள் பார்த்து அஞ்சுதலும், பொங்குதழல் பிழம்பை - மிகுதியாகிய நெருப்புத் திரளை, பொன் கரத்தால் - தமது அழகிய கையினால், அங்கண் எடுத்து அமைத்து-அவ்விடத்தினின்றும் வாரியமைத்து, வாயுவைகொண்டு ஏகுதி என்று எம்மான் கொடுத்து அளிப்ப - வாயுவைநோக்கி இந்தப் பொறிகளைக்கொண்டு போவென்று எம்மிறைவன் தந்தருள, மெல்லக் கொடுபோய் - (வாயுவானவன்) மெல்லக் கொண்டேகி, அடுத்தது ஒரு பூதத்தலைவ கொடுபோதி என - அடுத்து நிற்பவனாகிய அக்கினியை நோக்கி பூதங்களுள்ளே தலைவனே இப்பொறிகளைக் கொண்டுபோகக்கடவையென்று சொல்ல, தீக்கடவுள் சீதபகீரதிக்கு சென்று உய்ப்ப - தீக்கடவுளானவன் குளிர்ச்சியாகிய கங்காநதியில் கொண்டுபோய்விட, அன்னையும்-அக்கங்காதேவியும், ஒரு சற்றுபோது கொண்டு - ஒரு சிறிதுபொழுது தன்னிடத்து ஏற்று, அமைதற்கு ஆற்றாள் - அமைந்திருத்தற்கு ஆற்றாதவளாகி, சென்னியிற்கொண்டு - சிரமேற்கொண்டு, சரவணத்தில் உய்ப்ப - சரவணப் பொய்கையில்விட, திருஉருவாய் - திருவுருக்கொண்டு, முன்னர் - முற்காலத்தில், அறுமீன் முலையுண்டு - கார்த்திகையின் முலைப்பாலுண்டு, அழுதுவிளையாடி - :———, நறுநீர்முடிக்கு அ

ணிந்தநாதன் - நல்லகங்கையை சடைமுடியில் அணிந்த சிவபெருமான், குறுமுறுவல் கன்னியொடும் சென்று - புன்சிரிப்பையுடைய உமாதேவியாரோடும் போய், அவட்கு - அவ்வுமாதேவிக்கு, *காதல் உரு காட்டுதலும் - விருப்பத்தைத் தருகின்ற அவ்வுருவை காணபித்தலும், அன்னவள்கண்டு - அவ்வுமாதேவி பார்த்து, அவ்வுருவம் ஆறினையும் - அந்த ஆறுருவங்களையும், தன் இரண்டுகையால் எடுத்து அணைத்து - தன்னுடைய இருகரத்தா லேந்தியணைத்த, கந்தன் என பேர்புனைந்து - கந்தனெனத்திருநாமஞ்சூட்டி, மெய் ஆறும் ஒன்றாகமேவுவித்து - ஆறுதிருவுடம்பும் ஒன்றாக பொருந்துவித்து, செய்யமுகத்தில் அணைத்து - செவ்விய திருமுகத்தில் சேர்த்து, உச்சிமோந்து - ;———, அகத்துள் மகிழ்பூத்து - மனத்தில் களிகூர்ந்து, முலைப்பால் அளித்து - முலைப்பாலுண்பித்து, சகத்து அளந்த - நிலமளந்த, வெள்ளைவிடைமேல் - வெள்விடைமேலூர்கின்ற, விமலன் - நிர்மலனாகிய சிவபெருமானது, கரத்தில் அளித்து - கையில் கொடுத்து, உள்ளம் உவப்ப - மனமகிழ, உயர்ந்தோனே - சிறந்தோனே, கிள்ளைமொழிமங்கை - கிளிமொழிமங்கையாகிய உமாதேவியின், சிலம்பின் மணி ஒன்பதில் தோன்றும் - சிலம்புமணியொன்பதிலவதரித்த, துங்கமடவார் - பரிசுத்தமாகிய பெண்கள், துயர் தீர்ந்து - துன்பம்நீங்கி, தங்கள் விருப்பால் அளித்த - தமது விருப்பத்திலீன்ற, நவவீரருக்குள் - ஒன்பது வீரருக்குள், முன்னோன் - முன்னவனாகிய, மருபாயும் தார் - வாசனை வீசுகின்ற பூமாலையையணிந்த, வீரவாகு - வீரவாகுதேவர், நெருப்பில் உதித்து - யாகாக்கினியிற்றோன்றி, அம்கண் புவனம் அனைத்தும்-அழகிய இடத்தையுடைய உலகங்கள் எல்லாவற்றையும், அழித்து உலவும்-அழித்து உலாவுகின்ற, செங்கண்கடா அதனை-சிவந்த கண்களையுடைய ஆட்டுக்கடாவை, சென்றுகொணர்ந்து - போய்க்கொண்டுவந்து, எங்கோன் - எம்பிறைவனே, விடுக்குதி என்று உய்ப்ப - இதனை ஏறி நடத்தக்கடவை யென்றுவிட, அதன்மீது இவர்ந்து - அதன்மேல்

ஏறி, எண்திக்கும் நடத்தி விளையாடும் - எட்டுத்திசையிலும் செலு த்தி விளையாடுகின்ற, நாத - தலைவனே, படைப்போன் - உலகங் களை படைப்போனாகிய பிரமன், அகந்தை உரைப்ப - அகங்கார வார்த்தையைப் பேச, மறைஆதி - வேதத்தின் முதலில், எழுத்து ஒன்று உகந்த - ஓர் எழுத்துருவங்கொண்ட, பிரணவத்தின் உண் மை - பிரணவத்தின் மெய்ம்மையை, புகன்றிலையால் - சொல்லிலு யில்லை ஆதலால், சிட்டித்தொழில் அதனை செய்வது எங்ஙன் என்று- படைப்புத்தொழிலை நீ செய்வது எவ்வாறென்று, முன்னம் - முற் காலத்தில், குட்டி - அவன் சிரத்திற்குட்டி, சிறை இருத்தும் - சிறைவைத்த, கோமானே-இறைவனே, மட்டு அவிழும் - தேனோடு மலர்கின்ற, பொன் அம்கடுக்கை - பொன்போலும் அழகிய கொன் றை மலர்மாலையையணிந்த, புரிசடையோன்-சிவபெருமான், போ ற்றிசைப்ப - துதிக்க, முன்னம் - முற்காலத்தில், பிரமம் - பிரமப் பொருளை, மொழிந்தோனே - உபதேசித்தவனே, கொல்நெடுவேல் தாரகனும் மாய-கொல்லுந் தொழிலையுடைய நெடியவேலையுடைய தாரகனும் அழிய, தடம்கிரியும் தூளாக - பெரிய கிரௌஞ்சமலை யும் தூளாக, வீரவடிவேல் விடுத்தோனே - வடித்த வீரவேலையே விடுத்தோனே, சீரலைவாய் - திருச்சீரலை வாயாகிய, தெள்ளும்திரை கொழிக்கும் செந்தூரில் போய் - தெள்ளிய அலைகளைக் கொழிக் கின்ற திருச்செந்தூரில் சென்று, கருணை வெள்ளம்என - கருணைப் பிரவாகம்போல, தவிசின் வீற்றிருந்து - சிம்மாசனத்தின் மேலெழுந் தருளியிருந்து, வெள்ளைக் கயேந்திரனுக்கு அஞ்சல் அளித்து - வெள்ளை யானையையுடைய இந்திரனுக்கு அபயங்கொடுத்து, கடல் சூழ் மகேந்திரத்திற் புக்கு - கடல்சூழ்ந்த மகேந்திரத்திற் பிரவே சித்து, இமையோர் வாழ - தேவர்கள் வாழும்படி, சயேந்திரனும் சூரனை-வெற்றியில் மிகுந்தவனாகிய சூரபன்மனை, சோதித்து வருக என்று - சோதித்து வரக்கடவாயென்று, தடம்தோள் விசயவீரனை - வீரவாகுதேவனை, தூதாக விடுத்தோனே-தூதாக அனுப்பினவனே,

கார்அவுணன் - கரிய அவுணனாகிய சூரபன்மன், வானவரைவிட்டு - தேவர்களைச் சிறைநீக்கி, வணங்காமையால் - வணங்காதிருக்கையால், கொடிய தானவர்கள் நாற்படையும் சங்கரித்து - கொடிய தானவருடைய நால்வகைப்படையையும் சங்கரித்து, பானுபகைவன் முதலாயபாலருடன் - பானுகோபன்முதலாகிய புதல்வரோடு, சிங்கமுகனைவென்று - சிங்கமுகாசுரனையும்வென்று, வாகைமுடித்தோய் - வாகைமாலையை யணிந்தவனே, சகம்உடுத்தவாரிதனில் - பூமிதேவி ஆடையாக வுடுக்கப்பெற்ற கடலினிடத்தில், புதியமா ஆய் கிடந்த - நூதனமாகிய மாமரமாகக்கிடந்த, நெடுசூர் உடலம் கீண்ட - சூரபன்மனது நெடிய சரீரத்தைப் பிளந்த, சுடர்வேலோய் - ஒளியுள்ள வேற்படையையுடையவனே, போர் அவுணன் அங்கம் - போர்த்தொழில் வல்ல அவுணனாகிய சூரபன்மனது உடம்பு, இருகூறு ஆய் - இருபங்காகி, அடல்மயிலும் சேவலும் ஆய்-வெற்றியையுடையமயிலும் சேவலுமாகி, துங்கமுடன் ஆர்த்து எழுந்துதோன்றுதலும் - மிகுதியாக ஆரவாரித்தெழுந்து காணப்படுதலும், அங்கு அவற்றுள் - அவ்விடத்துத் தோன்றிய அவ்விரண்டனுள்ளே, சீறும் அரவைப்பொருத - சீறுகின்ற பாம்பைக் கொல்லுகின்ற, சித்ரமயில் - விசித்ரமாகிய மயிலை, வாகனம்ஆ - வாகனமாகக்கொண்டு, எறிநடாத்தும் - அதன்மீதேறி நடத்துகின்ற, இளையோனே - முருகனே, மாறிவருசேவற் பகையை - மாறுபட்டு வருகின்ற சேவலாகிய பகைவனை, திறல்சேர்பதாகையென - வெற்றிக்கொடியென்று, மேவ - வந்துபொருந்த, தனித்து உயர்த்த மேலோனே - ஒப்பற வுயர்த்தினமேன்மை யுடையவனே, மூவர்குறைமுடித்து - மும்மூர்த்திகளுடைய குறையைமுடித்து, விண்ணம் குடியேற்றி - விண்ணுலகத்தில் குடியேறப்பண்ணி, தேவர் சிறை விடுத்து - தேவர்களுடைய சிறையை விடுவித்து, ஆட்கொண்டு அளித்த - ஆட்கொண்டருளின, தேவே - தேவனே, மறைமுடிவு ஆம் - வேதாந்தமாகிய, சைவக்கொழுந்தே - சிவக்கொழுந்தே, தவக்

கடலே - தவசாகரமே, வான்உதவும் தெய்வக்களிற்றை, சுவர்க்க லோகம்பெற்ற தெய்வயானையை, மணஞ்செய்தோனே-மணம்புணர்ந்தவனே, பொய்விரவுகாமமுனிந்த-பொய்கலந்த காமத்தைவென்ற, கலைமுனிவன் கண்அருளால் - கலைகளில் வல்லவனான சிவமுனிவன் கடாக்ஷத்தினால், வாமம்மடம் மானின்வயிற்று உதித்து - அழகாகிய இளமானின்வயிற்றில் அவதரித்து, பூமருவுகானக் குறவர் களிகூர - நிலவுலகிலுள்ள கானக்குறவர் மனமகிழ்ச்சி கூரும்படி, பூ குயில்போல்-அழகாகிய குயில்போல, ஏனல்புனம்காத்து இனிது இருந்து - தினைப்புனங்காத்துச் சுகமாயிருந்து, மேன்மைபெற - மேன்மையையடைய, தெள்ளி - தெள்ளி, தினைமாவும் தேனும் - தினைமாவையும் தேனையும், பரிந்து அளித்த - விரும்பித்தந்த, வள்ளிக்கொடியை மணந்தோனே - வள்ளியாகிய கொடிபோல் வாளை மணந்தவனே, உள்ளம்உவந்து-மனமகிழ்ந்து, ஆறுதிருப்பதி கண்டு-ஆறு திருப்பதிகளையும் சேவித்து, ஆறு எழுத்தும் - ஆறெழுத்தையும், அன்பினுடன் கூறுபவர் - அன்போடு உச்சரிப்பவர்களுடைய, சிந்தை-மனத்தில், குடிகொண்டோனே-குடிகொண்டிருப்பவனே, நாறும் - பரிமளிக்கின்ற, மலர் - மலர்களையுடைய, கந்திபொதும்பர் - கமுகஞ்சோலையானது, எழுகார் அலைக்கும் - சத்தமேகங்களையும் அலைக்கின்ற, சீரலைவாய் - திருச்சீரலை வாயாகிய, செந்திற்பதிபுரக்கும் - திருச்செந்தூரைக் காவல்செய்கிற, செவ்வேளே - முருகக்கடவுளே, சந்ததமும் - எப்பொழுதும், பல்கோடி சன்மப்பகையும்-பலகோடி பிறவிப்பகையும், அவமிருத்தும்-அகாலமரணமும், பல்கோடி விக்கினமும் - பலகோடி இடையூறுகளும், பல்பிணியும்-பல நோய்களும், பல்கோடி பாதகமும்-பலகோடி பாதகங்களும், செய்வினையும் - செய்தொழில்களும், பாம்பும்-பாம்புகளும், பிசாசும் - பசாசங்களும், அடல்பூதமும் - வலியபூதங்களும், தீநீரும் - நெருப்புநீர்களும், பொருபடையும் - போர்செய்கிற படைகளும், தீது அகலாவெவ்விடமும் - தீமைநீங்காத கொடியவிடமும்,

துட்டமிருகம் முதலாம் எவையும் - துஷ்டமிருகம் முதலாகிய யாவும், எவ்விடம் வந்து எம்மை எதிர்ந்தாலும் - எவ்விடத்தில் வந்து எம்மை யெதிர்ப்பட்டாலும், அவ்விடத்தில் - அவ்விடத்திலே, பச்சைமயில் வாகனமும் - பச்சைநிறமுள்ள மயில்வாகநமும், பன்னிரண்டு திண்தோளும் - பன்னிரண்டாகிய வலிய புயங்களும், அச்சம் அகற்றும் - அச்சத்தைப் போக்குகின்ற, அயில்வேலும் - கூரிய வேற்படையும், கச்சைதிருவரையும் - கச்சையைத்தரித்த திருவிடையும், சீறடியும் - சிற்றடியும், செங்கையும் - செவந்தகைகள் பன்னிரண்டும், ஈராறு அருள்விழியும் - பன்னிரண்டாகிய கருணைக் கண்களும், மாமுகங்கள் ஆறும் - அழகியமுகங்கள் ஆறும், விரிகிரணம் சிந்தப்புனைந்த - விரிந்த கிரணங்கள் சிந்தும்படிதரித்த, திருமுடிகள் ஓர் ஆறும் - திருமுடிகள் ஓராறும், எந்தத் திசையும் - எல்லாத் திக்குகளிலும், எதிர்தோன்ற வந்து-நேரே யெழுந்தருளி, இடுக்கண் எல்லாம் பொடிபடுத்தி - துன்பங்கள் யாவற்றையும் நீருக்கி, எவ்வரமும் தந்து - எல்ல வரங்களையும் கொடுத்து, உல்லாசமாக - சம்பிரமமாக, உள்ளத்து புகுந்திருந்து - மனத்திற்குடி புகுந்திருந்து, பல்விதம் ஆம் - பலவகையாகிய, ஆசுமுதல் நாற்கவியும் - ஆசுகவி முதலாகிய நாற்கவிகளும், அட்டாவதானமும் - அஷ்டாவதானமும், சீர்பேசும் இயல் - சிறப்பாயெடுத்துப்பேசு மியல்பையுடைய, பல் காப்பியத் தொகையும் - பலகாவியத்தொகுதியும், ஓசை - ஒலிவடிவாகிய, எழுத்துமுதலாம்-எழுத்துமுதலாகிய, ஐந்து இலக்கணமும்-பஞ்சலக்ஷணமும், தோய்ந்து பழுத்த - பொருந்திமுதிர்ந்த, தமிழ் புலமைபாலித்து - தமிழ்ப்புலமையைத் தந்தருளி, ஒழுக்கமுடன் - நல்லொழுக்கத்தோடுகூடிய, இம்மைப்பிறப்பில்-இப்பிறப்பில், இருவாதனை அகற்றி - இரண்டு வாசனைகளையும் நீக்கி, பெரு - பெரிதாகிய, மும்மைமலங்கள் மோசித்து-மும்மலங்களையும் விமோசநஞ்செய்து, தம்மைவிடுத்து - தாமென்பதை நீக்கி, ஆயும் - ஆராய்கின்ற, பழய் அடியாருடன் கூட்டி - பழவடியாருடன் சேர்த்து, தோயும்

பரபோகம் துய்ப்பித்து - பொருந்திய பரபோகத்தை நுகர்வித்து, சேய-செம்மையாகிய, கடிஎற்கும் - மணத்தைக்கொண்ட, பூங்கமலம் கால்காட்டி-அழகிய தாமரைமலர்போன்ற திருவடியைக் காட்டி, ஆட்கொண்டு-அடிமைகொண்டு, அடியேற்கு முன்நின்றருள் - அடியேனுக் கெதிரே நின்றருள்வாயாக. எ - று.

மங்கலமொழிமுதல் வகுத்துக்கோடல் நூலாசிரியர் எல்லார்க்கும் உடம்பாடாதலானும், அம்மங்கலமொழி பலவற்றினுள்ளும் பூச்சிறந்தமையானும் பூவையிந்நூலாசிரியர் நூற்றொடக்கத்து மங்கலமொழியாத வகுத்துக்கொண்டனர். அன்றியும் இவர்க்குத்திருச்செந்தூர் முருகக்கடவுளது திருவருளான் ஊமைத்தன்மைநீங்கி, வாக்குஉதயமாகியும், யாம் எமக்குக் கருணைசுரந்தருளிய இப்பேரருளாளரைத்துதித்தற்கு எம்மொழியை முதற்கண் அமைப்பேம் எனத்திகைத்து நிற்புழிக் கருணைக்கடலாகிய முருகவேள் தமது திருத்தோளிலணிந்திருந்த பூமாலையினின்றும் ஒரு பூவினைவீழ்த்தியருளியிப்பொருளின் பெயராகிய பூவென்பதனை முதன்மொழியாக வமைத்து என்னைத்துதிக்கக்கடவை எனக்குறிப்பிக்க,அக்குறிப்பினையுணர்ந்து ஆசிரியர் பூ என்பதனை நூற்றொடக்கத்து அமைத்தனர் என்றும் அறிஞர் கூறுப. செங்கமலப் பூமேவு புத்தேளும் என அந்வயித்துச் செந்தாமரை மலரில் வீற்றிருக்கிற தேவனாகிய பிரமனும் எனினுமாம்.மறைக்குத் தெய்வத்தன்மையாவது நித்திய நிர்த்தோஷமாய் அபௌருஷேயமாய் இருத்தல்.பழமறைஎன்றதனால் இதனின் முற்பட்டதோர் நூலில்லையென்பதும் பெறப்பட்டது. பரமம் - மேன்மை. சிவம் - யாவருக்கும் சுபத்தையுண்டாக்குவது,ஐந்தொழிலாவன - சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம், என்பன. அன்று, ஏ - அசைகள். மநாதிகள் - மனவாக்குக்காயங்கள். இவற்றைத் திரிகரணம் என்பர். பஞ்சவிதரூபம் - ஐவகையுருவம், அவை பிரமவிஷ்ணு ருத்திரமஹேசுவர சதாசிவரூபங்கள். காரணமு

மில்லா என்றது தனக்குக்காரணமொன்றின்மையை யறிவித்தற்கே யன்றி எல்லாப்பொருள்களும் தன்காரிய மாதலை யறிவித்தற்கென்க. கதி - எல்லாப்பொருள்களும் புக்கொடுங்குமிடம். தாரணி - தன் மீதுள்ள எல்லாப்பொருள்களையுந் தாங்குவது. இருள் மலத்துள் மோசமுறும் பல்லுயிர் என்றது சகலரை. இவர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையும் உடையவர். விந்து, மோகினி, மான் என்பவற்றுள் விந்து - விந்துதத்துவம் - மோகினி - காலம், நியதி, கலை என்பவற்றிற்குப் பிறப்பிடம், மான் - தன்மாத்திரை ஐந்து, பூதமைந்து, ஞானேந்திரிய மைந்து, அந்தக்கரணம் நான்கு, என்பவற்றிற்குப் பிறப்பிடம். மோகினியை அசுத்தமாயையென்றும், மானை - பிரகிருதிமாயையென்றும் கூறுப. மந்திரமுதல் ஆறத்துவாக்களாவன.—மந்திரம் பதம் வர்ணம் புவனம் தத்துவம் கலை என்பன. இவை முறையே பதினொன்றும், எண்பத்தொன்றும், ஐம்பத்தொன்றும், இருநூற்றிருபத்துநான்கும், முப்பத்தாறும், ஐந்தும் ஆகிய கூறுபாடுடையன. இவற்றுள் முதல்மூன்றும் சொல்லுருவும், இறுதிமூன்றும் பொருளுருவுமாகி, ஆன்மாக்களது வினைப்பயனுகர்ச்சிக்குக் காரணமாயிருக்கும். அண்டத்தார்ந்த அத்துவாக்கள் - உலகத்திலுள்ள வழிகள் - சிமிழ்ப்பு - கட்டு, ஈரிரண்டுதோற்றம் - நால்வகையோனி (பிறப்பிடம்), அவையாவன-அண்டசம் (முட்டையிற் பிறப்பது) சுவேதசம்-(வெயர்வையிற் பிறப்பது) சராயுசம்-(பையிற் கட்டுண்டு பிறப்பது) உற்பிச்சம் (நிலத்தில் பிறப்பது)என்பன. எழுபிறப்பாவன - தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. எண்பத்துநான்குலட்சம் ஜீவராசிகள் என்பதை,

"ஊர்வ பதினொன்று மொன்பது மாநுட
நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாஞ் - சீரிய
பந்தமாந் தேவர் பதினா லயன்படைத்த
வந்தமில் சீர்த்தாவரநா லைந்து." என்னும் வெண்பாவாலுணர்க.

முன்னூல் என்றது வேதாகமங்களை. ஆலோசம் திருஷ்டி. நால்வகையாம் சத்திநிபாதமாவன - மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம், என்பன. சத்தி - சிற்சத்தி, நிபாதம் - பதிவு. இந்நான்கனையும் பக்குவமென்றுங் கூறுப. சரியை, கிரியை, யோகங்களும் அவற்றாலுண்டாகிற சாலோக சாமீப்பிய சாரூப்பியங்களும் அடியில் வரும் செய்யுட்களானுணர்க.

ஆவலாலெமக்காமலர்மரங்களாக்கலம்மலர்பறித்தலம்மலராற்
றூவிலாவகைததார்பலசமைத்தறணைப்பிலெம்புகழ்சாற்றனெம்புடனே
மேவுமாலயமலகிடன்மெழுகல்விளங்கநல்விளக்கிடுதலெம்படியார்க்
கேவலானவைசெய்யுமிச்சரிதையியற்றவல்லவர்செம்முலகளிப்பேம்.

சுந்தரச்சமுங்கிளர்மணப்புகையுங்கவின்கொடீபமும் புனிதமஞ்சனமும், கொந்தவிழ்ந்தநன்மலருமற்றளவுங்கொண்டுமொய்ம்மையின்குணத்திலொன்றிலராய், ஐந்துசுத்திசெய்தகம்புறமிறைஞ்சியங்கியின் கடன்கழித்தருள்வழிநின், றிந்தநற்பெருங்கிரியையன்புடனேயியற்றவல்லவரெம்மருங் கிருப்பார்.

முச்குணம்புலனைந்துடனடக்கி மூலவாயுவையெழுப்பிருவழியைச், சிக்கெனும்படியடைத்தொருவழியைத்திறந்துதாண்டவச்சிலம்பொலியுடன்போய்த், தக்கவஞ்செழுத்தோரெழுத்துருவாந்தன்மைகண்டருடரும்பெருவெளிக்கே, புக்கழுந்தினரெமதுருப்பெறுவார்புவியில்வேட்டுவனெடுத்தமென்புழுப்போல்.

இருவினை என்றது நல்வினை தீவினைகளை. இருவினையும் ஒத்துவருங்காலமென்பதனை இருவினையொப்பு என்பர். மலபரிபாகம் - மலசமனகாலம். கன்மமலத்தார் என்றது பிரளயாகலரை. இவர் ஆணவம் கன்மம் என்னும் இரண்டு மலமுடையவர். தாழ்சடை - தொங்குகின்ற சடையெனினுமாம், மால்விடை - பெரியவிடை, திருமாலாகியவிடை. உடன் என்பதனை மூன்றுவதன் சொல்லுருபாக்கினு

மமையும். மின் - என்றது உவமையாகு பெயராய் உமாதேவியை யுணர்த்திற்று. பவளப்பொருப்பு என்றது அவ்வாகு பெயராய் சிவ பெருமானை யுணர்த்திற்று. தெய்வவடிவு - சிகண்டமூர்த்தம். ஒரு மலத்தாரென்றது விஞ்ஞானகலரை, இவர் ஆணவமலமொன்றையே யுடையவர். மூன்றவத்தை என்றது. சாக்கிர சொப்பன சுழுத்தி களை. முத்தரென்றது ஜீவன்முத்தர்களை. யான் எனது என்றது அகங்கார மமகாரங்களை. இவற்றைமுறையே அகப்பற்று புறப் பற்று என்றுங்கூறுப. இச்சை - இச்சாசத்தி, செயல் - கிரியாசத்தி, அறிவு - ஞானசக்தி. பலஎன்றது ஈண்டுப் பன்னிரண்டைக்குறித் தது. மகரக்குழை-மகரமீன் வடிவாகச் செய்யப்பட்ட காதணி. படிக்கும் பழமறைகளென்றும் பாடம். வெறி - தேன் எனினுமாம். கொடியிடையார் என்றது வள்ளி தெய்வயானை யென்னுமிருவரை. அட்டமூர்த்தங்களாவன, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா, என்பன. பஞ்சமலம் என்றது - ஆணவம் மாயை காமியம் திரோதாயி மகாமாயைகளை. தசாங்கம் என்றது தேவர் முதலியோர்க்குரிய பத்துறுப்புக்களை, அவை மலை, யாறு, நாடு, நகர், குதிரை, யானை, மாலை, கொடி, முரசு, ஆணை என்பனவாம் அதோமுகம்-கீழ்நோக்கிய முகம். எங்கோன் - அண்மைவிளி. மட்டு - மணம் எனினுமாம். நெருப்பில் உதித்து என்றது நாரதமுனி செய்த யாகாக்கினியிற் றோன்றி என்றபடி. புரிசடையோன் - கட்டப்பட்ட சடையையுடையவன். போற்றி சைப்ப-போற்ற இதுஒருசொல். முன் அம்பிரமம் எனப்பிரித்து முற் காலத்தில் அழகிய பிரமப்பொருள் என்றுரைத்தலுமொன்று. கயேந் திரன் - கயம்+இந்திரன், கயம் - யானை. நாற்படை என்றது யானை, குதிரை, தேர் காலாள் என்பவற்றை. தலைகீழாகக் கிடந் தமையின் புதியமா என்றார். ஆறுதிருப்பதி - திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர் சோலைமலை. தாரலைத்தலாவது மேகமண்டலத் தள

வுஞ்சென்று அவற்றைத் தாக்கிவருத்துதல். மாமுகங்களாறும் என்றதற்கேற்ப ஈராறருள்விழியும் என்றமையான் செங்கை யென்பதற்கும் பன்னிரண்டென்னும் தொகை சேர்க்கப்பட்டது. ஆசுமுதல் நாற்கவி யென்றது ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் கவிவேறுபாட்டை. அட்டாவதானம் - எண்வகையவதானம். (அவதானம்-கிரகித்தல்) - இருவாதனை யென்றது அகப்பற்றுப் புறப்பற்றுக்களை. பூங்கமலமென்பதைக் கமலப்பூவென முன்பின்னாக மாற்றித் தாமரைமலர்போன்ற என்றுரைத்தலுமாம்.

கந்தர் கலிவெண்பா

முற்றிற்று.

---



மதுரை-மீநாக்ஷிசுந்தரி.

LITHO-MEENAKSHIAMMAH, PRESS. MYLAPORE. 1900.

உ

கணபதிதுணை.

மதுரை

அங்கயற்கண்ணம்மை

அல்லது

# மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ்,

## மூலமும் உரையும்.



## காப்பு.

### விநாயகக்கடவுள்.

கார்கொண்ட கவுண்மதக் கடைவெள்ள முங்கட்
  கடைக்கடைக் கனலுமெல்லை
கடவாது தடவுக் குழைச்செவி முகந்தெறி
  கடைக்கா றிரட்ட வெங்கோன் [வெண்
போர்கொண்ட வெண்கோட் பொலன்குவடு பொதியும்
  பொடிதுடி யடித்து வைத்துப்
புழுதியாட் டயராவொ ரயிராவ ணத்துலவு
  பொற்களிற் றைத்துதிப்பாம்
தார்கொண்ட மதிமுடி யொருத்தன் றிருக்கண்மலர்
  சாத்தக் கிளர்ந்து பொங்கித்

தவழுமிள வெயிலுமழ நிலவுமள வளவலாற்
றண்ணென்று வெச்செனு பொன்
வார்கொண் டணிந்தமுலை மலைவல்லி கர்ப்பூர
வல்லியபி ராம வல்லி
மாணிக்க வல்லிமர கதவல்லி யபிடேக
வல்லிசொற் றமிழ் தழையவே.

(இதன்பொருள்.) தார்கொண்ட - பூமாலையாகக்கொண்ட, மதி-பிறைச்சந்திரனை, முடி - சிரசிலேயுடைய, ஒருத்தன் - ஒப்பற்றவனாகிய பரமசிவன், திருக்கண் மலர் சாத்த - அழகிய கண்மலர்களைச் சாத்தலால், கிளர்ந்து பொங்கி - விளங்கி மேலெழுந்து, தவழும் - பரவுகின்ற, இளவெயிலும் - இளவெயிலும், மழ நிலவும் - இள நிலவும், அளவளவலால் - கலத்தலால், தண் என்று - தீட்பமாகவும், வெச்சு என்று - வெப்பமாகவும், (தோற்ற) பொன் வார்கொண்டு அணிந்த - பொற்கச்சினால் அலங்கரிக்கப்பட்ட, முலை-திருமுலைகளையுடைய, மலைவல்லி - மலைவல்லியும், கற்பூரவல்லி - கர்ப்பூரவல்லியும், அபிராமவல்லி - அபிராமவல்லியும், மாணிக்கவல்லி - மாணிக்கவல்லியும், மரகதவல்லி - மரகதவல்லியும், அபிடேகவல்லி - அபிடேகவல்லியும் ஆகிய அங்கயற்கண்ணம்மையின் விஷயமாய்,சொல்-சொற்றொடராலாக்கப்பட்ட, தமிழ் - (பிள்ளைக்கவி என்னும் இந்த) தமிழ்ப்பிரபந்தம், தழைய - செழித்தோங்கும்பொருட்டு, கார்கொண்ட - மேகத்தின் தன்மையைக்கொண்ட, கவுள் மதம் - கபோல மதமாகிய, கடை வெள்ளமும் - ஊழிப்பெருக்கும், கண் கடை - கடைக்கண்ணிலுண்டாகின்ற, (தீப்பொறியாகிய,) கடைக்கனலும் - ஊழித்தீயும், எல்லை கடவாது - (தத்தம்) வரம்பைக் கடவாதிருக்கும்பொருட்டு, தடவு - விசாலமாகிய, குழை செவி - குண்டலத்தையணிந்த செவிகள், முகந்து எறி - மொண்டு வீசுகின்ற, கடைக்



காப்புப்பருவம் - ஸ்ரீமீனாக்ஷிசுந்தரி குழந்தையாயிருக்க - திருமால்முதலியபரிவாரதேவதைகள் குழந்தையைப் பாதுகாத்தது.

கால் - ஊழிக்காற்றை, திரட்ட - தடுக்காநிற்க, எம் கோன் - எம்மிறைவனாகிய சிவபெருமானுடைய, போர்கொண்ட - போர்த்தொழிலைக்கொண்ட, எண் டோள் - எட்டுத் தோள்களாகிய, பொலங்குவடு - பொன்மலைகளின்மீது, பொதியும் - படிந்திருக்கிற, வெண்பொடி - திருவெண்ணீற்றை, துடி அடி துவைத்து - மேன்மையாகிய திருவடிகளால் மிதித்து, புழுதியாட்டு அயரா - புழுதியாடலைச் செய்து, ஓர் - ஒப்பற்ற, ஐராவணத்து - ஐராவதம்போல, உலவு - உலாவுகின்ற, பொன் களிற்றை - அழகிய யானைக்கன்றாகிய விநாயகக்கடவுளை, துதிப்பாம் - (யாம்) தோத்திரம்பண்ணுவோம். என்றவாறு.

அபிடேகவல்லி சொற்றமிழ் தழைய ஐராவணத்துலவு பொற்களிற்றைத் துதிப்பாம் என முடிக்க. யாதானுமோர் நூல் செய்யப்புகுவோர் மங்கலமொழிமுதல் வகுத்துக் கோடன் மரபாதலால், இந்நூலாசிரியரும் கார் என்னும் மங்கலமொழி முதல் வகுத்துக்கொள்வாராயினர். கார்கொண்ட என்பதற்குக் கருமையைக்கொண்ட எனப் பொருளுரைப்பாருளராயினும் நூற்றொடக்கத்துக் கருமையெனக் கோடன் மங்கலமன்மையான் அப்பொருள் கோடல் சிறப்புடைத்தன்றென்க. மேகத்தின் றன்மையாவது நீரைப்பொழிதல். மேகத்தைக் கார் என்றது பண்பாகுபெயர். இது வண்ணப்பண்பு என்றுணர்க. கடைக்கண் என்பது கட்கடையெனச் சொன்னிலை மாறிநின்றது. திரட்டல் - தடுத்தல். போர்க்களிற்றை யென்றும் பாடம். இதற்குப் போர்த்தொழிலையுடைய களிற்றை யென்றுரைக்க. மதி தார்கொண்ட என வைத்து, பிறையை மாலையாகக் கொண்ட என்றலுமொன்று. பிறையென்றது ஒரு கலையாகிய சந்திரனை. "தாரென்ன வோங்குஞ் சடைமுடிமேற் றனித்திங்கள் வைத்த - காரென்னவாருங் கறைமிடற் றம்பலவன்" என்றார் திருவாதவூரடிகளும். சூரிய சந்திரர்கள் இறைவனுக்கு வலக்கண்ணு மிடக்

கண்ணுமாதலால், "திருக்கண் மலர்சாத்தக் கிளர்ந்து பொங்கித் தவ ழுமிள வெயிலுமழ நிலவுமனவளவ லாற்றண்ணொன்று வெச்செ ன்று பொன்வார் கொண்டணிந்த முலை" என்றார். வெண்பொடியிற் புழுதியாட்டயர்ந் துலாவுகின்றமையான், "ஐராவணத்துலவு பொற் களிற்றை" என்றார். இவ்வாறன்றி, இந்திரனூர்தியாகிய ஐராவத மென்னும் யானை தன் சாபநீங்கும்பொருட்டு மதுரையில் வந்து, இதற்கு மேற்றிசையிற் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து பூசித்த தலமாகிய ஐராவணத்தலத்தி லுலாவுகின்ற பொற்களிற்றை யெனக் கூறுவாருமுளர். அங்ஙனமாயின் ஐராவதம் பூசித்த தலம் ஐராவ தேசம் எனப்படுவதன்றி ஐராவணமெனப்படாமையானும், மதுரை அங்கயற்கண்ணம்மை விஷயமாய்ப் பிள்ளைக்கவி கூறுவார். இங்குள் ள வணக்கங் கூறுதலேயன்றி, இதற்கு மேற்றிசையிலுள்ள வோர் தல விநாயகவணக்கங் கூறுதல் பொருந்தாமையானும், அது பொரு ளன்மையறிக. ஐராவணத்தல விநாயகருக்கு ஐராவத கணேசர் எனத் திருநாமம் வழங்கும். "குடவயினைராவதப் பெருந்தீர்த்தங் குடைந்தயிராவத கணேசக் - கடவுளைத்தொழு தைராவதேச்சுரத் தைக் கண்டு" என்றார் பரஞ்சோதிமுனிவரும். இனிச் சிவலோகத் தில், சிவபெருமானேறும் யானையை ஐராவணம் என்றும், அது போல் (அல்லது) அதன்மீதேறி யுலாவுகின்ற பொற்களிற்றையென் றும் கூறலுமொன்று. இது, "உயிராவணமிருந் துற்றுநோக்கி யுள் ளக்கிழியி னுருவெழுதி - யுயிராவணஞ்செய் திட்டென்கைத் தந்தா லுணரப் படுவாரோ டொட்டிவாழ்தி - யுயிராவணமேறு தானே றேறி யமரர்நாடாளாதே யாரூராண்ட - வயிராவணமே யென்னம் மானே நின்னருட்கண்ணாலே நோக்காதாரல்லாதாரே" என்று ஸ்ரீவாகீ சரும், "நிரைநிரையா யிரம்வகுத்தமா யிருமருப்பின் வெண்ணிறச் செங்கண் வேழமும்" என்று திருவெண்காடரும் அருளிச்செய்த தனு லினிதுவிளங்கும். அவயவங்க ளெல்லாவற்றுள்ளுஞ் சிறந்த அவயவமாகிய தலை யானைத்தலையாதலாற் களிறென்றே கூறினர்,

துடியடியென்பதற்கு வலிமையுடைய திருவடியென்றுரைப்பினும் பொருந்தும். துடியென்பது உடுக்கையெனக்கொண்டு, உடுக்கை வட்டம்போன்ற எனப் பொருள் கூறுவாருமுளர். மூத்தபிள்ளையாருக்குச் சிரமொன்றேயன்றித் திருமேனி முழுதும் யானையுருவன் மையான் அப்பொருள் பொருளன்மையறிக. மலைவல்லி முதலியன வொரு பொருண்மேல்வந்த பல பெயர்கள். மலையரையன் புதல்வியாதலான் மலைவல்லியென்றும், பாண்டிவேந்தரு ளொருவன் பச்சைக்கற்பூரத்தா லபிஷேகஞ்செய்வித்து இஷ்டசித்தி பெற்றமையாற் கற்பூரவல்லியென்றும், அழகிற் சிறந்திருத்தலால் அபிராமவல்லியென்றும், (அபிராமம் - அழகு), ஒரு கற்பத்தில் தன்னது காளமேனியை மறைத்து மாணிக்கநிறங் கொண்டமையான் மாணிக்கவல்லியென்றும், பச்சைத் திருமேனியுடைமையான் மரகதவல்லியென்றும், தடாதகைப்பிராட்டியாய்த் திருவவதரித்துத் திருமுடி புனைந் தரசுசெய்தமையான் அபிடேகவல்லியென்றும் இறைவிக்குத் திருநாமங்கள் வழங்கும். அபிடேகவல்லியென்பதற்கு, ஆறாதாரங்களுக்கு மேலாகிய ஸஹஸ்ராரகமலத்தில் இறைவனோடு வீற்றிருத்தலால் அபிடேகவல்லியென் றுரைத்தலுமொன்று. கவுண்மதமும் கட்பொறியும் முறையே கடைவெள்ளமுங் கடைக்கனலுமாக வுருவகஞ்செய்யப்பட்டது மிகுதிபற்றியென்க. குழைச்செவி முகந்தெறி கடைக்காறிரட்டுவ தெற்றுக்கெனின், அக்கடை வெள்ளமும் கடைக்கனலும் தம் வரம்புகடப்பின் உலகிற்குக் கேடுண்டாமாதலின், அங்ஙனங் கடவாமல் அவற்றைத் தத்தமெல்லையி னிறுவுதற் பொருட்டென்க. இது மூத்தபிள்ளையாரது பாரமேச்சுர வுருவத்தைக்குறித்தது. இறைவன் திருமேனி பொன்வண்ணமாதலாற் றேன்கள், "எண்டோட் பொலன்குவடு" என்றார். இதனை, "பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி" என்றும், "பொன்பனைத் தன்னவிறை" என்றும், "பொன்னார் மேனியனே" என்றும்,

மேலோர் கூறுதலானுமுணர்க. இறைவன் திருமேனியி லியல்பாக வே பூத்துளதாதலால் திருவெண்ணீற்றை, "எண்டோட் பொலன் குவடு பொதியும் வெண்பொடி" என்றார். உலாவுதலெற்றுக்கெ னின், தம்மைப் போற்றுவோர்க்கு இடையூற்றை விரைந்துசென்று நீக்கியருளற்பொருட்டென்க. இந்நூலுக்கேற்புடைக்கடவுள் வணக் கம் பின்னர்க் கூறப்படுதலா னீண்டுக் கூறியது வழிபடுகடவுள் வணக்கமென்றுணர்க. அபிடேகவல்லி சொற்றமிழ் என்பது கபில ரது பாட்டென்பதுபோல ஆறுவதன் செய்யுட்கிழமை. துதிப்பாம் என்னும் வினைக்கு யாம் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட் டது. மலைவல்லி முதலிய திருநாமங்களையுடைய அங்கயற்கண்ணம் மையின் விஷயமாகிய இந்தப் பிள்ளைக்கவியென்னும் பிரபந்தம் இனிது முடிதற்பொருட்டுச் சிவபெருமானது திருத்தோளிலேறிப் புழுதியாடலைச் செய்துலவாநின்ற விநாயகக்கடவுளைத் துதிப்பாம் என்பது கருத்து. (௪)

---

முதலாவது

## காப்புப்பருவம்.

### திருமால்.

மணிகொண்ட நெடுநேமி வலயஞ் சுமந்தாற்று
மாசுணச் சூட்டு மோட்டு
மால்களிறு பிடர்வைத்த வளரொளி விமானத்து
வாலுளை மடங்க ருங்கு
மணிகொண்ட பீடிகையி னம்பொன்முடி முடிவைத்தெ
மையனொடு வீற்றி ருக்கு

மங்கயற் கண்ணமுதை மங்கையர்க் கரசியையெ
மம்மனையை யினிது காக்க
கணிகொண்ட தண்டுழாய்க் காடலைத் தோடுதேங்
கலுழிபாய்ந் தளறு செய்யக்
கழனிபடு நடைவயிற் கமலத் தணங்கரசோர்
கையணை முகந்து செல்லப்
பணிகொண்ட துத்திப் படப்பாய்ச் சுருட்டுப்
பணைத்தோ ளெருத்த லைப்பப்
பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங் கொண்டலே.

(இ - ள்.) கண்ணி கொண்ட - மாலையாகச்செய்யப்பட்ட, தண் - குளிர்ந்த, துழாய்க்காடு - துளவக்காட்டை, அலைத்து - அலையாநின்று, ஓடு - பெருகிப்பாய்கின்ற, தேம்கலுழி - தேன்யாறானது; பாய்ந்து - பரவி, அளறு செய்ய - சேற்றை யுண்டாக்குதலால், கழனிபடு - செய்காலாகிய, நடையில் - வழியில், கமலத்து - தாமரைமலரை யிடமாகவுடைய, அணங்கு அரசு - பெண்களுக்கரசியாகிய திருமகள், ஓர் கை - ஒரு கையை, அணை - ஆதரவாக, முகந்து செல்ல - பற்றிச்செல்லாநிற்கவும், துத்தி படம் கொண்ட - புள்ளிகளைப் படத்திற்கொண்ட, பணி - பாம்பாகிய, பாய்ச்சுருட்டு-பாயற்சுருள், பணைத்தோள் - பருமையாகிய தோள்களையும், எருத்து - பிடரையும், அலைப்ப - அலையாநிற்கவும், பழமறைகள் - பழமையாகிய வேதங்கள், முறையிட - முறையிடாநிற்கவும், பைந்தமிழ்ப்பின்-பசிய தமிழின்பின்னே, சென்ற - தொடர்ந்துபோன, பச்சைப்பசுங் கொண்டல் - மிகவும் பசுமையாகிய மேகம், மணிகொண்ட-முத்து முதலிய மணிகளையுடைய, நெடு நேமி - நெடுங்கடலாற் சூழப்பட்ட, வலயம் - பூமண்டலத்தை, சுமந்து - சுமவாநின்று, ஆற்றும் -

(சுமத்தலாலுண்டாகிற வருத்தத்தை) சகிக்கின்ற, மாசுணம் - ஆதி சேடனது, சூட்டு - உச்சியின்மீதுள்ள, மோடு - பெருமையுள்ள, மால் - மதத்தால் மயங்குகின்ற, களிறு - அட்டதிக்கயங்களின், பிடர்வைத்த - எருத்தத்தின்மீ தமைக்கப்பட்ட, வளர் ஒளி - மிக்க ஒளியையுடைய, விமாநத்து - விமாநத்தின்மீது, வால்உளை - வெண்மையாகிய புறமயிரையுடைய, மடங்கல் - சிங்கங்கள், தாங்கும் - சுமந்துநிற்கிற, அணிகொண்ட - அழகைக்கொண்ட, பீடிகையில் - பீடத்தில், ஆம்பொன் முடி - அழகிய பொன்மகுடத்தை, முடிவைத்து - முடிமேற் சூடி, எம் ஐயனொடு - எம்மிறைவனோடு, வீற்றிருக்கும் - அரசிருக்கின்ற, அங்கயற்கண் அமுதை - அழகிய கயற்கண்ணையுடைய அமுதம்போல்வாளை, மங்கையர்க்கு அரசியை - மாதரசியை, எம் அம்மனையை - எமக்குத் தாயை, இனிது காக்க - இனிதாகக் காத்திடுக. எ - று.

பச்சைப் பசுங்கொண்டல் என்றது திருமாலே. கொண்டல் எம் அம்மனையைக்காக்க என முடிக்க, வீடுபேற்றுக்குக் காரணமாயிருத்தலால் "அமுது" என்றார். அமுது - வீடு. வளரொளி விமானம் என்றது ஒருகத்தில் இந்திரன் தன்பழிநீங்கி மீநாக்ஷிசுந்தரேசர்க்குச் சமர்ப்பித்த விமாநத்தை. அது அட்டதிக்கயங்களும் முப்பத்திரண்டு சிங்கங்களும் அறுபத்துநான்கு கணங்களும் தாங்கும்படி மயனால் நிருமிக்கப்பட்டது. அதற்கு விண்ணிழி விமாநம் இந்திர விமாநம், முதலிய பெயர்கள் வழங்கும். நேமி, வலயம் என்பன பல பொரு ளொருசொற்களாயினும், மணிகொண்ட, சுமந்தாற்று மாசுணச்சூட்டு என்னும் விசேடணங்களால் கடலையும் நிலத்தையுங் குறித்தன. கண்ணி கணியெனத் தொகுத்தல்பெற்றது. அரசு - பண்பாகுபெயர். பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டல் என்றது - திருமழிசையாழ்வாரைத் திருவெஃகாவிலே சயநத் திருக்கோலமா யெழுந்தருளியிருக்கிற சொன்னவண்ணம் செய்த

பெருமாள் தொடர்ந்துசென்ற செய்தியைக்குறித்தது. அது வருமாறு— திருக்கச்சித்தலங்களுள் ஒன்றாகிய திருவெஃகாவில் திருமழிசையாழ்வார் யோகத்திலெழுந்தருளி யிருக்குங்காலத்தில், அவரைக் கணிகண்ணர் என்னும் ஓர் பாகவதர் ஆசிரயித்திருந்தார். அப்படியிருக்க, ஒருகிழவேசை யானவள் ஆழ்வார்திருவுள முவக்கும்படியான சில பணிவிடைகளைச்செய்து, அவர் கடாக்ஷத்தால் தன் கிழத்தன்மை நீங்கி இளமைப்பருவமடைந்து தெய்வப்பெண்போல் அழகிற் சிறந்து விளங்கினாள். அவளை அவ்வூர்க்கரசனாகிய பல்லவராயன் கண்டு மோகிக்க, அவளும் சம்மதித்தாள். இருவரும் சிலநாள் கூடி வாழ்ந்துவருகையில், இவளது கூட்டரவால் அரசனுக்கு முதுமை வரக்கண்டு, அரசன் அவளை நோக்கி, உன் கூட்டங் காரணமாக எனக்கு முதுமையுண்டானதனால் நீ முதியளாதல் வேண்டும். உனக்கு இளமையழகுண்டானவா றென்னென்று கேட்க, அவள் அரசனை நோக்கி, நான் ஆழ்வாரை வழிபட்டதனால் எனக்கு இளமையழகுவாய்த்தது, நீரும் கணிகண்ணரைக்கொண்டு ஆழ்வாரை யாசிரயித்து வழிபடுவீராயின் உமக்கும் இளமை யழகுண்டாமென்று சொல்ல, அரசன், உடனே கணிகண்ணரை யழைத்து, உமது ஆசாரியராகிய ஆழ்வாரை நான் சேவிக்கவேண்டும். அவரை யழைத்து வாருமென்று சொல்ல, ஆழ்வார் ஒருவரிடத்துக்கும் எழுந்தருளாரென்று கணிகண்ணர் சொல்ல, அதைக்கேட்ட அரசன் கணிகண்ணரை நோக்கி, அவர் எழுந்தருளாமற்போனால் போகட்டும், நீர் என்மீது ஒரு கவிபாடுமென்று சொல்ல, கணிகண்ணர், யாம் நரஸ்துதி பண்ணமாட்டோமென்று சொல்ல, அரசன் கோபங்கொண்டு, நம்மூரைவிட்டுப் போமென்ன, கணிகண்ணர் இந்தச் செய்தியை ஆழ்வாரிடத்தில் விண்ணப்பம் பண்ண, ஆழ்வார், நாமும் வருகிறோமென் றெழுந்துபோய்ப் பெருமாளிடத்தில் விண்ணப்பஞ்செய்து விடைகேட்பதாக, "கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி -

மணிவண்ணா நீயிங்கிராதே - துணிவுடனே -செந்நாப்புலவனியான் செல்கின்றே னீயுமுன்றன் - பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்''
என்ற பாடலைப் பாடினவுடனே, ஆழ்வார் சொன்னவண்ணமே பெருமாள் எழுந்தருள, கச்சிநகர் அழகிழந்து பாழ்பட் டிருப்பதை அரசன் முதலானோர் கண்டு, விரைந்து சென்று; கணிகண்ணனைக் கண்டு வணங்கிப் பிரார்த்திக்க, அவர் ஆழ்வாரைப் பிரார்த்திக்க, ஆழ்வாரும், "கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி - மணிவண்ணா நீ யிங்கிருக்க - துணிவுடனே, செந்நாப்புலவனியான் செல்வொழிந்தே னீயுமுன்றன் - பைந்நாகப் பாய்படுத்துக் கொள்'' என்னும் பாடலைப்பாட, பெருமாளும் அவ்வாறே அந்தத் தலத்தில் சயநத்திருக்கோலமா யெழுந்தருளினர் என்பது. இந்தப் பெருமாளை யதோக்தகாரியெனக் கூறுவர் வடநூலார். பணிகொண்ட முடவுப்படப் பாய்ச்சுருட்டு என்னும் பாடம். முடவு - வளைவு. விண்ணிழி விமாநத்தில் எமது தந்தையாகிய சிவபெருமானுடன் இனிது வீற்றிருக்கும் அங்கயற்கண்ணியைத் தமிழின்பின்னே தொடர்ந்து சென்ற திருமாலானவர் காக்கக்கடவர் என்பது கருத்து. மங்கையர்க்கரசி, அணங்கரசு என்பன தேவமாதர்களுக் கிறைவியென்னும் பொருளன. அரசு - பண்பாகுபெயர். பெருமாள் பைந்தமிழைப் பின்றொடரக்கண்ட வேதங்கள் இறைவனுக்குத் தமிழின்மீதுள்ள பேரார்வமெம்மிடத் தில்லையாயிற்றே யென்றிரங்கிக் கோஷித்தலால், "பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப்பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டல்'' என்றார். நவமணிகளுள் நிர்த்தோஷமானதும் பெரும்பான்மை கடலிற் படுவதுமாதலால், மணி என்பதற்கு முத்து முதலிய மணிகளென்றுரை யுரைக்கப்பட்டது. மாசுணம் - பெரும்பாம்பு. அது "மணிகொண்ட நெடுநேமி வலயஞ்சு மந்தாற்றும்'' என்ற விசேடணத்தால் ஆதிசேடனுக்காயிற்று. மால் களிறு - வினைத்தொகை நிலைத்தொடர். மாலாகின்ற

களிறு என்பது பொருள். மாலுதற்குக் காரணம் மதமிகுதியென்க. எல்லா வுயிர்களுக்கும் நித்தியமாதாவாதலால் "எம் அம்மனை," என்றார். "விடையதூரிறையேதாதை மற்றவன்பான்மின் னெமதன்னை" என்றார் பிறரும். பச்சைப் பசுங்கொண்டல் உவமையாகுபெயர். பச்சை முழுமைப் பண்புப்பொருட்டு, பச்சைப்பொய் என்பதிற் போல. இக்காப்புப்பருவத்தில் எல்லாத் தேவர்களையும் துதித்த லியல்பாயினும், காத்தற்றொழிலில் இன்றியமையாப் பெருஞ் சிறப் பினராதலேக்கித் திருமால்துதி முதற்கட் கூறப்பட்டது. கயற் கண்ணி மீனாக்ஷியென்னும் வடமொழிப்பெயர்ப்பொருட்டு. வேதங் கள் அநாதியாதலால், "பழ மறைகள்" என்றார். மறை என்பதற்கு அந்தணர்க்கேயன்றி ஏனையர்க் குரித்தன்றென மறைக்கப்பட்டது என்றும், அறம் பொரு ளின்பம் வீடு என்னும் நாற்பொருட்டிறத் தையும் மறைத்து வைத்திருப்பது என்றும் பொருள் கூறுப. எல் லாத் திவ்யதேசங்களிலும் பெருமாள் புறப்பாட்டில், தமிழ்வேதம் முன் செல்வதும், அதன்பின் பெருமாள் செல்வதும், அவர்க்குப் பின் கீர்வாணவேதம் செல்வதும் கண்கூடாயிருக்கையால், அதனை, "பைந்தமிழ்ப்பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டல்" என்பதற்குப் பொருளாகக் கூறலாமே யென்பார் சிலருளர். "கணிகொண்ட பைந் துழாய்க் காடலைத் தோடுதேங் கலுழ்பாய்ந் தளறுசெய்யக் - கழுனி படு நடைவையிற் கமலத் தணங்கரசொர் கையணை முகந்து செல்லப் - பணிகொண்ட துத்திப் படப்பாய்ச் சுருட்டுப் பணைத்தோ ளொருத் தலைப்ப" என்னுஞ் சொற்றொடர்ப்பொருட்கு மாறுபடுமாதலால் அது பொருத்தப் பொருளன்றென மறுக்க. (க)

## பரமசிவன்.

சிகர வடவரை குனிய நிமிர்தரு
செருவி லொருபொரு வில்லெனக் கோட்டினர்

செடிகொள் பறிதலை யமண ரெதிரெதிர்
செலவொர் மதலைசொல் வையையிற் கூட்டினர்
திருவு மிமையவர் தருவு மரவொலி
செயவ லவர்கொள நல்குகைத் தீட்டினர்
சிறிய வெனதுபுன் மொழியும் வடிதமிழ்
தெரியு மவர்முது சொல்லெனச் சூட்டினர்
பகரு மிசைதிசை பரவ விருவர்கள்
பயிலு மியநெறி வெள்வளைத் தோட்டினர்
பசிய வறுகொடு வெளிய நிலவிரி
பவள வனமடர் புல்சடைக் காட்டினர்
பதும முதல்வனு மெழுத வரியதொர்
பனுவ லெழுதிய வைதிகப் பாட்டினர்
பரசு மிரசத சபையி னடமிடு
பரத பதயுக முள்ளம்வைத் தேத்துதுந்
தகர மொழுகிய குழலு நிலவுமிழ்
தரள நகையுமெ மையனைப் பார்த்தெதிர்
சருவி யமர்பொரு விழியு மறுகிடை
தளர வளர்வதொர் செவ்விமுற் றுக்கன
தனமு மனனுற வெழுதி யெழுதரு
தமது வடிவையு மெள்ளிமட் டேற்றிய
தவள மலர்வரு மிளமி னொடுகெத
தளமின் வழிபடு தையலைத் தாத்திரை
மகர மெறிகட லமுதை யமுதகு
மழலை பழகிய கிள்ளையைப் பேட்டன

மடவ நடைபயில் பிடியை விரைசெறி
வரைசெய் புயமிசை வையம்மைத் தாற்றிய
வழுதி யுடையகண் மணியொ டிலவுபெண்
மணியை யணிதிகழ் செல்வியைத் தேக்கமழ்
மதுர மொழுகிய தமிழி னியல்பயின்
மதுரை மரகத வல்லியைக் காக்கவே.

(இ - ள்.) (இறைவியின்) தகரம் ஒழுகிய-மயிர்ச்சாந்து ததும்பிய, குழலும் - கூந்தலையும், நிலவு உமிழ் - வெள்ளொளியைத்தருகிற, தரளம் - முத்தை நிகர்த்த, நகையும் - பல்லையும், எம் ஐயனைப் பார்த்து - எம்மிறைவனை நோக்கி, எதிர் சருவி - எதிரே சைகை செய்து, அமர் பொரு - போர் செய்கிற, விழியும் - கண்களையும், மறுகு இடை தளர - துவளாநின்ற இடை தளரும்படி, வளர்வது - வளர்வனவாகிய, ஒர் - ஒப்பற்ற, செவ்வி முற்று - பருவமுதிராத, கன தனமும் - பருமையாகிய திருமுலைகளையும், மனன் உற எழுதி-தமது மனத்திற் பதிய எழுதிவைத்து, எழுது அரு - எழுதுதலருமையாகிய, தமது வடிவையும் - தமது உருவங்களையும், எள்ளி - இகழ்ந்து, மட்டு ஊற்றிய - தேனைச்சொரிகிற, தவளம் மலர் வரும்-வெண்டாமரைப்பூவில் வளராநின்ற, இள மின்னொடு - இள மின்கொடிபோல்வாளாகிய நாமகளும், சததளம் மின் - செந்தாமரைப் பூவையுடைய திருமகளும், வழிபடு - பூசிக்கிற, தையலை - பெண்ணரசியை, தூ திரை - வெண்மையாகிய அலைகள், மகரம் - மகரமீன்களை, எறி - எடுத்து வீசுதற்கிடமாகிய, கடல் - பாற்கடலிற்றோன்றின, அமுதை - அமிர்தத்தை, அமுது உகு - அமிர்தம் சிந்துகின்ற, மழலை பழகிய - குதலை மொழிகளைப் பழகின, கிள்ளையை -கிளியை, பேடு அன்னம் - அன்னப்பெடைகள், மடவம் - இளமையாகிய, நடை பயில் - நடையைக் கற்கும்படியான, பிடியை - பெண் யானை

மை, விரைசெறி - மணமிகுந்த, வரை செய் - மலைபோன்ற, புயம் மிசை - தோளின்மீது, வையம் - பூமியை, வைத்து ஆற்றிய-வைத்துச் சுமத்தலின் வருத்தத்தைத் தாங்கின, வழுதி உடைய - பாண்டியனுடைய; கண்மணியொடு உலவு - கண்மணியோ லோவுகின்ற, பெண் மணியை - பெண்களுக்கு ரத்நமாயிருப்பவளை, அணி திகழ் - அழகு மிகுந்த, செல்வியை - மகேசுவரியை, தேகமழ் - தேன் மணக்கின்ற, மதுரம் ஒழுகிய - இனிமை மிகுந்த, தமிழின் இயல் பயில் - தமிழிலக்கணம் வழங்குகின்ற, மதுரை - மதுரைப் பதியி லெழுந்தருளியிருக்கிற, மரகத வல்லியை - மரகதக்கொடி போல்வாளாகிய அங்கயற்கண்ணம்மையை, காக்க - காக்கும்பொருட்டு, சிகரம் - சிகரங்களையுடைய, வட வரை - மகமேரு மலையானது, குனிய - வளைய, நிமிர்தரு - மேலெழுந்த, செருவில் - போரில், ஒரு - ஒப்பற்ற, பொரு - போர்செய்தற்குரிய, வில் என - வில்லாக, கோட்டினர் - வளைத்தவர், செடி கொள் - குற்றத்தைக்கொண்ட, பறிதலை - பறிதலையையுடைய; அமணர் எதிர் - அமணருக்கெதிரில், எதிர் செல்ல - எதிரேறிப்போம்படி, ஓர் மதலை சொல் - ஒரு குழந்தையின் பாசுரத்தை, வையையில் - வையை நதியில், கூட்டினர் - சேர்த்தவர், திருவும்- செல்வத்தையும், இமையவர் தருவும்- தேவதருவையும், அர ஒலி செய்ய வல்லவர் - அர என்னு மொலியைச்செய்ய வல்லவர், கொள்ள - பெறும்படி, நல்கு - கொடுத்த, கைத்தீட்டினர் - கையெழுத்தை யுடையவர், சிறிய - சிற்றறிவினராகிய, எனது - என்னுடைய, புன்மொழியும் - புன்சொற்றொடையையும், வடி தமிழ் தெரியுமவர் - வடித்த தமிழை யறிந்த அவ்வறிஞராது, முது சொல் என - பொருள் முற்றிய சொற்றொடைபோல, சூட்டினர் - புனைந்தவர், பகரும் இசை - பாடுகின்ற இசைகள், திசை பரவ - திக்குகளில் பரவாநிற்க, இருவர்கள் - தும்புரு நாரதர் என்னு மிருவரும், பயிலும் - பாடுகின்ற, இயல் தெரி - பாட்டியலை

யறிகின்ற, வெள்வளை தோட்டினர் - வெள்ளிய சங்கக்குழையை யணிந்த திருச்செவியையுடையவர், பசிய அறுகொடு - பசுமையாகிய அறுகம்புல்லுடன், வெள்ளிய நிலவிரி - வெள்ளிய நிலவு விரிந்த, பவள வனம் அடர் - பவளக்காடுபோல நெருங்கின, பல் சடை காட்டினர் - பல சடைகளாகிய காட்டையுடையவர், பதும முதல்வனும் - தாமரைப்பூவை யிடமாகவுடைய பிரமனும், எழுத அரியது - எழுதுதற்கரியதாகிய, ஓர் பனுவல் - ஒரு பாசுரத்தை, எழுதிய - எழுதியருளின, வைதிகப்பாட்டினர் - வேதத்திருவாக்கையுடையவர், (அவரது) பரசும் - யாவரும் துதிக்கின்ற, இரசத சபையில் - வெள்ளியம்பலத்தில், நடம் இடு - நடனம்பண்ணுகிற, பரதம் - பரதத்தையுடைய, பதயுகம் - திருவடித்துணையை, உள்ளம் வைத்து - எமது மனத்தில் இருத்தி, ஏத்துதும் - துதிப்போம். எ - று.

மதுரை மரகதவல்லியைக்காக்க, வில்லெனக்கோட்டினரும், வையையிற் கூட்டினரும்,நல்குகைத்தீட்டினரும்,சொல்லெனச்சூட்டினரும், வெள்வளைத் தோட்டினரும், பல்சடைக்காட்டினரும், வைதிகப் பாட்டினருமாகிய பரமசிவனது பதயுகம் உள்ளம்வைத் தேத்துதும் என முடிக்க. செரு என்றது முப்புரத்தாரோடு நேர்ந்த போரை. ஓர் மதலை சொல் என்றது ஆளுடையபிள்ளையார் ஓதியருளின திருநெறித் தேவாரத்தை. ஆளுடையபிள்ளையார் - திருஞானசம்பந்தசுவாமிகள். அரவொலி செய்தலாவது சிவபெருமான் திருநாமங்களில் மிகச் சிறந்துவிளங்குவதாகிய ஹரஃ என்னும் திருநாமத்தை விதிப்படி உச்சரித்தல். பனுவல் என்றது தருமியென்னும் சிவப்பிராமணனுக்கு எழுதிக்கொடுத்தருளின "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் பாசுரத்தை. அன்றி,பாணபத்திரர்பொருட்டுச் சேரமான்பெருமாணயனார்க் கெழுதிவிடுத்த "மதிமலி புரிசை" என்னும் பாசுரத்தை எனினுமாம். வைதிகப்பாட்டு - வேதசம்பந்தமான

பாடல். "வைதிகப்பாட்டினர்" என்றது ஈண்டு மீநாக்ஷிசுந்தரேசனைக்குறித்தது. "வடிதமிழ் தெரியுமவர்" என்றது வாகீசர் முதலிய மூவரையும் திருவாதவூரடிகளையும். கலைமகளும் திருமகளும் தமது வடிவை வெள்ளி இறைவியை வழிபடுதற்குக் காரணம் அவை இறைவியின் திருவடிவுக் கொவ்வாமை. மீநாக்ஷியம்மையைக் காக்கும்பொருட்டுத் திரிபுரசங்காரம் முதலிய காரியங்களைச் செய்த பரமசிவனைத் தோத்திரம் பண்ணுவோம் என்பது கருத்து. முதல் இடை கடை என்னு முச்சங்கத்தாருமிருந்து தமிழாராய்ந்த இடமாதலால் திருவாலவாயை "தமிழினியல் பயின் மதுரை" என்றார். கிள்ளை, அன்னம், பிடி, பெண்மணி என்பன உவமையாகுபெயர்கள். "கற்றில கண்டன்ன மென்னடை கண்மலர் நோக்கருளப் - பெற்றில மென்பிணை பேச்சுப் பெறுகிள்ளை" என்பது திருக்கோவையார். மிளிர்தரு ஒரு சொல். கோட்டுதல் - வளைத்தல். பறிதலை - மயிர் பறிக்கப்பட்ட தலை. தோடு - ஆகுபெயர். நிலா நில் எனக் குறுக்கலாயிற்று. இரசதம் - வெள்ளி, இதனை வடநூலார் ரஜதம் என்பர். பரதம் - நடகம், அபிநயம் முதலியவற்றி னிலக்கணங்களை யுணர்த்தும் நூல். இது வேதத்தின் ஆறங்கங்களுள் ஒன்று. கனதனம் வடசொற் புணர்ச்சியாதலால் இயல்பு. சததளம் இதுவுமது. தையல் - கைபுனையப்பட்டவள். (அலங்கரிக்கப்பட்டவள்.) தமிழ் என்பதற்கு இனிமை யென்பது பொருளாதலால், "மதுரமொழுகிய தமிழினியல்" என்றார். "உயர்மதிற் கூடலி னாய்ந்தவொண் டீந்தமிழ்" என்பது திருக்கோவையார். (உ)

## சித்திவிநாயகர்.

கைத்தல மோடிரு கரடக் கரைத்திரை
 கக்குக டாமுடைக் கடலிற் குளித்தெமர்
சித்தம தாமொரு தறியிற் றுவக்குறு
 சித்திவி நாயக னிசையைப் பழிச்சுதும்

புத்தமு தோவரு டழையத் தழைத்ததோர்
பொற்கொடி யோவென மதுரித் துவட்டெழு
முத்தமிழ் தேர்தரு மதுரைத் தலத்துறை
முத்தன மேவுபெ ணரசைப் புரக்கவே.

(இ - ள்.) புது அமுதோ-புதிய அமிர்தமோ, அருள் தழைய-திருவருளாகிய தளிர்கள் செழிக்க, தழைத்தது - செழித்ததாகிய, ஓர் பொன் கொடியோ - ஒரு சுவர்ணக்கொடியோ, என - என்று கண்டோர் சொல்லும்படி, மதுரித்து - இனித்து, உவட்டு எழு - பெருக்கெடுக்கின்ற, முத்தமிழ் - மூவகைத் தமிழையும், தேர் தரு-ஆராய்தற்கிடமாகிய, மதுரைத்தலத்து - மதுரைத் திருப்பதியில், உறை - எழுந்தருளியிருக்கிற, முத்தனம் மேவு - மூன்று தனங்களைப் பொருந்திய, பெண் அரசை - பெண்ணரசியாகிய மீநாக்ஷியம்மையை, புரக்க - காக்கும்பொருட்டு, கைத்தலமோடு - துதிக்கையுடன், இரு கரடக்கரை - இரண்டு கபோலங்களினின்றும் பாய்கின்ற மதக்குழியின் கரையில், திரைகக்கு - அலைகளை உமிழ்கின்ற, கடாம் உடை - மதநீரையுடைய, கடலில் குளித்து - கடலினிடத்து மூழ்கி, எமர் - எம்போலியரது, சித்தமது ஆம் - மனமாகிய, ஒரு தறியில் - ஒரு கட்டுத்தறியில், துவக்கு உறு - கட்டுண்ட, சித்தி விநாயகன் - சித்திவிநாயகரது, இசையை - புகழை, பழிச்சுதும் - துதிப்போம் (யாம்.) எ - று.

முத்தனமேவு பெண்ணரசைப் புரக்க சித்திவிநாயக னிசையைப்பழிச்சுதும்எனமுடிக்க. கைத்தலமோடு துவக்குறும்எனக்கூட்டுக. புத்தமுதோ பொற்கொடியோ என மதுரைத்தலத்துறை பெண்ணரசு என இயைக்க. கைத்தலமோடு எமர் சித்தமதாமொரு தறியில் துவக்குறலாவது - இடையறாது சிந்திக்கும் மெய்யடியாரது மனத்தில் நீங்காது நின்று முத்தித்தடைகளை நீக்கி, ஔவை

லிய இறைவன் பதத்தி லெடுத்துவைத்த துதிக்கையால் அவரையும் அந்தப் பதத்தி லேற்றியருளுந் திருவுளத்தோடு அவ்விடத்து அசைவற வீற்றிருப்பது. அவரது இசையாவது தம்மன்பருக்குச் சாரூப முதலிய பேற்றையருளுதலா லுண்டாகும் புகழ். முத்தமிழாவன - இயல், இசை, நாடகம் என்பன. மலையத்துவச பாண்டியன் மகப்பேறு கருதிச்செய்த வேள்வியினின்றும் மூன்று திருமுலைகளோடவதரித்தமையால் முத்தனமேவு பெண்ணரசு என்றார். இறையனார், நாமகள் முதலியோரிருந்து தமிழாராய்ந்த மதுரைத் திருப்பதியி லெழுந்தருளிய மும்முலைத் தடாதகைப்பிராட்டியைக் காக்கும்பொருட்டு, அன்பரிதயத்தமர்ந்து வாழ்கின்ற சித்திவிநாயகரது புகழைத் துதிப்போம் என்பது கருத்து. துவக்கு - கட்டு. கோயிலி லெழுந்தருளியிருக்கும் விநாயகர்க்குக் கற்பகவிநாயகர் என்றும், பழமலையிலெழுந்தருளியிருக்கும் விநாயகர்க்கு ஆழத்துப்பிள்ளையார் என்றும், திருநாரையூரி லெழுந்தருளியிருக்கும் விநாயகர்க்குப் பொல்லாப்பிள்ளையார் என்றும், திருவொற்றியூரி லெழுந்தருளியிருக்கும் விநாயகர்க்குக் குணலய விநாயகர் என்றும் திருநாமங்கள் வழங்குதல்போல இந்தத் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் விநாயகர்க்குச் சித்திவிநாயகர் என்னுந் திருநாமம் வழங்கும். மதுரித்து மதுரம் என்னும் பெயரடியாகப்பிறந்த வினையெச்சம். தேர் தரு ஒரு சொல். (௩)

## முருகவேள்.

பமர மடுப்பக் கடாமெடுத் தூற்றுமோர்
பகடு நடத்திப் புலோமசைச் சூற்புயல்
பருகி யிடக்கற் பகாடவிப் பாற்பொலி
பரவை யிடைப் பற்பமாதெனத் தோற்றிய

குமரி யிருக்கக் கலாமயிற் கூத்தயர்
குளிர்புன மொய்த்திட் டசாரலிற் போய்ச்சிறு
குறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு
குமரனை முத்துக் குமாரனைப் போற்றுது
மிமிழ்திரை முற்றத் துமேருமத் தார்த்துமுள்
ளெயிறுகு நச்சுப் பணாடவித் தாப்பிசைத்
திறுக விறுக்கித் துழாய்முடித் தீர்த்தனொ
டெவரு மதித்துப் பராபவத் தீச்சுட
வமுதுசெய் வித்திட் டபோனகத் தாற்சுட
ரடரு மிருட்டுக் கிரீவமட் டாக்கிய
வழகிய சொக்கற் குமால் செயத்தோட்டிக
லமர்செய் கயற்கட் குமாரியைக் காக்கவே.

(இ - ள்.) பமரம் - வண்டுகள், மடுப்ப - உண்ண, கடாம் எடுத்தூற்றும் - மதநீரையெடுத்துக் கவிழ்க்கின்ற, ஒர் - ஒப்பற்ற, பகடு - யானையை, நடத்தி - நடத்துவோனாகிய இந்திரன், புலோமசை-இந்திராணியாகிய, சூல்புயல் - கருப்பங்கொண்ட மேகத்தை, பருகியிட - அநுபவிக்க, கற்பகம் அடவிபால் - கற்பகக்காட்டில், பொலி - விளங்குகின்ற, பரவையிடை - பாற்கடலில், பற்பமாது என - தாமரையில் திருமகள்போல, தோற்றிய - அவதரித்த, குமரி இருக்க - தெய்வயானையார் இருக்க, கலாமயில்-தோகையையுடைய மயில்கள், கூத்து அயர் - நடம்பண்ணுகிற, குளிர்புனம்-குளிர்ந்த புனங்கள், மொய்த்திட்ட - நெருங்கின, சாரலில்போய் - மலைச் சாரலிற்சென்று, சிறு - சிறிய, குறவர்மகட்கு - குறவர்பெண்ணாகிய வள்ளிநாயகிக்கு, சலாம் இடற்கு - சலாம்செய்ய, ஏக்கறு-ஏக்கற்று நின்ற, குமரனை - இளைஞனை, முத்துக்குமாரனை - முத்துக்குமார

ஏவாமியை, போற்றுதும் - வணங்காநின்றோம், இமிழ்-ஒலிக்கின்ற, திரைமுற்றத்து-அலைகளையுடைய பாற்கடலில், மேருமத்து ஆர்த்து - மந்தரமலையாகிய மத்தினை நிறுத்தி, முள்எயிறு உகு-முள்ளைநிகர்த்த பல்லினின்றும் சிந்துகிற, நச்சு - நஞ்சினையும், பணம் அடவி - படத்தொகுதியையுமுடைய, தாம்பு இசைத்து - (வாசுகியென்னும்பாம்பாகிய) கயிற்றைப்பொருத்தி, இறுக இறுக்கி - தளராமல் இறுக்கிக்கட்டி, துழாய்முடி தீர்த்தனொடு - துளசிமாலையைத்தரித்த முடியையுடையதிருமாலுடன், எவரும் - தேவர் அசுரர்முதலிய யாவரும், மதித்து - கடைந்து, (அதிலுண்டாகிய) பராபவம் - துன்பத்தைச் செய்கிற, தீசுட - ஆலாகலவிஷமாகிய நெருப்புச்சுடுதலும், அமுது செய்வித்திட்ட - உண்பித்த, போனகத்தால் - உணவினால், சுடர் அடரும் - கரிய ஒளிமிகுந்த, இருட்டு - நஞ்சாகிய இருளை, கிரீவம் மட்டு ஆக்கிய - கண்டத்தளவில் நிறுத்தின, அழகியசொக்கற்கு - அழகியசுந்தரேசர்க்கு, மால்செய - ஆசையையுண்டாக்க, தோடு - குழையோடு இகல்அமர்செய் - வலியபோரைச்செய்கிற, கயல்கண் - சேற்கண்களையுடைய, குமாரியை - தேவியை, காக்க - காக்கும் பொருட்டு. எ - று.

பகடெனப் பொதுப்படக் கூறினாராயினும் அது இவ்விடத்துக்கேற்ப ஐராவதத்தைக்குறித்தது. கயற்கண்குமாரியைக் காக்க முத்துக்குமாரனைப்போற்றுதும் எனமுடிக்க. பமரம் என்பது ப்ரமரம் என்னும் வடசொற்றிரிபு. பகடு நடத்தியென்பது மானேந்தி பிறைசூடி என்பன போலப்பெயராய் நின்றது. நடத்திப் புலோமசை எனப் பகரவொற்று மிக்கது சந்தவின்பப்பொருட்டு. கலாபம் என்பது கலா எனக்குறைந்துநின்றது. மயிற்கூத்தயர் என்பதில் லகரம் றகரமாய்த்திரிந்ததும் சந்தவின்பப்பொருட்டு. சலாம் - திசைச்சொல், இது கும்பிடல் என்னும் பொருளது. எக்கறுதல் - தாழ்ந்து நிற்றல். மதித்து அமுது செய்வித்திட்டவென வியையும். பற்பம்

என்பது பத்மம் என்னும் வடசொற்றிரிபு. இதனை "பரஸ்மைபதம், ஆத்மநேபதம் என்னாது, பரப்பைபதம், ஆற்பநேபதம் என மகரத்தைப் பகரமாக்கினமை, சடகோபர் "பற்பநாப னுயர்வற வுயரும் பெருந்திறலோன் எனக் கொண்டமையானுமுணர்க" என்பர் பிரயோக விவேகநூலாரும். திங்குப்படலம். ரு - உ. புனங்குளிர்ந்திருத்தற்கும் மயில்கூத் தயர்தற்கும் காரணம் மேகங்கள் இடையறாதுதவழ்தல். இந்திரன் மகளாகிய தெய்வயானையாரிருக்கக் குறவர் மகட்குச் சலாமிடச்சென்றது உலகியனிகழ்தற்பொருட்டும் அவளிடத்துத் தமக்குள்ள அன்பின் மிகுதிதோன்றுதற்பொருட்டும் என்க. சொக்கு - அழகு, ஆதலால் சொக்கன் என்பது சுந்தரர் என்னும் பொருளது. அடருமிருட்டுக்கிரீவமட்டாக்கிய அழகிய சொக்கன் என்பதில் அழகு உயிர்களின்மீதுள்ள பெருங்கருணையைக்குறித்தது. அங்கயற்கண்ணியை முருகவேள் காக்கக்கடவர் என்பது கருத்து. புலோமசை - புலோமன் என்னும் அசுரனிடத்துப் பிறந்தவள். சூர்ப்புயல்என்றும்பாடம். சூர் - தெய்வப்பெண். புலோமசையென்கிற தெய்வப்பெண் என்க. மேரு இவ்விடத்து மந்தரமலையையுணர்த்திற்று. தாப்பு - வலித்தல். தீர்த்தன் - தேவன், அது இவ்விடத்துத் திருமாலைக்குறித்தது. (௫)

நான்முகன்.

மேகப் பசுங்குழவி வாய்மடுத்
துண்ணவும் விட்புலம் விருந்தயரவும்
வெள்ளமுதம் வீசுங் கருந்திரைப்
பைந்துகில் விரித்துடுத் தூத்திவிரியும்
நாகத்து மீச்சுடிகை நடுவட்
கிடந்தமட நங்கையைப் பெற்றுமற்றங்

நாகணைத் துஞ்சுதன் றந்தைக்கு
 வந்துதவு நளினக் குழந்தைகாக்க
பாகத்து மரகதக் குன்றொன்றோர்
 தமனியக் குன்றொடு கிளைத்துநின்ற
பவளத் தடங்குன் றுளக்கண்ணதென்றப்
 பராஞ்சுடர் முடிக்கு முடிமூன்
றுகத் தமைத்துப்பி னொருமுடிதன்
 முடிவைத் தணங்கரசு வீற்றிருக்கும்
அபிடேக வல்லியை யளிக்குல
 முழக்குகுழ லங்கயற் கண்ணமுதையே.

(இ - ள்.) மேகம்-மேகங்களாகிய, பசுங்குழவி-இளையகுழந்தை, வாய் மடுத்து உண்ணவும் - வாய்வைத்துப்பருகவும், விண்புலம் - விண்ணுலகத்தார், விருந்து அயரவும் - விருந்துண்ணவும், வெள் அமுதம்வீசும் - வெண்மையாகிய அமிர்தத்தைக் கொடுக்கின்ற, கரு திரை - பெருங்கடலாகிய, பைதுகில் - பசிய ஆடையை, விரித்து உடுத்து - விரித்துத்தரித்து, உத்திவிரியும் - படப்பொறிபரந்த, நாகத்து - ஆதிசேஷனுடைய, மீ - மேலாகிய, சுடிகைநடுவண்கிட ந்த - உச்சிநடுவேகிடந்த, மடநங்கையை - மடப்பத்தையுடைய பெண்ணை, பெற்று - ஈன்று, அ - அந்த, நாக அணை - சர்ப்பசயனத் தில், துஞ்சு - யோகநித்திரைசெய்கின்ற, தன் தந்தைக்கு - தன் தந் தையாகிய திருமாலுக்கு, உவந்து உதவும் - மகிழ்ந்து கொடுத்த, நளினம் - தாமரை மலரிலிருக்கிற, குழந்தை - பிள்ளையாகியபிரமன், பாகத்து - ஒருபாகத்தில், மரகதக்குன்று ஒன்று - பச்சைமலை யொ ன்று, ஓர் தமனியக்குன்றொடு - (மற்றொருபாகத்தில்) ஒருபொன் மலையுடனே, கிளைத்துநின்ற - கிளைவிட்டுநின்ற, தடம் - பெரிதா கிய, பவளக்குன்று - ஒரு பவளமலையானது, உளக்கண்ணது என்று,

மனத்தினிடத்ததென்று, அ - அந்த, பரஞ்சுடர் - பரஞ்சோதியின், முடிக்கு - திருமுடிகளுக்கு, மூன்று முடி - மூன்று மகுடங்களை, ஆகத்து அமைத்து - முன்னே தன்மார்பின்கண்ணே யமைத்து, பின்-அதன்பின்னே, ஒருமுடி - ஒருமகுடத்தை, தன்முடிவைத்து-தன் சிரமீது தாங்கி, அணங்கரசு - தெய்வத்தன்மையாகிய அரசிய லில், வீற்றிருக்கும் - எழுந்தருளியிருக்கிற, அபிடேகவல்லியை - அபிஷேகவல்லியை, அளிகுலம் - வண்டின் கூட்டங்கள், முழக்கு - முழங்குகின்ற, குழல் - கூந்தலையுடைய, அம்கயல்கண் அமுதை - அங்கயற்கண்ணியென்னும் அமிர்தத்தை, காக்க - காத்திடுக. எ-று.

நளினக்குழந்தை அங்கயற்கண்ணமுதைக் காக்க எனமுடிக்க. வெள்ளமுதம் என்பது நீர், அமிர்தம், என மேகத்திற்கும் விட்புலத் திற்கும் ஏற்பப்பொருள் கொள்க. பிரமன் தான்பெற்ற பூதேவி யைத் தன் தந்தைக்குக் கொடுத்த பேதைமைதோன்ற அவனைக்குழ ந்தை என்றார். நளினம் - திருமாலின் உந்தித்தாமரை, கருந்திரை-கருங்கடல் எனினும் ஆம், விட்புலம் இடவாகுபெயர். கருமை - பெருமை. மரகதக்குன்று என்றது திருமாலை. தமனியக்குன்று என்றதுபிரமனை. பவளத்தடங்குன்று என்றதுசிவபெருமானை. தடா தகைப்பிராட்டி முத்தனத்தோடு அவதரித்தமைபற்றி, இவ்வாறு பிர மவிஷ்ணுக்களை இருபுறத்தும் உடைய சிவபெருமான் தம்முள்ளத் தில் வீற்றிருத்தலால், அவருடைய மும்முடிகளுக்கும் மும்மகுடங் களைச்சூட்டிப் பின்னர்த்தானும் முடிசூடி வீற்றிருப்பதாகக் கற்பித் துக் கூறினர். கற்புடை மாதர்தமக்கு எவ்வகைப்பெருமை வாய்ப் பினும் தங்கணவரை முன்னர் உபசரித்தல்வேண்டுமாதலால், இவ் வாறு கூறப்பட்டது. முழங்கு, முழக்கு என வலித்தல்பெற்றது. அளி, குலம், என்னு மிரண்டும் வடசொற்களாதலால், இயல்பாய்ப் புணர்தல் வேண்டுமாயினும் இவ்விடத்துச் சந்தவின்பம் நோக்கி, மிக்குப் புணர்ந்தது. அளிக்குலமுழக்கு என்பதனை, அளிக்குலம்

உழக்கு எனப்பிரித்து அளிக்குலத்தால் துவைக்கப்பட்ட எனப் பொருள் கூறினுமாம். சிவபெருமான் தேவி திருவுளத்தினின்று நீங்காமையால் உளக்கண்ணது என்றார். இது இறைவி, இறைவன் இவ்விருவரது ஒற்றுமை நிலையைக்குறித்தது. அணங்கரசு வீற்றிருக்கும் என்பதற்குப் பெண்ணரசியாய் வீற்றிருக்கும் என்றுரைப்பினு மமையும். பிரம விஷ்ணுக்களோடு கூடின சிவ பெருமான் தன்னுள்ளத்தில் வீற்றிருக்கின்றன ரென்று அவரது மூன்று திருமுடிகளுக்கும் மூன்று மகுடங்களாகத் தன் முத்தனங்களையும் முன்னர் அமைத்து, அதன்பின்னர்த் தான்முடிசூடிப் பெண்ணரசு செய்கின்ற மீனாக்ஷியம்மையைத் தன்மகளாகிய பூதேவியைத் தன் தந்தையாகிய திருமாலுக்குத் தேவியாகக்கொடுத்த நான்முகன் காக்ககடவன் என்பது கருத்து. உத்தி - பாம்பின் படப்பொறி, இது "உத்தியுந் துத்தியு மரகபடப்பொறி" என்பத னலினிது விளங்கும். நாகம் பாம்பின் பொதுப்பெயராயினும்," "சுடிகை நவெட்கிடந்த மடநங்கை" என்ற குறிப்பால் ஆதிசேடனைக்குறித்தது. மடநங்கையென்பதும் அவ்வாறே "நாகத்து மீச் சுடிகை நவெட்டகிடந்த என்னும் விசேடணத்தால் நிலமகளைக் குறித்தது. பவளம் ப்ரவாளம் என்னும் வடசொற்றிரிபு.

## தேவேந்திரன்.

சுழியுங் கருங்கட் குண்டகழி
 சுவற்றுஞ் சுடர்வேற் கிரிதிரித்த
தோன்றற் களித்துச் சுறவுயிர்த்த
 சொக்கப் பெருமான் செக்கர்முடி
பொழியுந் தரங்கக் கங்கைவிரை
 புனல்கால் பாய்ச்சத் தழைந்துவிரி

புவனந் தனிப்பூத் தருள்பழுத்த
பொன்னங் கொடியைப் புரக்கவழிந்
திழியுந் துணர்க்கற் பகத்தினற
விதழ்த்தேன் குடித்துக் குமட்டியெதி
ரெடுக்குஞ் சிறைவண் டுவட்டறவுண்
டிரைக்கக் கரைக்கு மதக்கலுழிக்
குழியுஞ் சிறுக ணேற்றுருமுக்
குரல்வெண் புயலுங் கரும்புயலுங்
குன்றங் குலைய வுகைத்தேறுங்
குலிசத் தடக்கைப் புத்தேளே.

(இ - ள்.) வழிந்து இழியும் - வழிந்தொழுகுகின்ற, துணர் கற்பகத்தின் - கொத்துகளுள்ள கற்பகத்தருவினிடத்து, நறவிதழ் தேன் - மணமுள்ள பூந்தேனை, குடித்து குமட்டி - உண்டு குமட்டி, எதிரெடுக்கும் - எப்பமிடுகின்ற, சிறை வண்டு - சிறையுள்ள வண்டுகள், உவட்டற - பெருக்கெடாநிற்ப, உண்டு இரைக்க - உண்டு ஒலிக்க, கரைக்கும் - மதச்சுவட்டைக் கரைத்துச்செல்கின்ற, மதக்கலுழி - மதவெள்ளத்தையும், குழியும் சிறுகண் - ஆழ்ந்த சிறுகண்களையும், ஏற்று உருமு - இடியேற்றின், குரல் - குரலையுமுடைய, வெண் புயலும் - வெள்ளையானையையும், கரும்புயலும் - கருமுகிலையும், குன்றம் குலைய - மலைகளுருக்குலையுமாறு, உகைத்து ஏறும் - ஏறிநடத்துகின்ற, குலிசம் - வச்சிராயுதமேந்திய, தடக்கை - பெரிய கையையுடைய, புத்தேள் - இந்திரன், சுழியும் - சுழிக்கின்ற, கருங்கண் - கருமையான கண்களையுடைய, குண்டு அகழி - ஆழமாகிய கடலை, சுவற்றும் - வற்றச்செய்த, சுடர் வேல் - கதிர்வேலை, கிரி கிரித்த - கிரௌஞ்சமலையைக்கெடுத்த, தோன்றற்கு - இளையபிள்ளையார்க்கு, அளித்து - கொடுத்தருளி, சுறவுயர்த்த - மீனக்கொடி

யை எடுத்த, சொக்கப்பெருமான் - சொக்கேசரது, செக்கர் முடி - செஞ்சடை முடியில், பொழியும் - பொழியாநின்ற, தரங்கக்கங்கை- அலையுள்ள கங்கை, விரை - விரைகின்ற, புனல்-நீரை, கால்பாய்ச்ச- காலால் பாய்ச்சினமையால், தழைந்து விரி - செழித்து விளங்கு கின்ற, புவனம் - புவனங்களை, தனி பூத்து - தானே யீன்று, அருள் பழுத்த - திருவருள் கனிந்த, அம்பொன் கொடியை - அழகிய பொற்கொடியை, புரக்க - காத்திடுக. எ - று.

குலிசத்தடக்கைப் புத்தேள் பொன்னங்கொடியைப்புரக்க என முடிக்க. பொன்னங்கொடியில் அம் சாரியை யெனினுமாம். சிவபெருமான் பாண்டியனாகி மீனக்கொடியை யுயர்த்தினமையால் சுறவுயர்த்த சொக்கப் பெருமானென்றும், தேவியது ஊடல் தணிவித்தற்கு வணங்கும்போது தேவி திருவடிகள் இறைவரது சடையி லுறுத்த அங்குள்ள கங்கைநீர் பாய்ந்து புவனத்திலுள்ள வுயிர்கள் செழித்தமையால் கங்கை விரிபுனல் கால்பாய்ச்ச விரிபுவனம் என்றும் கூறினர். எதிரெடுத்தல் ஒரு சொன்னீர்மைத்து. உவட்டறவுண்டு எனவும் பாடம். இதற்குப் பெருக்கடங்க வுண்டென்பது பொருள். குமட்டல் - உண்டவுணவு சீரணியாமல் மேனோக்கி யருவருத்தற்றன்மை. தேவேந்திரன் அங்கயற்கண்ணியைக் காக்கக்கடவனென்பது கருத்து. செக்கர் - செந்நிறம். விரை - வினைத்தொகை. இதழ் - பூமடல், அது இங்கு மலருக்காயினமையால் சினையாகுபெயர். உருமு என்பதில் உகரம் சாரியை. மேருவைச் செண்டாலடித்தமையால் உக்கிரவழுதியைக் "கிரி திரித்த தோன்றல்" என்றும், அவர் வேல்வருணன் விட்ட கடலை வற்றச்செய்தமையால் "சுழியுங் கருங்கட் குண்டகழிசுவற்றுஞ்சுடர்வேல்" என்றும், அது இறைவனு லளிக்கப்பட்டதாயினும் இறைவனோடு டிறைவிக்குள்ள ஒற்றுமையால், "கிரி திரித்ததோன்றற் களித்து" என்றும் கூறினர்.

## திருமகள்.

வெஞ்சூட்டு நெட்டுடல் விரிக்கும் படப்பாயன்
 மீமிசைத் தூஞ்சு நீல
மேகத்தி னுகத்து விடுசுடர்ப் படலைமணி
 மென்பர லுறுத்த நொந்து
பஞ்சூட்டு சீறடி பதைத்துமதன் வெங்கதிர்
 படுமிள வெயிற்கு டைந்தும்
பைந்துழாய்க் காடுவிரி தண்ணிழ லொதுங்குமோர்
 பசுங்கொடியை யஞ்ச லிப்பாம்
மஞ்சூட் டகட்டு நெடு வரன்முகடு
 துருவுமொரு மறையோதி மஞ்சலிக்க
மறிதிரைச் சிறை விரியு மாயிரமு
 கக்கடவுண் மந்தாகி னிப்பெயர்த்த
செஞ்சூட்டு வெள்ளோ திமங்குடி யிருக்கும்வளர்
 செஞ்சடைக் கருமி டற்றுத்
தேவுக்கு முன்னின்ற தெய்வத்தை மும்முலைத்
 திருவைப் புரக்க வென்றே.

(இ - ள்.) மஞ்சு ஊட்டு - மேகம் தவழ்கின்ற, அகடு - இடமுள்ள, நெடுவான் முகடு - பெரிய அண்டகூட வளை, துருவும் - (இறைவன்) முடியைத் தேடச்சென்ற, ஒரு மறை ஓதிமம் - ஒரு வேதமுணர்ந்த அன்னப்பறவை, சலிக்க - (அதனைக் காணமாட்டாமல்) சலியாநிற்ப, மறி திரைச்சிறை - சுருள்கின்ற அலையாகிய சிறைகள், விரியும் - விரிகின்ற, ஆயிரம் முகம் - பல கிளைகளுள்ள, கடவுள் - தெய்வத்தன்மையான, மந்தாகினி பெயர்த்த - கங்கை

யென்னும் பெயருள்ள, செஞ்சூடு - செம்மையாகிய உச்சியையுடைய, வெள் ஓதிமம் - வெண்மையான அன்னம்போல்வாள், குடி இருக்கும்-குடியிருக்கின்ற, வளர் செஞ்சடை - பரந்த செஞ்சடையும், கருமிடறு-நீலகண்டமுமுள்ள, தேவுக்கு-இறைவனுக்கு, முன்னின்ற - துணையாய் நீங்காதுநின்ற, தெய்வத்தை - பரதேவதையை, மும்மூலைத் திருவை - மூன்று தனங்களையுடைய செல்வியை, புரக்க என்று - காக்கவென்று துதித்து, வெம்சூடு - வெவ்வியசூடிகையோடு கூடிய, நெடு உடல் - நெடிய உடம்புடன், விரிக்கும் படம் - விரிக்கின்ற படத்தையுமுடைய, பாயல் மீமிசை - (ஆதிசேடனாகிய) பாயலின்மீது, துஞ்சும் - யோகநித்திரைசெய்கிற, நீலமேகத்தின் - நீலமேகம்போல்பவனாகிய திருமாலின், ஆகத்து - மார்பில், விரி சுடர் - பரவுகின்ற கிரணங்களையுடைய, படலை - மாலையாகிய, மணி-கவுத்துவமணியென்கிற, மெல் பரல் - மெல்லிய பருக்கைக்கல், உறுத்த-உறுத்தலால், நொந்து - வருந்தி, பஞ்சு ஊட்டு - செம்பஞ்சுக் குழம்பூட்டப்பெற்ற, சீறடி பதைத்தும் - சிற்றடிகள் பதறியும், அதன் வெம் கதிர் படும் - அதின் வெவ்விய கிரணத்தால் உண்டாகின்ற, இளவெயிற்கு - இளவெய்யிலுக்கு, உடைந்தும் - இளைத்தயர்ந்தும், பை துழாய் காடு - பசிய துளவக்காடானது, விரி - பரப்புகின்ற, தண்நிழல் - குளிர்ந்தநிழலில், ஒதுங்கும் - ஒதுங்குகின்ற, ஓர்பசுங்கொடியை - ஒருபச்சைக்கொடிபோல்பவளாகிய திருமகளை, அஞ்சலிப்பாம் - கைகுவித்து வணங்குவோம் யாம். எ - று.

மும்மூலைத்திருவைப்புரக்கவென்று பைந்துழாய்க்காடு விரிதண்ணிழ லொதுங்கும் பசுங்கொடியை யஞ்சலிப்பாம் என முடிக்க. பாம்பினுச்சியில் ஒளியுள்ள மணிகளிருத்தலால் வெஞ்சூடெனப்பட்டது. நீலமேகம் உவமையாகுபெயர். மிக மெல்லிய தாமரை மலரையே யிருக்கையாகப்பெற்று வாழ்கின்ற மெல்லியலாதலால் அவளது சீறடிக்கு மணிமுதலியன விரோதிகளாயின.

மறையோதி மஞ்சலிக்க வெள்ளோதி மங்குடியிருக்கும் செஞ்சடை என்பது இறைவர் திருமுடி பிரமனுக்கு அரிதாயினும் கங்கைக்கு எளிதாயிருந்த தென்பதைக்குறித்து நின்றது. இறைவன் சடை ஒரு அன்னத்துக்கு அரிதாயும் ஒரு அன்னத்துக்கு எளிதாயுமிருந்தது எனச் சொன்னயந் தோன்றுமாறறிக. இறைவனுக்குத் தனது திருவருள் முன்னின்று எல்லாவற்றையும் நடத்துகையாலும் அவ்வருளே தனது சத்தியாதலாலும் "கருமிடற்றுத் தேவுக்கு முன்னின்ற தெய்வத்தை" என்றார். "சிவமெனும்பொருளு மாதிசத்தியொடுசேரி னெத்தொழிலும் வல்லதாம் - இவள்பிரிந்திடி னியங்குதற்கு மரிதரிதெனு மறையினாக்குமால்" என்றார் பிறரும். மும்மூலத்தடாதகையைத் திருமகள் காக்கவென்பது கருத்து. விடவெம்மையோடு கூடினமுகத்துக் கயலிலுள்ளதாதலால் ஆதிசேடனது குட்டை "வெஞ்சூடு" என்றும், இச்சேடனது உடலின் நெடுமை மூன்றுலகுக்கு யோசனையாதலால் "நெட்டுடல்" என்றும் கூறினர். இதனை; "கறங்காழி காவெட்டிலக்கமி யோசனைகட்செவியின், பிறங்காக மும்மையிலக்கமியோசனை பேருலகில், இறங்காழி மேகமெனவே யரங்கத்தி லெம்மையுதில் - உறங்காக நீளமைந்தைப்பதினாயிரயோசனையே" "பாற்கடலுவெட்டிலக்கமியோசனைபாற் கடலுள், மாற்கவிகோயிலகலமு மீதாந்துவானளவும், நீர்கமொரேழு திகழ்பணிமூன்று சிறந்தகலம், எற்கவினென்றனை யுத்தமர்நீள மிரண்டனையே" என்னுஞ்செய்யுட்களானுணர்க. மணியென்றது பாற்கடலிற் றோன்றிய கௌஸ்துப ரத்திநத்தை, இது திருமாலின் மார்பிற்கு ஆபரணமாயிருப்பது. சிறுமை அடிசிறடி யெனவந்தது. இது "சிலம்பணிகொண்ட செஞ்சிறடிபங்கன்" "சீறார்க்குளை மின்கள் சென்னெறியே" என்னும் திருக்கோவையார் செய்யுட்களாலும் இனிதுவிளங்கும்,

கலைமகள்.

வெள்ளித் தகட்டுநெட் டேடவிழ்த் தின்னிசை
விரும்புஞ் சுரும்பர் பாட
விளைநறவு கக்கும் பொலன் பொருட்
டலர்கமல வீட்டுக்கொழிக் தெடுத்துத்
தெள்ளித் தெளிக்குந் தமிழ்க்கடலி னன்பினந்
திணையென வெடுத்த விறைநூற்
றெள்ளமுது கூட்டுணுமொர் வெள்ளோதி மத்தினிரு
சிறடி முடிப்பம் வளர்பைங்
கிள்ளைக்கு மழலைப் பசுங்குதலை யொழுகுதீங்
கிளவியுங் களி மயிற்குக்
கிளரிளஞ் சாயலு நவ்விக்கு நோக்கும்
விரி கிஞ்சுகச் சூட்டரசனப்
பிள்ளைக்கு மடநடையு முடனாடு மகளிர்க்கொர்
பேதைமையு முதவி முதிராப்
பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளுமொரு பாண்டிப்
பிராட்டியைக் காக்க வென்றே.

(இ - ள்.) வளர் - வளராநின்ற, பைகிள்ளைக்கு - பசிய கிளிகட்கு, மழலை பசுகுதலை - இனிய இளமையான மழலைத்தன்மை, ஒழுகு - ஒழுகாநின்ற,தீகிளவியும்-இன்சொற்களையும், களி மயில்கு-களிக்கின்ற மயில்களுக்கு, கிளர் - விளங்காநின்ற, இள சாயலும் - இளமையாகிய சாயலையும், நவ்விக்கு - மான்களுக்கு, நோக்கும் - பார்வையையும், விரிகிஞ்சுகம் - விரிந்த முருக்கமலர்போன்ற, சூடு-உச்சியையுடைய, அரசு அன்னப்பிள்ளைக்கு - அரசவன்னக்குஞ்சுகளுக்கு, மடநடையும் - மடப்பமாகிய நடையினையும், உடன் ஆடும்-

தன்னுடன் விளையாடுகின்ற, மகளிர்க்கு - பெண்களுக்கு, ஓர்பேதைமையும் - ஒரு பேதைத்தன்மையையும், உதவி - கொடுத்தருளி, முதிரா - முதிராத, பிள்ளைமயில் - பிள்ளைப்பருவத்தில், வள்ளன்மை - வள்ளற்றன்மையை, கொள்ளும் - தன்னிடத்திற்கொண்ட, ஒரு - ஒப்பற்ற, பாண்டிப்பிராட்டியை - பாண்டிப்பெருமாட்டியை - காக்கஎன்று. காக்கவென்றுவாழ்த்தி, வெள்ளித்தகடு - வெள்ளித்தகடுபோன்ற, நெடுஏடு அவிழ்த்து - பெரியஇதழ்களை யலர்த்தி, இன்இசை-இனிமையான பண்களை, விரும்பும் - யாவரும்விரும்புகின்ற, சுரும்பர் - வண்டுகள், பாட - பாடுதலால், விளைநறவு - ஊறுகின்ற தேனை, கக்கும் - உமிழ்கின்ற, பொலன் - அழகாகிய, பொகுட்டு - பொகுட்டோடு, அலர் - விரிந்த, கமலம் - வெண்டாமரைமலராகிய, வீடு - வீட்டில், கொழித்துஎடுத்து - ஆராய்ந்தெடுத்து, தெள்ளிதெளிக்கும் - நுண்ணிதாய்த் தெளிவிக்கத்தக்க, தமிழ்கடலின் - தமிழ்மொழியாகிய கடலினின்றும், அன்பின்ஐந்திணைஎன - அன்பினைந்திணையென்று, எடுத்த - தொடங்கின, இறைநூல் - இறையனாகப்பொருளென்னும் நூலாகிய, தெள்அமுது - தெளிந்த அமிர்தத்தை, கூட்டுணும் - கொள்ளைகொண்டுண்ட, வெள் ஓதிமத்தின், வெள்ளையன்னம்போலும் நாமகளது, இருசீறடி - இரண்டுசிற்றடிகளையும், முடிப்பம் - எமது சென்னியில் சூடுவோம். எ - று.

பாண்டிப்பிராட்டியைக் காக்கவென்று இறைநூற்றெள்ளமுதுகூட்டுணு மோர் வெள்ளோதிமத்தினிரு சீறடி முடிப்பம் எனமுடிக்க. வெண்கமலவீட்டில் வெள்ளோதிமம் என இயைக்க. கூட்டுணல் - ஒருசொல். தெள்ளித்தெளிக்குந் தமிழ் - அகத்தியமுனிவனை நோக்கி, பொதிகையை யடைந்து அங்குறைவாயாக வெனப் பார்வதியார்திருமணத்திலேவியபொழுது அம்முனிவருக்கு இறையனார் அருளிச்செய்த தமிழ்மொழித் தேர்ச்சியை. எல்லாவெழுத்துக்களும் தோன்றுதற்குக் காரணமாகிய மாயையினையும்

தனிதுசத்தியால் நடத்தும் இறைவனது திருவாக்காதலால் அவ்வெழுத்துக்களே வடிவமாகக்கொண்ட நாமகள் அவற்றின் சொற்றொடர்ப்பனுவலில் அழிவின்றிநிற்க, கற்றுவல்லோர் அந்நூற்பயன் றுய்ப்பதை இறைநூற்றெள்ளமுது கூட்டுணும்வெள்ளோதிமமென்றார். இறைநூல்என்றது இறையனாரகப்பொருளை. அதின்முதற்சூத்திரம். "அன்பினைந்திணையென்றறுபது சூத்திரம்" என்றுதொடங்கப்பெற்றது. பாண்டிப்பிராட்டி - பாண்டிநாட்டுக்கரசி. பாண்டிப்பிராட்டியாகிய மீநாஷியம்மையைக் காக்கவென்று நாமகள் திருவடிகளைச் சிரசிற் சூடுவோம் என்பது கருத்து. (௮)

காளி

வடிபட்ட முக்குடுமி வடிவே றிரித்திட்டு
வளைகருங் கோட்டு மேயாடு
மகிடங் கவிழ்த்துக் கடாங்கவிழ்க் குஞ்சரக்கல்
மால்யானை விங்க வாங்குந
கொடிபட்ட கொடுநான் ஞுமப்பிற் குடைந்தெனச்
சுடுநடைக் கனலி தூண்டுரு
சூழுலகன் முடங்குளை மடங்கலை புதைத்தேறு
சூரரிப் பிணவு காக்க
பிடிபட்ட மடநடைக் கேக்கற்ற கூந்தற்
பிடிக்குழாஞ் சுற்ற வொற்றைப்
பிறைமருப் புடையதொர் களிற்றினைப் பெற்றெந்தை
பிட்டுண்டு கட்டுண்டு நின்
றடிபட்ட திருமேனி குழையக் குழைத்திட்ட
வணிமணிக் கிம் புரிக்கோ
டாகத் ததாகக் கடம்பாட விக்குள்விளை
யாடுமொர் மடப்பிடியையே.

(இ - ள்.) பிடிபட்ட - தன்வசமான, மடநடைக்கு - இள நடைக்கு, ஏக்கற்ற - (தமக்கில்லையென்று) ஏக்கற்ற, கூந்தல் - கூந் தலையுடைய, பிடிகுழாம் - பெண்யானைத்திரள்போலும் தோழியர், சுற்ற - சூழாநிற்க, பிறை - பிறைபோன்ற, ஒற்றைமருப்பு உடை யது - ஒருகொம்புள்ளதாகிய, ஓர்களிற்றினை - ஒருயானைக்கன்றை, பெற்று - ஈன்று, எந்தை - எம்பெருமானது, பிட்டுஉண்டு - பிட் டினையுண்டு, கட்டுண்டுநின்று - பிணிப்புண்டுநின்று, அடிபட்ட - பிரம்படியேற்ற, திருமேனி - திருவுருவயானது, குழைய - குழை யும்படி, குழைத்திட்ட - நெகிழ்த்திட்ட, அணி - அழகாகிய, மணி கிம்புரி - இரத்தினக்கிம்புரியையணிந்த, கோடு - இரண்டுகொம் புகள், ஆகத்தது ஆக - மார்பினிடத்தனவாக, கடம்ப அடவிக்குள் - கடம்பவனத்தில், விளையாடும் - இறைவனுடன் விளையாடுகின்ற, ஓர்மடப்பிடியை - ஒரு இளமையாகிய பெண்யானையை, வடி பட்ட - கூர்மைபொருந்திய, முக்குடுமி - முத்தலையுள்ள, வடிவேல்- வடித்தவேற்படையை, திரித்திட்டு - வலஞ்சுற்றிவிடுத்து, வளை - வளைந்த, கருங்கோடு - கருங்கொம்புகளையுடைய, மோடு - பெரு மையுள்ள, மகிடம்-மகிடனென்னு மசுரனை, கவிழ்த்து - குப்புறவிழு த்தி, கடாம்கவிழ்க்கும் - மதநீரைச்சொரிகின்ற, சிறுகண் - சிறியக ண்களையுடைய, மால்யானை - பெருமையுள்ள யானை (மத்தகம்போ லும் தனங்கள்), வீங்க - விம்முதலால், வாங்கும் - வளைகின்ற, துடி பட்ட - உடுக்கைநடுவிடத்தை யொத்த, கொடி - கொடிபோன்ற; நுண் - நுட்பமான, நுசுப்பிற்கு-இடைக்கு, உடைந்தென-தோற்ற தென்று, சுடு - சுடுகின்ற, கடைக்கனலி - கடைக்கண்ணெருப்பை, தூண்டும் - மூள்விக்கின்ற, சுழல்கண் - சுழலாநின்ற கண்களையும், நுடங்குஉளை - முடங்கிய புறமயிரையுமுடைய, மடங்கலை - சிங் கத்தின்மீது, உகைத்து ஏறு - குதித்தேறுகின்ற, சூர் அரிப்பிணவு - அச்சத்தைத்தருகின்ற பெண்சிங்கம், (காளியம்மை) காக்க - காத் திடுக. எ - று,

கடம்பாடவிக்குள் விளையாடுமடப்பிடியைச் சூரரிப்பிணவு காக்கவெனமுடிக்க. கடைக்கனலி ஊழித்தீயெனினுமாம். தன்னை உவமிக்கத்தக்க இடை கொங்கையாகிய யானைவீக்கத்தால் இளைக்க அதுகண்டு காளியம்மைவாகனமாகிய சிங்கம்வெருண்டு கடைக்கனலிதாண்டலும் அதனையடக்க அதனையூர்தியாகக் கொண்ட அரிப்பிணத்தெய்வம் எனக் கற்பித்துக்கூறினர். இறைவி கடம்பாடவியில் வீற்றிருந்தமையால் பிடியாகவும், யானைமுகனாகிய மூத்தபிள்ளையாரை யீன்றமையால் ஒற்றைப்பிறை மருப்புடைய தோர்களிற்றினைப்பெற்று எனவும், தோழியர் சூழநின்றனமயால் - கூந்தற்பிடிக்குழாம் சுற்ற எனவும் கூறினர். கட்டுண்டதென்பது வையையாறடைக்குங் காலத்தில் செம்மனச்செல்வி என்னும் வந்திக்கு இறைவன் கூலியாளாகவந்து பாண்டிவேந்தனது கட்டுப்பாட்டின் வழிநின்றதை. திருமேனிகுழையவென்றது கச்சியில் இறைவி பூசித்து நோற்றிருந்தவழி இறைவனேவலால் கம்பையாறு பெருகி, பூசனைக்குரிய லிங்கத்தைக் கரைக்கவந்தபோது அதனை இறைவி தழுவிக்கொள்ள அவளது முலைத்தழும்பும் வளைத்தழும்பும் இறைவனேற்று திருமேனிகுழைந்து காதல்பெருகிய வரலாற்றை. ஒருகால் பிட்டுண்டுகட்டுண்டு வன்மையாய் நின்றதிருமேனி மற்றொருகால் திருமுலையும் திருவளையும் படுதலும் மென்மையாய்க்குழைந்தது என வியந்தவாறாயிற்று. பிடிக்குக்கொம்பில்லையாதலால் கோடுமுகத்ததென்னாமல் கோடுஆகத்ததென்றார். இக்கோடும் கட்டுண்டுநின்றடிபட்ட திருமேனியின் வன்மையினையும் குழையச்செய்த வன்மையினையுடையதாதலால் இறைவி இறைவனின் வலியளெனை ஒருசாரார் கூறும் கொள்கையை வற்புறுத்தியவாறாயிற்று. காளியம்மை அங்கயற்கண்ணம்மையைக் காக்க வென்பது கருத்து. உடைந்ததென என்பது உடைந்தென எனத் தொகுத்தலாயிற்று. மூக்குடுமிவேல் - மூத்தலைச்சூலம். மால்யானை - மதமயக்கத்தையுடைய யானையெனினுமாம். யானை உவமையாகு

பெயராய்த் தனத்தை யுணர்த்திற்று. அரிப்பிணவு உவமையாகு பெயர். வலிய அசுரனாகிய மகிடனைக்கொன்றமையால் அவளது வீரத்தன்மையை வியந்து "அரிப்பிணவு" என்றார். ஒற்றைமருப்பு எனஇயையும். கிம்புரிக்கோடு என்றது திருத்தனங்களை. கிம்புரி - யானைமருப்பிற்கட்டும்பூண். சுழல்கண் வினைத்தொகை நிலைத்தொடர். முடங்குளையுமது. பிடி காட்டில் விளையாடலியற்கையாதலால், "கடம்பாடவிக்குள் விளையாடுமொர்மடப்பிடி" என்றார். (௬)

சத்தமாதர்கள்.

கடகளி றுதவுக பாய்மிசைப் போர்த்தவள்
கவிருவி துறுகலின் வாரியைத் தூர்த்தவள்
கடல்வயி றெரியவொள் வேலினைப் பார்த்தவள்
கடிகமழ் தருமலர் தார்முடிச் சேர்த்தவள்
இடியுக வடலரி யேறுகைத் தார்த்தவள்
எழுதரு முழுமறை நூலினிற் கூர்த்தவள்
எயிறுகொ டெழுதெழு பாரினைப் பேர்த்தவள்
எனுமிவ ரெழுவர்க டாண்முடிச் சூட்டுதும்
குடமொடு குடவியர் பாணிகைக் கோத்திடு
குரவைபு மலதொர்ப ஞமுடிச் சூட்டருள்
குதிகொள நடமிடு பாடலுக் கேற்பவொர்
குழலிசை பழகளி பாடிடக் கேட்டிடை
மடலவிழ் தாளபா ருவெடுத் தூற்றிட
மழகளி றெனவெழு கார்முகச் சூற்புயல்
வரவரு மிளையகு மாரியைக் கோட்டெயின்
மதுரையில் வளர்தவு மாரியைக் காக்கவே.

(இ - ள்.) கடம் - மதங்களையுடைய, களிறு - யானையினாலே, உதவும் - கொடுக்கப்பட்ட, கபாய் - தோலாகிய சிராவை, மிசைப் போர்த்தவள் - மேலே போர்த்தவளாகிய ருத்திரியும், கவி - குரங்குகளினாலே, குவி - குவிக்கப்பட்ட, துறு - நெருங்கிய, கலின் - கற்களாலே, வாரி - சமுத்திரத்தை, தூர்த்தவள் - அடைத்தவளாகிய அபிராமியும்; கடல் - சமுத்திரத்தினது, வயிறு எரிய - வயிறெரியும்படிக்கு, ஒள் - பிரகாசம்பொருந்திய, வேலினை - வேலாயுதத்தை, பார்த்தவள் - பார்த்தவளாகிய கௌமாரியும், கடி - வாசனை, கமழ் - பரிமளிக்கின்ற, தரு - கற்பகத்தருவினுடைய, மலர் - மலராற்றொடுத்த, தார் - மாலையை, முடி - திருமுடியில், சேர்த்தவள் - சூடிக்கொண்டவளாகிய இந்திராணியும், இடியுக - இடிகளுதிரும்படிக்கு, அடல் - வெற்றியையுடைய, அரி ஏறு - ஆண்சிங்கத்தை, உகைத்து - செலுத்தி ஆர்த்தவள் - ஆரவாரிக்கின்றவளாகிய துர்க்கையும், எழுதரு - எழுதக்கூடாத, முழுமறை - வேதமுழுமையும், நூலினில் - ஒழுங்குபட, கூர்த்தவள் - கைவந்தவளாகிய நான்முகியும், எயிறுகொடு - பற்களினாலே, உழுது - உழுதலைச்செய்து, எழுபாரினை - சப்தலோகங்களையும், பேர்த்தவள் - பேர்த்தவளாகியவராகியும், எனும் - என்று சொல்லப்படுகின்ற, எழுவர்கள் - சப்தமாதர்களாகிய, இவர் - இவர்களுடைய, தாள் - திருவடிகளை, குடமொடு - குடக்கூத்துடனே, இடவியர் - இடைச்சியர்களுடைய, பாணி - கைகளிலே, கைகோத்திடும் - கையைக்கோதிடுகின்ற, குரவையும் - குரவைக்கூத்தும், அலது - அல்லாமலும், ஓர் - ஒப்பற்ற, பணைமுடி - (காளியனது) படமுடியினுடைய, சூட்டருள் - உச்சியில், குதிகொள - காற்குதிபொருந்த, நடமிடும் - நிர்த்தனஞ் செய்கின்ற, பாடலுக்கேற்ப - பாடற்கேற்க, ஓர் ஒப்பற்ற, குழலிசை - வேய்ங்குழலின திசையை, பழகு - பழகுகின்ற, அளி - வண்டுகளானவை, 'பாடிடக்கேட்டு - (இசையைப்) பாடக்கேட்டு, உடை - உடைந்து, மடலவிழ் - இதழ்விரிகின்ற,

துளவம் - துளசிமாலையானது, நறு-தேனை, எடுத்தூற்றிட - வாரிச்சொரிய, மழவு - இளமையாகிய, களிறு என - களிற்றானையைப் போல, எழும் - உண்டாகிற, கார்முகம் - இந்திரதனுசையுடைய, சூற்புயல் - சூற்கொண்ட மேகத்தைப்போலுந் திருமேனியையுடைய திருமாலானவர், வர - அவதரிக்க, வரும் - அவர்க்குப் பின்னரவதரித்த, இளையகுமாரியை - இளையகுமாரியாகிய, கோட்டு - கொம்மைகளையுடைய, எயில் - மதிலாற் சூழப்பட்ட, மதுரையில் - மதுரையென்னுந் தலத்தில், வளர் - வளருகின்ற, கௌமாரியை - கௌமாரியாகிய மீநாக்ஷிதேவியை, காக்க - பாதுகாக்கும்பொருட்டு, முடி சூட்டுதும் - சிரசிற் சூட்டிக்கொள்வோம். எ - று.

மதுரையில்வளர் கவுமாரியைக்காக்க எழுவர்கள் தாண்முடி சூட்டுதும் என முடிக்க. யானை யுருவத்தையுடைய கஜாசுரன் வரங்கேட்டபோது, சிவபெருமான் அவனைநோக்கி, நீயெவ்விடத்துங் கொல்லப்படாய், என் சந்நிதியையடைந்தால் கொல்லப்படுவாய் என்று வரங்கொடுத்தார், பின்னொருகாலத்தில் தேவர்கள் அவனோடு போர்செய்யவந்து தோற்றோடிக் காசிவிசுவநாதர் சந்நிதியிற் போயொளிக்க, அவர்களைத் துரத்திக்கொண்டுபோன இவனும் வரத்தின் தன்மையைமறந்து சந்நிதியிற்செல்ல, இறைவன் அவனைக்கொன்று அவனது தோலைப் போர்த்துக்கொள்ள நேரிட்டதனாலும், இறைவன் தன்மையாலும் இறைவிக்கு முண்மையாலும் கடகளிறுதவு கபாய்மிசைப்போர்த்தவள் என்றார். குரலையும் அல்லது குழலிசைபழகு சூற்புயல் எனக்கூட்டுக. இடியுக ஆர்த்தவள் என இயையும். வாரிதூர்த்தவள் நாராயணியெனவும், மறைநூலினிற் கூர்த்தவள் அபிராமியெனவும் கூறினு மமையும். சூடுஅர் என்னும் ஈற்றுப்போலியை யேற்றமையால் டகரமிகுந்து சூட்டர் என நின்றது. சூட்டருள் குதிகொள நடமிடு என்பதற்கு உச்சியில் அருள்பெருக நடஞ்செய்த என்றுரைப்பினுமாம். கடகளிறு

என்றது கயாசுரனை. இவன் தானேசென்று மாண்டு தோலைப் போர்வையாகக்கொடுத்தமையால், "கடகளிறுதவுகபாய்" என்றார். பார்த்தவள் என்றது பிரயோகித்தவள் என்னும் பொருட்டு. குடம் - திருமாலாடல், அது "வாணன்பேரூர் மறுகிடைநடந்து நீணிலமளந் தோனாடிய குடமும்" எனச்சிலப்பதிகாரத்துப் புகார்காண்டம் கடலாட்டுக்காதையிற்கூறி யதனானு முணர்க. (௪0)

### முப்பத்துமூவர்.

அமரில் வெந்திடும வுதியர் பின்னிடுமொ
ரபயர் முன்னிடுவ னத்தொக்க வோடவும்
அளவு மெம்முடைய திறையி தென்னைமுடி
யரச ரெண்ணிலரோர் முற்றத்து வாடவும்
அகில மன்னரவர் திசையின் மன்னரிவ
ரமர ரென்னுமுனை திக்கெட்டு மூடவும்
அமுத வெண்மதியின் மரபை யுன்னியுனி
யலரி யண்ணன்முழு வெப்பத்து மூழ்கவும்
குமரி பொன்னிவையை பொருநை நன்னதிகள்
குதிகொள் விண்ணதியின் மிக்குக் குலாவவுங்
குவடு தென்மலையி னிகர தின்மைசுரர்
குடிகொள் பொன்மலை துதித்துப் பராவவுங்
குமரர் முன்னிருவ ரமர ரன்னையிவள்
குமரி யின்னமுமெ னச்சித்தர் பாடவுங்
குரவை விம்மவர மகளிர் மண்ணிலெழில்
குலவு கன்னியர்கள் கைக்கொக்க வாடவுங்
கமலன் முன்னியிடு மரச வன்னமெழு
கடலி லன்னமுட னட்புக்கை கூடவுங்

கரிய செம்மலொடு மிளைய செம்மல்விடு
கருடன் மஞ்ஞையொடோர் கட்சிக்கு ளோடவுங்,
கடவி விண்ணரசு நடவும் வெம்முனைய
களிறு கைம்மலைசெல் கொப்பத்து விழவுங்
கனக மன்னுதட நளினி துன்னியிரு
கமல மின்னுமொரு பற்பத்தண் மேவவும்
இமய மென்னமனு முறைகொ டென்னருமெ
யிறையை நன்மருகெ னப்பெற்று வாழவும்
எவர்கொல் பண்ணவர்க ளெவர்கொன் மண்ணவர்க
ளெதுகொல் பொன்னுலகெ னத்தட்டு மாறவும்
எழில்செய் தென்மதுரை தழைய மும்முலையொ
டெழுமெ னம்மனை வனப்புக்கோர் காவலர்
இருவ ரெண்மர்பதி னொருவர் பன்னிருவ
ரெனும விண்ணவர்கண் முப்பத்து மூவரே.

(இ - ள்.) அமரில் - யுத்தத்தில், வெந்நிடும் - முதுகு காட்டின, அவ்வுதியர்-அந்தச்சேரர்களுடனே, பின்னிடும் - பின்னிட்டோடுகின்ற, ஓர் - ஒப்பற்ற, அபயர் - சோழர்களும், முன்னிடு - முன்னாகவிருக்கின்ற, வனத்து - காட்டிலே, ஒக்க - சேர, ஓடவும்-ஓடிப்போகவும், முடி - கிரீடாதிபதிகளாகிய, அரசர் - அரசர்கள், எண் இலர் - அளவில்லாதவர்கள், எம்முடைய - எங்களுடைய, திறை இது - கப்பமிது, அளவுமென்ன - அளந்து கொள்ளுங்களென்று, ஓர் - ஒப்பற்ற, முற்றத்து - கடைவாயிலில், வாடவும் - மெலியவும், அவர் - அவர்கள், அகிலமன்னர் - பூலோகத்தி ராசாக்கள், இவர் - இவர்கள், திசையின் மன்னர் - திக்குப்பாலகர்கள், அவர் - அவர்கள், அமரர் - தேவர்கள், என்னும் - என்று சொல்லுகின்ற,

ஆனை - சொல்லொலியானது, திக்கெட்டும் - அஷ்டதிக்குகளையும், மூடவும் - போர்த்துக்கொள்ளவும், அலரியண்ணல் - சூரியனென வன், அமுதம் - அமுதகிரணத்தையுடைய, வெள் - வெள்ளிய, மதி யின் - சந்திரனுடைய, மரபை - குலத்தை, உன்னியுன்னி - நினை த்துநினைத்து, முழுவெப்பத்தில் மூழ்கவும் - நீங்காத வெப்பத்தில் குளிக்கவும், குமரி - கன்னியாகுமரியும், பொன்னி - காவேரியும், வையை - வையையும், பொருனை - தாம்ரபர்ணியுமாகிய, நன் னதிகள் - நல்ல நதிகளானவை, குதிகொள் - குதித்தலைக்கொண்ட, விண்ணதியின் - ஆகாயகங்கையைப்பார்க்கிலும், மிக்கு குலாவவும்- மிகுந்து சந்தோஷிக்கவும், சுரர் - தேவர்கள், குடிகொள் - வாசம் பண்ணுகின்ற, பொன்மலை - மேருமலையானது, குவடு - சிகரங்களை யுடைய, தென்மலையின் - பொதியமலைக்கு, நிகரதின்மை - சமான மில்லாமையால், துதித்து - தோத்திரம்பண்ணி, பணியவும் - வணை ங்கவும், குமரர் - குமாரசுவாமிக்கும், முன்னிருவர் - அவருக்கு மூத் தவர்களாகிய கணபதி வீரபத்திர ரிருவர்களுக்கும், அமரர் - தேவர் களுக்கும், அன்னை இவள் - இவள் தாயாயிருந்தும், குமரியின்னமு மென - இன்னுங் குமரியாயிருக்கிறாளென்று, சித்தர் - சித்தர்கள், பாடவும் - தோத்திரம்பண்ணவும், குரவைவிம்ம - குரவைக்கூத்து மிக, அரமகளிர் - தெய்வப்பெண்களும், மண்ணில் - பூமியை யிட மாகவுடைய, எழில்குலவும் - அழகுபொருந்திய, கன்னியர்கள் - பெண்களுடைய, கைக்கு ஒக்க - கைக்குச்சேர, ஆடவும் - நர்த்த னம் பண்ணவும், கமலன் - பிரமாவினாலே, முன்னியிடு - செலுத் தப்படுகின்ற, அரச அன்னம் - அரசவன்னமானது, எழுகடலின் - ஏழுகடலிலிருக்கின்ற, அன்னமுடன் - அன்னங்களுடனே, நட்பு கைகூடவும் - சிநேகம்பண்ணவும், கரியசெம்மலொடும் - திருமா லும், இளையசெம்மல் - குமாரசுவாமியும், விடு - ஏறிவந்துவிட்டி ருக்கின்ற, கருடன் - கருடப்பக்ஷி, மஞ்ஞையொடு - மயிலுடன்,

ஓர் கட்சிக்குள் - ஒருகூட்டுக்குள், ஊடவும் - பிணங்கவும், விண்ணரசு - தேவேந்திரன், கடவி - செலுத்தி, நடவும் - நடத்துகின்ற, வெம் - வெம்மையாகிய, முனைய-சீற்றத்தையுடைய, களிறு - ஐராவதமென்னும் யானையானது, கைம்மலை - யானைகள், செல் - சென்றுவிழுகின்ற, கொப்பத்து - படுகுழியில், வீழவும் - விழவும், தடப்-பெரிய, கனகம்மன்னு - பொன்னெருங்கிய, நளினி - தாமரையையுடைய தடாகத்தில், இருகமலமின்னும் - தாமரைப்பூவை யிடமாகவுடைய இலக்குமியும், சரஸ்வதியுமாகிய விவ்விருவர்களும், துன்னி - நெருங்கி, ஒருபற்பத்துள் - ஒருதாமரைமலரில், மேவவும் - வாசம்பண்ணவும், இமயமென்ன - பர்வத ராஜனைப்போல, மனுமுறை - தருமநூலின் முறைமையே, கொள் - முறையாகக்கொண்டிருக்கின்ற, தென்னரும் - பாண்டியர்களும், எம் இறையை - எமக்கெல்லாஞ் சுவாமியாகிய சோமசுந்தரக் கடவுளை, நல்மருசென - நல்லமருமகனென்று, பெற்று - கிடைத்து, வாழவும் - வாழவும், எவர்சொல் பண்ணவர்கள் - தேவர்கள்யார், எவர்கொல் மண்ணவர்கள் - பூலோகத்தார்யார், எதுகொல் பொன்னுலகு - தெய்வலோகமெது, என - என்று சொல்லும்படி, தட்டுமாறவும் - தடுமாறவும், எழில்செய் - அழகுசெய்கின்ற, தென் - தெற்கின்கண்ணுள்ள, மதுரை - மதுரையென்னுந் தலமானது, தழைய - விளங்கும்படிக்கு, மும்முலையொடு - மூன்று திருமுலைகளுடனே, எழும் - அவதரித்த, என்னம்மனை - எமக்கெல்லாந் தாயாயுள்ளாளாகிய மீநாக்ஷிதேவியினது, வனப்புக்கு - அழகுக்கு, இருவர் - அசுவினி தேவர்களாகிய விருவர்களும், எண்மர் - அஷ்டவசுக்களும், பதினொருவர் - பதினொருருத்திரர்களும், பன்னிருவர் - பன்னிரண்டு சூரியர்களும், எனும்-என்றுசொல்லப்படுகின்ற, அவ்விண்ணவர்கள் - அந்தத் தேவர்களாகிய, முப்பத்துமூவர் - முப்பத்துமூன்றுபேர்களும், ஓர் - ஒப்பற்ற, காவலர் - காவலர்களாக விருக்கக்கடவர். எ - று.

தேவர் முப்பத்து மூவரும் என் அம்மனை வளைப்புக்கோர் காவலர் என முடிக்க. ஓடவும் என்றற் றொடக்கத்துச் செயவெனெச்சங்கள் எழும் என்னும் வினை கொண்டன. சந்தவின்பம் நோக்கிக்குவடு தென்மலையென இயல்பாயிற்று. சேர சோழர்கள் வனத்தொக்க வோடவும் என்றது இறைவிதிக்கு விஜயஞ்செய்தகாலத்தில் நிகழ்ந்தவற்றைக் குறித்தது. இறைவிசந்திரகுலத்தில் தடாதகைப் பிராட்டியாய்த் திருவவதரித்து அரசியனடத்துகிற பெருஞ் சிறப்பு நோக்கி சோழர்குல முதல்வனாகிய சூரியன் அழுக்காற்றால் புழுங்குகின்றா னென்றற்கு "அமுதவெண் மதியின் மரபையுன்னி யுனியவரி யண்ணன் முழு வெப்பத்து மூழ்கவும்" என்றார். "கல்வியழகே யழகு" என்றவாற்ற முத்தமிழ்ச்சங்க மூன்று மிருந்து தமிழாராய்ந்த தோர் திருப்பதி யாதலால், கூடலை "எழில்செய் தென்மதுரை" என்றார். "இருவரொண்மர் பதினொருவர் பன்னிருவ ரொனும விண்ணவர்கண் முப்பத்து மூவரோ" என்பதனை, திருமுருகாற்றுப்படையில், "நால்வேறியற்கை" என்னுஞ் சொற்றொடர்க்கு நச்சினார்க்கினியார் வரைந்தவுரையாற் றெள்ளிதி னுணர்க. (கக)

---

## உ - வது. செங்கீரைப்பருவம்.

நீராட்டி யாட்டுபொற் சுண்ணந் திமிர்ந்தள்ளி
நெற்றியிற் றொட்டிட்ட வெண்
ணீற்றினொடு புண்டரக் கீற்றுக்கு மேற்றிடவொர்
நீக்திலச் சுட்டி சாத்தித்
தாராட்டு சூழியக் கொண்டையு முடித்துத்
தலைப்பணி திருத்தி முத்தின்

றண்ணொளி ததும்புங் குதம்பையொடு காதுக்கோர்
தமனியக் கொப்பு மிட்டுப்
பாராட்டு பாண்டிப் பெருந்தேவி திருமுலைப்
பாலமுத மூட்டி யொருநின்
பாலூறு குமுதங் கனிந்தூறு தேறறன்
பட்டாடை மடிநனைப்பச்
சீராட்டி வைத்துமுத் தாடும் பசுங்கிள்ளை
செங்கீரை யாடி யருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடி யருளே.

(இ - ள்.) நீராட்டி - திருமஞ்சனஞ் செய்வித்து, ஆட்டி - செய்தமைத்திருக்கின்ற, பொன் - பொன்மயமாகிய, சுண்ணம் - பரிமளப்பொடியை, திமிர்ந்து - பூசி, அள்ளி - எடுத்து, நெற்றியில் - நுதலில், தொட்டிட்ட - தொட்டுத்தரித்த, வெண்ணீற்றினொடு - வெள்ளிய திருநீற்றுக்கும், புண்டரக் கீற்றுக்கும் - திருநீற்றின்மேற் குங்கும முதலியவற்றாற் பொறித்த ரேகைக்கும், ஏற்றிட - தகும்படியாக, ஓர் - ஒப்பற்ற, நித்திலம் - முத்துகளினு லியற்றிய, சுட்டிசாத்தி - சுட்டியென்னு மாபரணத்தைத் தரித்து, தார் - பூமாலையால், ஆட்டு - சுற்றப்பட்டிருக்கின்ற, சூழியக் கொண்டையு முடித்து - உச்சிக்கொண்டையு முடித்து, தலைப்பணி - சிரசிற் றரிக்கப்பட்ட வாபரணங்களை யெல்லாம், திருத்தி - திருந்தச்செய்து, காதுக்கு - திருச்செவிகளுக்கு, முத்தின் - முத்தினுலியற்றிய, தண் - குளிர்ச்சியாகிய, ஒளிததும்பும் - காந்தி ததும்புகின்ற, குதம்பையொடு - குதம்பையென்னு மாபரணத்தோடு, ஓர் - ஒப்பற்ற, தமனியம் - பொன்னுலியற்றிய, கொப்புமிட்டு - கொப்பென்னு மாபரணத்தை யுந் தரித்து, பாராட்டு - யாவரும் கொண்டாடுகின்ற, பாண்டிப்

பெருந்தேவி - பாண்டிமா தேவியாகிய காஞ்சன மாலையானவள், திருமுலை - தனது திருமுலையினுடைய, பாலமுதம் - பாலாகிய அமுதத்தை, ஊட்டி - உண்பித்து, ஒரு ஒப்பற்ற, நின் - நின்னுடைய, பால்நாறு - பால் மணக்கின்ற, குமுதம் - திருவாயாகிய செங்குமுதத்தினின்றும், கனிந்துஊறு - கனிந்தொழுகுகின்ற, தேறல் - தேனனது, தன் - அப்பாண்டிமாதேவியினது, பட்டாடைமடி - பட்டாடையணிந்த மடியை, நனைப்ப-நனைக்கும்படி, சீராட்டிவைத்து - சிறப்புகளைச் செய்துவைத்து, முத்தாடும் - முத்த மிடுகின்ற, பசுங் கிள்ளை - பசிய கிளிப்பிள்ளை போல்பவளே, செங்கீரையாடியருள் - செங்கீரை யாடக்கடவாய், தென்னற்கும் - மலயத்துவச பாண்டியனுக்கும், அம்பொன் - அழகிய பொன்மயமாகிய, மலைமன்னற்கு - மலையரையனுக்கும், ஒருசெல்வி - ஒரு செல்வப்புதல்வியே, செங்கீரை யாடியருள். எ - று.

நீராட்டி, திமிர்ந்து, சாத்தி, முடித்து, திருத்தி, இட்டு, ஊட்டி, சீராட்டி,வைத்து முத்தாடும்பசுங்கிள்ளை செங்கீரையாடியருள எனவும், தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி செங்கீரையாடியருள் எனவும் இரண்டுமுடிபாகமுடித்துக்கொள்க. கிள்ளை செல்வி என்பன அண்மைவிளிகளாதலால் இயல்பாயின. தமனியம் - தபநீயம் என்னும் வடசொற்றிரிபு. "பாலூறு குமுதங் கனிந்தூறுதேறல்" என்றது திருப்பவளநீரை. பாலூறு குமுதம் என்றும் பாடம். இதற்கு பாட்டிசை தோன்றுகின்ற திருப்பவளம் எனப் பொருளுரைக்க. தலைப்பணி - பொன்வட்டத் தகட்டணி முதலியன. திமிர்தல் பூசுதலுமாம். பசுங்கிள்ளை உவமையாகுபெயர். பாராட்டல் சீராட்டல் என்பன ஒரு சொன்னீர்மைய. பனிமலையைப் பொன்மலையென்றது "பனிமாலிமயப் பொருப்பகஞ் சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறமாயிருக்கும்" எனச் சான்றோர் கூறுமாற்றை யடியொற்றியென்க. (௪)

உண்ணிலா வுவகைப் பெருங்களி துளும்பநின்
றுன்றிருத் தாதை நின்னை
யொருமுறை கரம்பொத்தி வருகென வழைத்திடுமு
னோடித் தவழ்ந்து சென்று
தண்ணுலா மழலைப் பசுங்குதலை யமுதினிய
தாய்வயிறு குளிர வூட்டித்
தடமார்ப நிறைறுங் குயச்சேச றணைந்துபொற்
றோடாய் தடக்கை பற்றிப்
பண்ணுலா வடிதமிழ்ப் பைந்தாமம் விரியும்
பணைத்தோ ளொருக்க மேயிப்
பாசொளிய மரகதத் திருமேனி பச்சைப்
பசுங்கதிர் ததும்ப மணிவாய்த்
தெண்ணிலா விரியநின் றாடும் பசுந்தோகை
செங்கீரை யாடி யருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடி யருளே.

(இ - ள்.) உன் திருத்தாதை - உனது திருத்தாதையாகிய மலயத்துவச பாண்டியனானவன், உள் - உள்ளத்தில், நிலா - பிரகாசிக்கின்ற, உவகை - சந்தோஷமாகிய, பெருங்களி - பேரானந்தமானது, துளும்ப - ததும்பும்படி, நின்று - நின்றுகொண்டு, நின்னை - உன்னை, ஒருமுறை - ஒருதரம், கரம்பொத்தி - கைகொட்டி, வருகென - வருவாயென்று, அழைத்திடுமுன் - அழைப்பதற்குமுன்னே, ஓடித்தவழ்ந்து - தவழ்ந்தோடி, சென்று - போய், தண் உலா - குளிர்ச்சிபொருந்திய, மழலை-மழலையென்று சொல்லப்பட்ட, பசு - பசிய, குதலை - குதலையாகிய, அமுது - அமிர்தத்தை, இனியதாய்-இன்பத்

தைச்செய்வதாய், வயிறு குளிர - வயிறு குளிரும்படிக்கு, ஊட்டி - உண்பித்து, தடம்-(அந்தப்பாண்டியனுடைய) விசாலம்பொருந்திய, மார்பு - மார்பில், நிறை - நிறைந்திருக்கின்ற, குங்குமச்சேறு - குங்குமச்சேற்றை, அளைந்து - பூசிக்கொண்டு, பொன் - பொன்மயமாகிய, தாள் - (நின்னுடைய) திருத்தாள்களை, தோய் - தோய்ந்திருக்கின்ற, தடம் - பெரிய, கை - கையை, பற்றி - பிடித்துக்கொண்டு, பண் உலா - இசைபொருந்திய, வடிதமிழ் - வடித்த தமிழ்ப்பாவாகிய, பை - பசிய, தாமம் - மாலை, விரியும் - விளங்கும், பணை - பருத்த, தோள் - தோளினது, எருத்தம் - பிடரின்மேல், ஏறி - ஏறிக்கொண்டு, பாசுஒளி - பச்சொளியினை யுடைய, மரகதம் - மரகதம்போன்ற, திருமேனி - திருமேனியினது, பச்சைப்பசுங் கதிர் - மிகுந்த பசுமையாகிய கிரணங்கள், ததும்ப - எங்குந்ததும்பும்படி, மணி - அழகிய, வாய் - திருவாயினது, தெள் - தெளிந்த, நிலா - சந்திரிகை, விரிய - விளங்கும்படி, நின்று - நின்றுகொண்டு, ஆடும் - விளையாடுகின்ற, பசு - பசிய, தோகை - மயில்போல்பவளே, செங்கீரையாடியருளே. எ - று.

திருத்தாதை வருகவென, தவழ்ந்துசென்று, வயிறு குளிர ஊட்டி, குங்குமச்சேறளைந்து, தடக்கைபற்றி, எருத்தமேறி, மேனி பசுங்கதிர் ததும்ப, மணிவாய் நிலாவிரிய நின்று ஆடும் பசுந் தோகை செங்கீரையாடியருள் என முடிக்க. எருத்தமேறி நின்று என வினையும், குதலையை அமுது என்றதற்கேற்பக் குளிரவூட்டி யென்றார். அறிஞரது பாட்டுக்களால் புகழப்பட்டமையால் தோள் "தமிழ்ப்பைந்தாமம் விரியும் பணைத்தோள்" எனப்பட்டது.

இது, "உரைப்பாருரைப்பவை" என்னுந் திருக்குறளுக்குப் பரிமேலழகர் வரைந்த வுரையானு மினிதுவிளங்கும். தோகை ஆகுபெயர். முகில்விரிய ஆடும்பசுந்தோகையை வேறுபடுத்தற்கு, "தெண்ணிலாவிரிய நின்றாடும் பசுந்தோகை" என்றார். தாள்

தோய் தடக்கை - சாமுத்திரிகநூ லிலக்கணப்படி முழந்தாளளவுங்கட ந்து தாழ்ந்தகை. (௨)

சுற்றுநெடு நேமிச் சுவர்க்கிசைய வெட்டுச்
சுவர்க்கா னிறுத்தி மேருத்
தூணொன்று நடுநட்டு வெளிமுகடு மூடியிரு
சுடர்விளக் கிட்டு முற்ற
எற்றுபுன லிற்கழுவு புவனப் பழங்கல
மெடுத்தடுக் கிப்பு துக்கூ
ழின்னமுத முஞ்சமைத் தன்னநீ பன்முறை
யிழைத்திட் வழித்த ழித்தோர்
முற்றவெளி யிற்றிரியு மத்தப் பெரும்பித்தன்
முன்னின்று தொந்த மிடவு
முனியாது வைகலு மெடுத்தடுக் கிப்பெரிய
முதலாட்ட கூட முடிந்து
சிற்றில்விளை யாடுமொரு பச்சிளம் பெண்பிள்ளை
செங்கீரை யாடி யருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடி யருளே.

(இ - ள்.) சுற்று - சூழ்ந்திருக்கின்ற, நெடு - நெடிய, நேமி - சக்கிரவாளகிரியாகிய, சுவர்க்கு இசைய - சுவர்க்குத்தக, எட்டு - அஷ்டகிரிகளாகிய, சுவர்க்கால் - சுவர்க்கால்களை, நிறுத்தி - நாட்டி, மேரு - மேருபர்வதமாகிய, தூண் ஒன்று - ஒருதூணை, நடு - நடுவாக, நட்டு - நிறுத்தி, வெளி - ஆகாயத்தினாலே, முகடு - உச்சியை, மூடி - மூடி, இரு - இரண்டு, சுடர் - சூரியசந்திரர்களாகிய, விளக்கு இட்டு - தீபங்களைவைத்து, முற்ற - முழுமையும், எற்றுபுனலின் -

அலைஎறிகின்ற கடனீரிலே, கழூவு - கழுவப்பட்ட, புவனம்-புவனங்களாகிய, பழங்கலம் - பழங்கலங்களை, எடுத்து அடுக்கி - எடுத்து அடுக்கிவைத்து, புதுக்கூழ் - புதிய கூழாகிய, இன் - இனிய, அமுதம் - சீவகோடிகளாகிய அமுதத்தையும், சமைத்து - சமைத்து, அன்னை - தாயே, நீ - நீ, பன்முறை - இவ்வண்ணம் பலதரமாக, இழைத்திட - செய்திட, அழித்து அழித்து - மீண்டுமீண்டு நசிப்பித்து நசிப்பித்து, ஓர் - ஒப்பற்ற, முற்ற வெளியில் - பெருவெளியிலே, திரியும் - திரிகின்ற, மத்தம் - உன் மத்தத்தையுடைய, பெரும்பித்தன் - பெரியபித்தனானவன், முன் - முன்னாக, நின்று - நின்றுகொண்டு, தொந்தமிடவும் - நடனம்பண்ணவும், முனியாது - வெறுக்காமல், வைகலும் - நாடோறும், எடுத்தடுக்கி - எடுத்தெடுத்தடுக்கி, பெரிய - பெரிய, முது - பழைய, அண்டகூடமும் - அண்டகூடத்தை மூடுகின்ற, சிற்றில் - சிறுவீடுகட்டி, விளையாடு - விளையாடுகின்ற, ஒரு - ஒப்பற்ற, பச்சிளம் - பசிய இளமையாகிய, பெண்பிள்ளை - பெண்பிள்ளையே, செங்கீரையாடியருளே. எ - று.

நிறுத்தி, நட்டு, மூடி, இட்டு, எடுத்தடுக்கி சமைத்திழைத்திட அழித்தழித்துத்திரியும் பித்தனை முனியாது எடுத்தடுக்கி சிற்றில்விளையாடும் பெண்பிள்ளை செங்கீரையாடியருள் என முடிக்க. புவனத்தைப் பழங்கலமென வுருவகித்ததற்கேற்ப, நேமிவரையை அண்டமாகிய சிறுவீட்டிற்குச் சுற்றுமதிலாகவும், அட்டகுலகிரிகளை அடைகற்களாகவும், மேருமலையைத் தூணாகவும், இருசுடரைவிளக்காகவும், பல சீவர் பண்டப்பயிர்களை அமுதமாகவும் உருவகித்து, அமுதம் என்றதற்கேற்பச் சமைத்தெனவும் கூறினார். அத்தன்மைத்தாகிய சிற்றிலையிழைத்துவைக்கவும் ஓர் உன்மத்தனாகிய பித்தன் அச்சிறுவீட்டுடன் அப்பழங்கலங்களையும் அழித்ததேயன்றித் தன் முன்னின்று கூத்துமாட, அதற்கு வெறுத்துக் கோடலின்றி மீள

மீள இடைவிடாதெடுத் தடுக்கிவைக்கும் பெண்பிள்ளை என இறைவியின் பொறையைப் புகழ்ந்தவாறாயிற்று. அனைத்தும் தன் சந்நிதிமாத்திரத்தால் நடவாநிற்பத் தனக்குத்தோற்றக் கேடுகளின்றி யாவும் தன் வயத்தனவாகத் தான்யாதன் வயத்து மடங்காமல் தன் திருவுளப்பாங்கின்படி நடக்தும் நடத்தியும் வருவோனாதலால் இறைவனை "மத்தப்பெரும்பித்தன்" என்றார். இருசுடர் - ஆகுபெயர். சிற்றில் விளையாடும் என்றதற்கேற்ப, "பச்சிளம் பெண்பிள்ளை" என்றார். (௫.)

மங்குல்படு கந்தரச் சுந்தரக் கடவுட்கு
மழகதிர்க் கற்றை சுற்றும்
வாணயன மூன்றுங் குளிர்ந்தமுத கலைதலை
மடுப்பக் கடைக்கணோக்கும்
பொங்குமதர் நோக்கிற் பிறந்தவா னந்தப்
புதுப்புணரி நீத்த மையன்
புந்தித் தடத்தினை நிரப்ப வழியடியர்பாற்
போகசாகர மடுப்ப
அங்கணெடு ஞாலத்து வித்தின்றி வித்திய
வனைத்துயிர்க ளுந்த ளிர்ப்ப
வருண்மடை திறந்துகடை வெள்ளம் பெருக்கெடுத்
தலையெறிந் துகள வுகளுஞ்
செங்கயல் கிடக்குங் கருங்கட் பசுந்தோகை
செங்கீரை யாடி யருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடி யருளே.

(இ - ள்.) மங்குல்படு - கருமைபொருந்திய, கந்தரம் - மிடற்றினையுடைய, சுந்தரக்கடவுட்கு - சோமசுந்தரமாகிய தெய்வத்துக்கு, மழம் - இளமையாகிய, கதிர்க்கற்றை - கதிர்த்தொகுதிகள், சுற்றும் - சூழ்ந்திருக்கின்ற, வாள் - பிரகாசம்பொருந்திய, நயன மூன்றும் - திருக்கண்கள் மூன்றும், குளிர்ந்து - குளிர்ச்சியையடைந்து, அமுத கலை - அமிர்தகலையானது, தலை மடுப்ப - தலைக்கொள்ளும்படிக்கு, கடைக்கண் நோக்கும் - கடாக்ஷிக்கிற, பொங்கு - மிகுந்த, மாதர் - அழகிய, நோக்கின் - பார்வையினால், பிறந்த-உண்டாகிய, ஆனந்தம் - ஆனந்தமாகிய, புது - புதிய, புணரி - சமுத்திரத்தினது, நீத்தம் - வெள்ளமானது, ஐயன் - சோமசுந்தரக்கடவுளினது, புந்தி - திருவுள்ளமாகிய, தடத்தினை - தடாகத்தை, நிரப்ப - நிரம்பச்செய்யவும், வழி அடியர் பால் - பரம்பரையாகிய அடியார்களிடத்தில், போகம் - சிவபோகமாகிய, சாகரம் - சமுத்திரமானது, மடுப்ப - நிரம்பவும், அம் - அழகிய, கண்-இடத்தினையுடைய, நெடு - நீண்ட, ஞாலத்து - பூமியினிடத்து, வித்து இன்றி - விதையில்லாமல், வித்திய - முளைத்த, அனைத்து உயிர்களும் - உயிர்களெல்லாமும், தளிர்ப்ப - தழையவும், மடை திறந்த - மடைதிறந்தொழுகுகின்ற, அருள் - கிருபையாகிய, கடை வெள்ளம் - ஊழிவெள்ளமானது, பெருக்கெடுத்து - பெருகி, அலையெறிந்து - அலைகளை வீசிக்கொண்டு, உகள - புரளும்படி, உகளும் - பிறழ்கின்ற, செம் - சிவந்த, கயல் கிடக்கும் - கயலினுருவமுள்ள, கருங்கண் - கரிய கண்களையுடைய, பசு - பசிய, தோகை - மயில்போல்பவளே, செங்கீரை யாடி யருளே. எ - று.

கடைக்கணோக்கும் நோக்கத்தால் சுந்தரக்கடவுட்கு மூன்று கண்களும் குளிர்ந்து அமிர்தகலையுருவாகவும், அந்த நோக்கத்திற் பிறந்த ஆநந்தசாகரம் அக்கடவுள் புந்தித்தடத்தை நிரப்பவும், அடியர்பாற் போகசாகரமடுப்பவும், அனைத்துயிர்களும் தளிர்ப்பவும்

அருள்மடை திறந்து பெருக்கெடுத்துகள உகளும் கயற்கண் பசுந் தோகை செங்கீரையாடியருள் என முடிக்க. மங்குல்படு என்பதற்கு மேகத்தை நிகர்த்த எனினுமாம். ஈண்டுப்படுவென் பதுவமவுருபு. கதிர்க்கற்றையை மூன்று கண்களுக்குங்கொள்க. இறைவன் கண்கள் ஒளிகளெல்லாவற்றிற்கும் காரணமாதலால் "வாள் நயநம்" என்றார். தலைமடுத்தல் ஒருசொல். மூன்றும் என்னும் உம்மை இனைத்தென அறிபொருட்கண் வந்தது. பொங்குமதர் நோக்கு - பூர்ண திருஷ்டி. இறைவி நோக்குதலும் இறைவன் கண்களாகிய முச்சுடரும் குளிர்ந்து திருமேனி முழுதும் வெப்பமாறிற்று. என்பார், "குளிர்ந்த முதகலை தலைமடுப்ப" என்றார். தலைமகளதுள்ளத்தின்கட் காமக்குறிப்பினையும் தன்மீதுள்ள ஆர்வக்குறிப்பினையும் தலைமகன் அறியவே, புணர்ச்சி கைகூடுமென வுட்கோடலும் அதுகாரணமாக மனத்தின்கண்ணுண்டாங்காப் பெருமகிழ்ச்சி தோன்றுவதுமாகிய துறை யொன்றுளதாதலால் இறைவியது திருநோக்கால் ஐயன் புந்தித் தடத்தினை ஆநந்தப் புதுப்புணரி நீத்தம் நிரப்ப என்றார். இதனைக் குறிப்பறிதல் என்பர். இறைவியது நோக்கினால் இறைவனது திருவுளந் திரும்பிச் சத்திநிபாதத்துத் தமர்க்கு அருள்புரிவதும் அவர்கட்குச் சிவபோகம் சித்திப்பதும் ஆகிய முறைமை புலப்படுதல் இதன் உட்கிடை. இதுபற்றியே "புந்தித்தடத்தினை நிரப்ப வழியடியார்பாற் போகசாகர மடுப்ப" எனவுடன் கூறியதாமென்க. வழியடியர் - எழுமையுந்தொடர்ந்த உழுவலன்பினர். கயல் - ஆகுபெயர். மயிற்கும் கண்களுளவேனும் அவை யின்னவன்றென்றற்கு, "செங் கயல் கிடக்குங் கருங்கட் பசுந்தோகை" என்றார். இஃதோர் வியத்தக்க மயில் என்றவாறு. (௭)

பண்ணாரு வரிமிடற் றறுகான் மடுப்பப்
பசுந்தேற லாறலைக்கும்

பதுமபீ டிகையுமுது பழமறை விரிந்தொளி
பழுத்தசெந் நாவு மிமையாக்
கண்ணறு மரகதக் கற்றைக் கலாமஞ்ஞை
கண்முகி றதும்ப வேங்கும்
கார்வரையும் வெள்ளெனவொர் கன்னிமா டத்துவளர்
கற்பூர வல்லி கதிர்கால்
விண்ணறு மதிமுயற் கலைகிழிந் திழியமுத
வெள்ளருவி பாய வெடிபோய்
மீனுந் தகட்டகட் டிளவாளை மோதமுகை
விண்டொழுகு முண்ட கப்பூந்
தெண்ணறு வருவிபாய் மதுரைமர கதவல்லி
செங்கீரை யாடி யருளே
தென்னற்கு மப்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி
செங்கீரை யாடி யருளே.

(இ - ள்.) வரி - வரிகளையும், பண் அறு - இசைபாடுதலொழி யாத, மிடறு - கண்டத்தினையுமுடைய, அறு கால் - வண்டுகள், மடுப்ப - பருகு வண்ணம், பசு - பசிய, தேறலாறு - தேனாறு, அலைக்கும் - அலைக்கின்ற - பதுமபீடிகையும் - பதுமாசனமும், முது பழ மறை - மிகுந்த பழமையாகிய வேதங்கள், விரிந்து - விளங்கி, ஒளி பழுத்த - ஒளி முதிர்ந்த, செந்நாவும் - பிரமனது சிவந்த நா வும், மரகதம் - மரகதத்தைப்போலும், இமையாக்கண் அறு-இமை யாத கண்ணுள்ள, கற்றைக்கலா - தோகைத்திரள்களையுடைய, மஞ் ஞைகள் - மயில்கள், முகில்-மேகங்கள், ததும்ப - நிறைதலால், ஏங் கும் - சத்திக்கிற, கார் - மேகங்கள் தவழ்கின்ற, வரையும் - கைலாச மலையுமாகிய இம்மூன்றும், வெள்ளென - வெறுவிதாய்ப்போக,

ஓர் - ஒப்பற்ற, கன்னிமாடத்து - அழிவற்ற மாளிகையில், வளர் - எழுந்தருளியிருக்கின்ற, கற்பூரவல்லி - கர்பூரவல்லியென்னுந் திரு நாமத்தையுடையவளே, கதிர் கால் - கிரணங்களை யுமிழ்கின்ற, விண் அறு - ஆகாயத்தை நீங்காத, மதி - சந்திரனது, முயல் - முயற்களங்கத்தினையுடைய, கலை - கலைகள், கிழிந்து - உடைந்து, இழி - ஒழுகுகின்ற, அமுதம் - அமுதமாகிய, வெள் - வெள்ளிய, அருவி - அருவியாறு, பாய - பெருகும்படிக்கு, வெடிபோய் - எழும்பிப்போய், மீளும் - மீண்டு வருகின்ற, தகடு - வெள்ளித்தகட்டைப் போலும், அகடு - வயிற்றினையுடைய, இளம் - இளமையாகிய, வாளை-வாளைமீன்கள், மோத - மோதுதலால், முகை - அரும்புகள், விண்டு - உடைதலால், ஒழுகு - பெருகுகின்ற, முண்டகப்பூ - தாமரைமலரினுடைய, தெள் - தெளிந்த, நறு அருவி - தேனாறு, பாய் - பெருகுகின்ற சிறப்பினையுடைய, மதுரை - மதுரையை யிடமாக வுடைய, மரகதவல்லி - மரகதக்கொடிபோல்பவளே, செங்கீரை யாடியருளே. எ - று.

பதுமபீடிகையும், செந்நாவும், கார்வரையும் வெள்ளௌனக் கன்னிமாடத் துவளர் கற்பூரவல்லி, அமுத அருவிபாய வெடிபோய் மீளுமிள வாளைமோத முகைவிண்டு முண்டகநறு அருவிபாய் மதுரை மரகதவல்லி, செங்கீரை யாடியருள் என முடிக்க. இறைவி தடாதகைப்பிராட்டியாய் அவதரித்து மதுரையில் வீற்றிருத்தலால் அவளது கூறாகிய திருமகளும் கலைமகளும் இருக்கும் பதுமபீடிகையும் பிரமனது நாவும் தான் இறைவனுடன் வீற்றிருக்கும் கைலாய மலையும் வறியவாயின என்றற்குப் பதுமபீடிகை முதலியன வெள்ளௌன என்றார். பயனற்றதென்பதற்கு வெளுத்ததெனக் கூறுதல் உலகவழக்காதலால் இவ்வாறு கூறினர். பதுமபீடிகையும் செந்நாவும் கார்வரையும் வெள்ளௌன என்பதற்கு, இறைவியும் இறைவனும் கைலையினின்று மதுரைக்கெழுந்தருள, பூமகளும் நாமகளும்

இறைவிக்குத் தோழியராய் வந்திருந்தனராதலால் அம்மூன்றிட மும் வெள்ளெனத்தோன்ற எனினுமாம். வெடிபோதல்-ஒருசொல், தாவுதல் என்பது பொருள். மஞ்ஞை கணமுகில் ததும்ப என்றும் பாடம். விண்டு - வினையெச்சத்திரிபு. அறுகால் சினையாகுபெயர். கலாபம் கலா என ஈறுதொகுத்தது. மதிக்கலையெனவியையும். பண் ணுறு வரி என்பதற்கு பண்ணைவிட்டு நீங்காத பாட்டு எனினுமாம். "பண்ணென்னும் பாடற்கியைபின்றேல்" என்றார் பெருநாவலரும். பண் - பாலையாழ் முதலிய நூற்றுமூன்று. பாட்டு - யாழின்கண் வார்தல் முதலிய வெட்டும், பண்ணல் முதலிய வெட்டும், மிடற்றின் கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம் என்னுமைந் தும். பெருவண்ணம் இடைவண்ணம் வனப்புவண்ணம் முதலிய வெழுபத்தாறுமாம். இவற்றுள் அளிக்குரியவற்றையேற்ற பெற்றி கொள்க. (௫)

முகமதி யூடெழு நகைநில வாட
முடிச்சூ டியமாட
முரிபுருவக்கொடி நுதலிடு சுட்டி
முரிப்பொ டசைந்தாட
இகல்விழி மகரமு மம்மக ரம்பொரு
மிருமக ரமுமாட
விடுநா ரவடி பெயரக் கிண்கிணி
ணைறுங்கிங் கிணியாட
துகிலொடு சோர்தரு கொடிநுண் மருங்கு
றுவண்டு துவண்டாடத்
தொந்தி சரிந்திட வுந்திக் கரந்தொளிர்
சூலுடை யாலிடைமற்

றகில சராசர நிகிலமொ டாடிட
வாடுக செங்கீரை
யவனி தழைந்திட மவுலி புனைந்தவ
ளாடுக செங்கீரை.

(இ - ள்.) முகம் - திருமுகமாகிய, மதி - சந்திரனுக்கு, ஊடு-உள்ளே, எழு - உண்டாகின்ற, நகை - நகையாகிய, நிலவு - சந்திரிகை, ஆட - அசையவும், முடி - திருமுடியில், சூழியம் - சூழியக்கொண்டை, ஆட - அசையவும், முரி - வளைந்த, புருவம் - புருவங்களாகிய, கொடி - கொடியும், நுதல் இடு-நெற்றியிலணிந்த, சுட்டி-சுட்டியும், முரிப்பொடு - நெரிப்புடனே, அசைந்தாட - அசைந்தாடவும், இகல் - போர்செய்கின்ற, விழி - திருக்கண்களாகிய, மகரமும்-மகரமச்சங்களும், அம்மகரம்-அந்தமகரமச்சங்களால், பொரும்-போர்செய்யப்படுகின்ற, இரு மகரமும் - இரண்டு மகரக்குழைகளும், ஆட - அசையவும், இடு - அணிந்திருக்கின்ற, நூபுரம்-சிலம்பையுடைய, அடி - திருவடிகளை, பெயர - எடுத்துவைக்க, கிண்கிணென்னும் - கிண்கிணென்று மொலியினையுடைய, கிங்கிணி-சதங்கை, ஆட - அசையவும், துகிலொடு - வஸ்திரத்துடனே, சோர்தரு - தளர்கின்ற, கொடி - கொடிபோன்ற, நுண் - நுண்ணிய, மருங்குல் - இடையானது, துவண்டு துவண்டாட-துவண்டு துவண்டசையவும், சொந்தி - வயிறானது, சரிந்திட - சரிய, உந்தி - நாபி, கரந்தது - வெளிப்படாமலிருக்கின்றதாகிய, ஓர்-ஒப்பற்ற, சூலுடை-கர்ப்பத்தையுடைய, ஆலிடை-ஆலிலைபோன்ற திருவயிற்றில், அகில சராசரம் - பூமியிலுள்ள சராசரங்களாகிய, நிகிலமொடு - எல்லாமும், ஆடிட - ஆடும்பொருட்டு, ஆடுகசெங்கீரை - செங்கீரை யாடக்கடவாய், அவனி - பூமியானது, தழைந்திட - தழைக்கும்பொருட்டு, மவுலி - கிரீடத்தை, புனைந்தவள் - தரித்துக்கொண்டவளாகிய மீனாக்ஷியம்மையே, ஆடுக செங்கீரை. எ - று.

மவுலிபுனைந்தவள், நகைநிலவாட, குழியமாட, சுட்டியசைந்தாட, விழிமகரமும் இருமகரமுமாட, கிங்கிணியாட, மருங்குல் துவண்டாட, அகிலசராசரம் நிகிலமொடாடிட செங்கீரை யாடுக என முடிக்க. நகைநிலவாடல் - முறுவலித்தல். முரிப்பு - சுட்டியின் மீதுள்ள ஒருறுப்பென்பாருமுளர். துகிலொடு சோர்தரு மருங்குல் என்பது "தொடியொடு தொல்கவின் வாடியதோள்" என்றாற்போல்வது. அகிலசராசர நிகிலங்கள் தனக்குள்ளே யொடுங்கித் தோன்றுவனவாதலால் "உந்தி கரந்ததோர் சூல்" என்றார். இதனை "பங்கயற் கண்ணரிய பரம்பரனுருவே தனக்குரிய படிவமாகி - இங்கயற்கணக னுலக மெண்ணிறந்த சராசரங்களீன்றும்" என்னும் திருவிளையாடற்புராணத்துப் பாயிரச்செய்யுளானுமுணர்க. துவண்டு துவண்டு என்னும் அடுக்குமிகுதிப்பொருட்டு. அன்றி அச்சப்பொருட்டெனினுமாம். மகரக்குழையென்பது சுறாமீனின் வடிவினதாகச் செய்யப்பட்டதாகிய ஒர் காதணி. இகலுதல் - ஒன்றோடொன்று பொருதல். ஆல் உவமையாகுபெயர். சரம் - இயங்கியற்பொருள். அசரம்-நிலையியற்பொருள். இவற்றை சங்கமப்பொருள் தாவரப்பொருள் என்றும், அசையும்பொருள் அசையாப்பொருள் என்றும் கூறுப. ()

தசைந்திடு கொங்கை யிரண்டல தெனவுரை
　　தருதிரு மார்பாடத்
தாய்வரு கென்பவர் பேதைமை கண்டு
　　ததும்புபு னகையாடப்
பசைந்திடு ஞால மலர்ந்தமை வெளிபடவொர்
　　பச்சுடல் சொல்லவுமோர்
பைங்கொடி யொல்கவு மொல்கி நுடங்கிய
　　பண்டி சரிந்தாட

இசைந்திடு தேவை நினைந்தன வென்ன
　　விரங்கிடு மேகலையா
டிடுகிடை யாட வியற்கை மணம்பொதி
　　யிதழ்வழி தேறலினோ
டசைந்தொசி கின்ற பசுங்கொடி யெனவினி
　　தாடுக செங்கீரை
யவனி தழைந்திட மவுலி புனைந்தவ
　　ளாடுக செங்கீரை.

(இ - ள்.) தசைந்திடு - தசையினாற் பூரிக்கின்ற, கொங்கை - திருமுலைகள், இரண்டலதென - இரண்டையுடைய தன்றென்று, உரை தரு - சொல்லப்படுகின்ற, திரு - அழகிய, மார்பு - திருமார்பானது, ஆட - அசையவும், தாய் - தாயே, வருக - வருவாய், என்பவர் - என்று சொல்லுகின்றவர்களினது, பேதைமை - அறிவின்மையை, கண்டு - பார்த்து, ததும்பும் - ததும்புகின்ற, புன்னகை - புன்முறுவல், ஆட - அசையவும், பசைந்திடு - பசுமையினையுடைய, ஞாலம் - பூமியை, மலர்ந்தமை - ஈன்ற தன்மையை, வெளிறி - வெளுத்து, ஓர் - ஒப்பற்ற, பச்சுடல் - பசுமையாகிய திருமேனி,சொல்லவும் - வெளிப்படுத்தவும், ஓர் - ஒப்பற்ற, பைங்கொடி - பைங்கொடிபோலு மிடையானது, ஒல்கவும் - துவளும்படிக்கும், ஒல்கி - அசைந்து, நுடங்கிய - துவண்ட, பண்டி - திருவயிறு, சரிந்து ஆட - சரிந்தசையவும், இசைந்திடு - உன்மனத்துக்கிசைந்த, தேவை - தெய்வத்தை, நினைந்தனவென்ன - நினைத்துச் சொல்லுவனபோல, இரங்கிடும் - ஒலிக்கின்ற, மேகலையோடு - மேகலாபரணத்துடன், இடுகு - சுருங்கிய, இடை - இடையானது, ஆட - அசையவும், இயற்கை - இயல்பாகிய, மணம் - வாசனை, பொதி - பொருந்திய, இதழ் - இதழினின்றும், வழி - பெருகுகின்ற, தேறலினோடு - தேனினோடு,

அசைந்து ஒசிகின்ற - அசைந்து வளைகின்ற, பசுங்கொடி யென - பச்சைக்கொடியைப்போல, இனிது-(கண்டோர்க்கு) இன்பம்பயக்க, ஆடுக செங்கீரை. எ - று.

திருமார்பாட, புன்னகையாட, பச்சுடல் சொல்ல, பண்டி சரிந்தாட, மேகலையோடிடு கிடையாட, இதழ்வழிதேறலிறேட சைந்தொசிகின்ற பசுங்கொடியென வினிதாடுக செங்கீரை என முடிக்க. தசைந்திடல் - நரம்புமுதலியனதோன்றாது தசைதிணிந் திருத்தல். இரண்டலது என்றமையால் மூன்றென்பது போதரும், போதரவே மும்முலையமைந்த திருமார்பென்பது விளங்கும். "சிவமெ னும் பொருளுமாதிசத்தியொடு சேரினெத்தொழிலும் வல்லதாம் - இவள்பிரிந்திடி னியங்குதற்கு மரிதரிதெனு மறையிரைக்கும்" என் னும்படியான பெருமைவாய்ந்த தன்னை ஏனைய சிசுக்கள்போலநினை த்து அழைக்கின்றனராதலால் அவ்வாறு அழைக்கின்றவரது அறியா மையை நோக்கிப் புன்னகைசெய்கின்றமையால், "தாய்வருகென்ப வர் பேதைமைகண்டு ததும்புபுன்னகையாட" என்றார். வருக என் பவர் என்பது வருகென்பவர் எனத்தொகுத்தல்பெற்றது. தன்திருக் குறிப்பின் வழிநிற்பவனுதலால் இறைவனை "இசைந்திடுதே" என் றார். தாய் - அண்மைவிளி. வருகென்பவர் என்றது செவிலித்தாய் முதலியோரை. பொறையுயிர்த்தார்க்கு உடம்பு வெளிறித்தோன் றுத லியல்பாதல்போல இறைவியது திருமேனியும் எல்லாவுலகங் களையுமீன்றமைக் கறிகுறியாக வெளிறித்தோன்றுதலால் "பசைந் திடு ஞாலமலர்ந்தமை வெளிறியொர் பச்சுடல் சொல்லவும்" என் றார். பச்சுடல் சொல்லவும் என்றது இலக்கணை. ததும்பல் - நிரம்பி வழிதல். புன்னகை - இளஞ்சிரிப்பு. பசைதல் - செழித்தல். பைங் கொடி - உவமையாகுபெயர். மேகலை - மாதர் இடைக்கணிவதோ ராபரணம், அது இரத்திநங்களால் எழுகோவையாய்க் கோக்கப்படு வது எட்டுக் கோவையாய்க் கோக்கப்படுவதென்றும் சிலர் கூறு

வர். இயற்கை மணம் - மருவுக்குப்போலக் கூடப்பிறந்த மணம். "மருவுக்கு வாசனைபோல் வந்தசாலென்னை வாட்டுவதே" என்றார் பிறரும். (எ)

பரிமள மூறிய வுச்சியின் முச்சி
பதிந்தா டச்சுடர்பொற்
பட்ட முடன்சிறு சுட்டியும் வெயிலொடு
பனிவெண் ணிலவாடத்
திருநுதன் மீதெழு குறுவெயர் வாடத்
தெய்வ மணங்கமழுந்
திருமே னியின்முழு மரகத வொளியெண்
டிக்கும் விரிந்தாடக்
கருவிளை நாறு குதம்பை ததும்பிய
காது தழைந்தாடக்
கதிர்வெண் முறுவ லரும்ப மலர்ந்திடு
கமலத் திருமுகநின்
னருள்விழி யொடுவ்வளர் கருணை பொழிந்திட
வாடுக செங்கீரை
யவனி தழைந்திட மவுலி புனைந்தவ
ளாடுக செங்கீரை.

(இ - ள்.) பரிமளம் ஊறிய - இயற்கைமணம் மிகுந்த, உச்சியில் - உச்சியிலிருக்கின்ற, முச்சி - சூழியக்கொண்டையானது, பதிந்து - அமிழ்ந்து, ஆட - அசையவும், சுடர் - பிரகாசம்பொருந்திய, பொன் - பொன்னாலியற்றிய, பட்டமுடன் - நெற்றிப்பட்டத்துடன், சிறு - சிறிய, சுட்டியும் - முத்துச்சுட்டியென்னு மாபரணமும், (முறையே) வெயிலொடு - சூரியனுடனே, வெள் - வெள்

ளிய, நிலவு - சந்திரனாகிய, பணி - ஆபரணமும், ஆட - அசையவும், திரு - அழகிய, நுதல்மீது - நெற்றியின்மேல், எழும் - உண்டாகின்ற, குறு வெயர்வு - சிறு வெயர்வானது, ஆட - அசையவும், தெய்வ மணம் - தெய்வத்தன்மையாகிய வாசனை, கமழும் - பரிமளிக்கின்ற, திருமேனியில் - திருமேனியில் உண்டாகிய, முழு மரகதவொளி - முழுமரகதத்தினுடைய காந்தியானது, எண்டிக்கும் - எட்டுத்திக்கிலேயும், விரிந்து - பரவி, ஆட - அசையவும், கருவிளை - நீலோற்பலமலர்போல, நாறு - காணப்படுகின்ற, குதம்பை - குதம்பையென்னு மாபரணமானது, ததும்பிய - பொருந்திய, காது - திருச்செவிகள், தழைந்து - சிறந்து, ஆட - அசையவும், கதிர் - கிரணங்களையுடைய, வெள் - வெள்ளிய, முறுவல் அரும்ப - நகையுண்டாக, மலர்ந்திடு - மலர்ந்திடுகின்ற, கமலம் - தாமரைமலர்போன்ற, திரு - அழகிய, முகம் - முகமானது, நின் - உன்னுடைய, அருள் - கிருபை பொருந்திய, விழியொடும் - திருக்கண்களோடுங்கூடி, வளர் - பெருகுகின்ற, கருணை பொழிந்திட - கருணையைச் சொரியும்படி, ஆடுக செங்கீரை. எ - று.

முச்சியாட, பட்டமுடன் சிறு சுட்டியும் வெயிலொடு பனி வெண்ணிலவாட, குறுவெயர்வாட, மரகதவொளியெண்டிக்கும் விரிந்தாட, காது தழைந்தாட, முறுவலரும்ப, மலர்ந்திடு கமலத் திருமுக நின் அருள்விழியொடும் வளர் கருணை பொழிந்திட ஆடுக செங்கீரை என முடிக்க. தெய்வமணங்கமழுந் திருமேனி என மேலே வருதலால் பரிமளம் என்பதற்கும் இயற்கைமணம் எனப்பொருள் கூறலாயிற்று. குதம்பையென்னுங் காதணி கருவிளைமலர்போலக் கவிழ்முகமாயிருத்தலால் "கருவிளைநாறு குதம்பை" என்றார். திருமுகம் கருணைபொழிந்திட எனவியையும். கருணைபொழிதல் விழியின் தொழிலாதலால் "திருமுக நின்னருள் விழியொடும் வளர் கருணை பொழிந்திட" என்றார். முழு மரகதம் - தொளைக்காத மர

கதம். முழுப்பச்சை யெனக்கொண்டு பச்சைநிறத்தால் மிகுந்தமணி யெனினுமாம். பொற்பட்டம் சூரியப்பிரபை யென்னு மாபரணத்துக்கும், முத்துச்சுட்டி சந்திரப்பிரபை யென்னு மாபரணத்துக்கும் உவமையாகக்கொள்க. பொற்பட்டம் வெயில் வீசவும் முத்துச்சுட்டி நிலவெறிக்கவும் எனக்கூறுவதுமொன்று. கருவிளை - காக்கணம்பூ. திருமேனியின் எனப்பிரித்து திருமேனியினது எனப் பொருள்கூறலுமாம். இன் அல்வழிச்சாரியை யெனக்கொண்டு திருமேனியாகிய என்றுரைப்பினும் பொருந்தும். இவ்வாறு இன் அல்வழிச்சாரியையாய் வருதல். "காய்சினவே லன்ன மின்னியல்கண்ணின்வலை கலந்து" என்னும் திருக்கோவையார் ௭௬-ம் செய்யுளுரையிற் காண்க. (௮)

குருமணி வெயில்விட மரகத நிழல்விரி
குன்றே நின்றாலுங்
குழலிசை பழகிய மழைமுகி லெழுவெழு
கொம்பே வெம்பாசம்
மருவிய பிணிகெட மலைதரு மருமைமரு
ருந்தே சந்தானம்
வளர்புவ னமுழுணர் வருமரு மறையின்
வரம்பே செம்போதிற்
கருணையின் முழுகிய கயமிரி பசியக
ரும்பே வெண்சோதிக்
கலைமதி மரபொலி ரிளமதி யெனவளர்
கன்றே யென்றேனும்
திருமகள் கலைமக டலைமகண் மலைமகள்
செங்கோ செங்கீரை

தெளிதமிழ் மதுரையில் வளருமொ ரிளமயில்
செங்கோ செங்கீரை.

(இ - ள்.) குருமணி - குருவிந்த மணியானது, வெயில்விட (ஒருபக்கத்தில்) வெயிலை உமிழாநிற்க (அதன் மற்றொருபக்கத்தில்) மரகதம் நிழல்விரி - மரகதமணியொளியைப் பரப்புகின்ற, குன்றே - மலையே, நின்று - ஆனிரையில் நின்றுகொண்டு, ஊதும் - ஊதுகின்ற, குழல் - வேய்ங்குழலினது, இசை - இசையில், பழகிய- கைதேர்ந்த, மழை - நீர்கொண்ட, முகில் - நீலமேகத்தைப் போலுந் திருமேனியையுடைய திருமால், எழ - முன்னர் அவதரிக்க, எழும் - பின்னர் அவதரித்த, கொம்பே - பூங்கொம்பே, வெம் - வெம்மையாகிய, பாசம்மருவிய - பாசத்தாற்பொருந்திய, பிணி - பிறவி நோயானது, செட - கெடும்படிக்கு, மலைதரும் - அதனுடன் போர்செய்கின்ற, அருமை - அருமையாகிய, மருந்தே - மருந்து போல்வாளே, சந்தானம் - சந்ததிகள், வளர் - அபிவிர்த்தியாகின்ற, புவனமும் - புவனங்களும், உணர்வரும் - உணர்தற் கருமையாகிய, அரு - அரிய, மறையின் - வேதங்களினுடைய, வரம்பே - முடிவாகிய எல்லையே, செம்போதில் - நினது திருமுகமாகிய செந்தாமரை மலரிலுள்ள, கருணையில் - கிருபாசலத்தில், முழுகிய - முழுகி யிருக்கின்ற, கயல் - திருக்கண்களாகிய கயல்கள், திரி - திரிகின்ற, பசிய - பசுமையாகிய, கரும்பே - கரும்புபோல்வாளே, வெள் - வெள்ளிய, சோதி - காந்தியையும், கலை - கலைகளையுமுடைய, மதி - சந்திரனது, மரபில் - குலத்தில், ஓர் - ஒப்பற்ற, இளமதியென - மூன்றாம் பிறையைப்போல, வளர் - வளராநின்ற, கன்றே - மானினது இளங்கன்றுபோல்வாளே, என்று ஓதும் - என்று புகழ்ந்து சொல்லுகின்ற, திருமகள் - பூமகளுக்கும், கலைமகள் - நாமகளுக்கும், தலைமகள் - தலைமகளாகிய, மலைமகள் - பர்வதராஜகுமாரியே, செங்கோசெங்கீரை - செங்கீரையாடக்கட

வாய், தெளி - தெளிவாகிய, தமிழ் - தமிழினையுடைய, மதுரை யில் - மதுரையென்னுந் தலத்தில், வரும் - எழுந்தருளியிருக்கின் ற, ஒர் - ஒப்பற்ற, இளமயில் - இளமையாகிய மயில்போல்வாளே, செங்கோசெங்கீரை. எ - று.

குன்றே, கொம்பே, மருந்தே, வரம்பே, கரும்பே, கன்றே, மலைமகளே, செங்கோசெங்கீரை எனமுடிக்க. குருமணி - மாணிக்க மணியுள் ஒருசாதிமணி. குருமணி இறைவனுக்கும், மரகதநிழல் விரி குன்று இறைவிக்கும் உவமையாகக் கொள்க. மாணிக்கம் வெவ் வொளியையும் மரகதம் தண்ணொளியையும் தருதலியல்பாதலால் "குருமணிவெயில்விட மரகதநிழல்விரிகுன்றே" என்றார். வெயி லும் நிழலும் ஒருங்கேதங்கப்பெற்ற குன்றே என்றவாறு. வெம்பா சம் - வெம்மையாகிய பஞ்சபாசம். (பாசம் - ஆசை) இந்தப்பாசம் பிறவிக்குக் காரணமாதலால் "வெம்பாசம் மருவியபிணி" என்றார், பிணியென்றது பிறவிப்பிணியை. ஐந்தாசையே பிறவிக்குக்காரண மென்பதனை" "அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றும் - தவாப்பிறப்பீனும் வித்து" என்னுந்தெய்வப்புலமைத் திருவள்ளுவ ரருளிய அருமைத் திருக்குறளானுமுணர்க. இவ்வாறன்றிப் பாசம் என்பதற்குப் பஞ்சபாசமாகிய ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதானம் எனப்பொருள் கூறினுமாம். இவை ஆன்மாவைச் சூழ் ந்துநின்று தன்னை உடைமை என்றும், இறைவனை உடையவன் என்றும் தோன்றவொட்டாமல் மறைப்பனவாம். இந்த மறைப்புத் திருவருள்விளைவில் நீங்கும். அவ்வருளால் வீடுபேறுண்டாம் ஆத லால் "பாசப்பிணிகெட மலைதருமருந்தே" என்றார். பிறவிப்பிணி வலிதாதலால் மருந்து அதனோடு போர்செய்தன்றி எளிதில் வெல்ல வொண்ணாதென்பது தோன்ற, "வெம்பாசம் மருவிய பிணிகெட மலைதருமருமை மருந்தே" என்றார். அருமைகிடைத்தற் கருமை. புவனம் இடவாகுபெயராய் உலகத்துயிர்களை யுணர்த்துமாயினும்

இவ்விடத்து உயர்ந்தோரைக் குறித்தது. புவனமும் என்றவும்மை உயர்வுசிறப்பு. கன்று இவ்விடத்து மான்கன்றுக்காயிற்றுப் பெண்பால் விளியாதலால். இது மருண்டநோக்கத்தால் உவமையாயிற்று. திருக்கோவையார். கஉ௫ - ம் செய்யுளாகிய பொன்னனையான் றில்லை'' என்பதில் "ஆய்மறியே'' என்பதற்கு அசைந்தமான்மறிபோல்வாய'' என்றுரையாசிரியர் உரையிட்டிருத்தலுங் காண்க, மலைமகள் - அண்மைவிளியாதலால் இயல்பாயிற்று. உயிர்கள் தேவியின் திருவாணையானி கழுமாயையினின்று தோன்றினவாயினும் சிற்றறிவினவாதலால் அவையுணர்வரு மறையாயிற்று, அம்மறை பிரமபாகை கருமபாகை என்றிருகூற்றது. அக்கூறிரண்டினுட் பிரமபாகை உபநிடதம். அதின்கேள்வி விமரிசம் பாவனைகளிற்கைவந்தவர் சத்திநிபாதத்துத்தமர். அவர் அக்கேள்வியாதிகளா னடைதற் குரியது முத்தி. அதனைப்பெறுவது திருவருளாலாம். அவ்வருளே தானுதலான் அருமறையின்வரம்பாம். அவ்வரம்பினுணர்ச்சியானுய வநுபூதி முத்தியினெல்லையாம். உபநிடதவாசகமாகிய வாக்குப்பிறத்தற்கிடமாகிய விந்துதத்துவத்தை யதிஷ்டித்து நிற்கும்பரை யென்றலுமாம். இனி "சந்தானம் வளர்புவநமு முணர்வரு மறையின்வரம்பே'' என்பதற்கு, ஐந்தருவளரும் பொன்னுலகத்துப் புத்தேளிருமறிவரு மாண்புடைத்தாகிய மறைமுடிவேயென் றுரைப்பினுமாம். சந்தானம் ஐந்தருவினொன்று. இது ஐந்தருவுக்கு முபலக்ஷணம், பொன்னுலகத்துள்ள தைந்தருவாதலான். (க)

சங்கு கிடந்தத டங்கை நெடும்புய
　　றங்காய் பங்காயோர்
தமனிய மலைபடர் கொடியென வடிவு
　　தழைந்தா யெந்தாயென்
றங்க ணெடும்புவ னங்க டொழூந்தொறு
　　மஞ்சே லென்றேழும்

அபயமும் வரதமு முபயமு முடையவ
　　ணங்கே வெங்கோபக்
கங்குன் மதங்கய மங்கு லடங்கவி
　　டுங்கா மன்சேமக்
கயல்குடி புகுமொரு துகிலிகை யெனநின்
　　கண்போ லுஞ்சாயற்
செங்கய றங்குபொ லன்கொடி மின்கொடி
　　செங்கோ செங்கீரை
தெளிதமிழ் மதுரையில் வளருமொ ரிளமயில்
　　செங்கோ செங்கீரை.

(இ - ள்.) சங்கு - சங்கமானது, கிடந்த - இருக்கின்ற. தடம் - பெரிய, கை - திருக்கையினையுடைய, நெடு - நெடிய, புயல் - மேகத்தைப்போலும் திருமேனியையுடைய திருமாலுக்கு, தங்காய் - தங்கையே, பங்காய் - பாதியிடத்தையுடையதாய், ஓர் - ஒப்பற்ற, தமனிய மலை படர் - (பரமசிவமாகிய) சொர்ணமலையிற் படர்கின்ற, கொடியென - பசுங்கொடியைப்போல, வடிவு தழைந் தாய் - உருவஞ் சிறந்தவளே, எம் தாய் - எமக்கெல்லாந் தாயாயுள்ளவளே, என்று - என்று துதித்து, அம் - அழகிய, கண் - இடத்தினையுடைய, நெடு - நீண்ட, புவனங்கள் - புவனங்களிலுள்ளவர்கள், தொழுந்தொறும் - வணங்குந்தோறும், அஞ்சேல் - பயப்படாதீர்கள், என்று ஓதும் - என்று சொல்லுகின்ற, அபயமும் - அபயாஸ்தமும், வரதமும் - வரதாஸ்தமுமாகிய, உபயமும் உடைய - இவ்விரண்டு திருக்கரங்களையுமுடைய, அணங்கே - தெய்வமே, வெம் - வெம்மையாகிய, கோபம் - கோபத்தினையுடைய, கங்குல் - அந்தகாரமாகிய, மதம் கயம் - மதயானையை, மங்குலடங்க - இராத்திரிமுழுதும், விடும் - செலுத்துகின்ற, காமன் - மன்மதனது, சேமம் - காப்

பினையுடைய, கயல் - மீனனது, குடி புகும் - குடியாகப் பிரவே சித்த; ஒரு - ஒப்பற்ற, துகிலிகையென - கொடியையப்போல, நின்- உன்னுடைய, கண்போலும் - திருக்கண்களைப்போல்கின்ற, சாயல் - அழகினையுடைய, செம் - செவ்விய, கயல் - கயற்கெண்டையானது, தங்கு - தங்குகின்ற, பொலன் கொடி-அழகிய துவசத்தினையுடைய. மின் கொடி - மின்னற்கொடி போல்வாளாகிய மீநாக்ஷிதேவியே, செய்கோ செங்கீரை. எ-று.

சங்கு கிடந்த தடங்கை நெடும்புயல் தங்காய், பங்காயோர் தமனிய மலைபடர் கொடியென வடிவு தழைந்தாய், எந்தாய் என்று அங்கணெடும் புவனங்கள் தொழுந்தொறும் அஞ்சேலென்றேநும் அபயமும் வரதமும் உபயமுமுடைய அணங்கே, வெங்கோபக் கங் குல் மதங்கய மங்குலடங்க விடுங்காமன் சேமக்கயல் குடிபுகு மொ ருதுகிலிகையென நின் கண்போலுந் சாயற்செங்கய றங்குபொலன் கொடி மின்கொடி, செங்கோ செங்கீரை என முடிக்க. சங்கு என வாளாகூறினரேனும் தடங்கை நெடும்புயல் என மேல்வருதலால் இது பாஞ்சஜந்நியம் என்னும் சங்கைக்குறித்தது. சங்கு என்பதற் குத் துட்டரைச் சமிக்கச்செய்வது என்று பொருளுரைப்பர் வட நூலார். கடலில் இருளுருவாய்த் திரிந்துகொண்டிருந்த பஞ்சஜநன் என்னும் அரக்கனது என்பாளியன்றதாதலால் இதற்குப் பாஞ்சஜந் நியம் என்று பெயராயிற்று. இந்தப் பஞ்சஜநன் என்பவன் சாந் தீபன் புதல்வனைப் பிரபாசதீர்த்தத்தில் ஈர்த்துச்சென்ற ஓரரக்கன், இவன் தன் குருபுத்திரனைக் கொண்டுபோயினனென்றறிந்த கிருஷ் ணன் இவனைக்கொன்று இவன் கழுத்தெலும்பைக் கைக்கொண்ட னன் என்பது புராணகதை. இத்தன்மைத்தாய பெருஞ்சங்கு கிடத் தற்குரியது பெருங்கையாதல் வேண்டுமென்பார், சங்கு கிடந்த தடங்கை என்றார். நெடும்புயல் என்றடுத்துக்கூறினது தடங்கையை யுடைத்தாதற் கேற்புடைமை தோன்றவென்க. நெடும்புயல் உவ

மையாகுபெயர். தமனியமலையென்பது மது. பங்காய் படர்கொடி யென வடிவு தழைந்தாய் என்னுங் குறிப்பால் தமனியமலை சிவபிரானைக்குறித்தது. புவனங்களை அஞ்சேல் என்றது பன்மையிலொருமை வந்த வழுவமைதி. புவனங்கள் இடவாகுபெயர்கள். தொறும் இடையருமைப்பொருட்டு. அபயம் என்பதில் அகரம் மறையாய் இன்மைகுறித்தது. பயமின்மையைச் செய்வது என்பது பொருள். வரதம் என்பதற்கு காப்பாற்றுவதென்பது பொருள். அபயமும் வரதமு முபயமுமுடைய வணங்கே என்பதற்கு, அபயாஸ்தமும் வரதாஸ்தமும் மற்றோரிரண்டு திருக்கரங்களுமுள்ள தெய்வமே எனப் பொருள்கூறலுமொன்று. நான்கு திருக்கரங்கள் கூறினது கடவுட்டன்மை புலப்படவென்க. இதுபற்றியன்றே அணங்கே யென்றதூஉமென்க. மதகயம் என்பது மதங்கயம் எனச் சந்தநோக்கியினமிக்கது. காமன்கொடி போகநுகர்ச்சிக் குறித்தாதல்போலப் பிராட்டி யுயர்த்த கொடியும் உயிர்களின் இன்பப்பேற்றுக்குறித்தாமென்பது தோன்றக் "காமன் துகிலிகையென" என்றார். காமன் கொடி சிற்றின்பத்தைச் சின்னாளுதவும், தேவியது கொடி இருமையின்பத்தையும் பன்னாளுதவும் என்பது தோன்ற, துகிலிகையென வாளாகூறி, நின் கண்போலுஞ் சாயற்செங்கயறங்கு பொலன்கொடி என விசேடித்துக்கூறினார். (௧௦)

## கூ - வது. தாலப்பருவம்.

தென்னன் றமிழி னுடன்பிறந்த சிறுகா
　　லரும்பத் தியரும்புந்
தேமா நிழற்கண் டுஞ்சுயிளஞ் செங்கட்
　　கயவாய்ப் புனிற்றெருமை

இன்னம் பசும்புற் கறிக்கல்லா விளங்கன்
றுள்ளி மடித்தலநின்
றிழிபா லருவி யுவட்டெறிய வெறியுந்
திரைத்தீம் புனற்பொய்கைப்
பொன்னங் கமலப் பசுந்தோட்டுப் பொற்று
தாடிக் கற்றைநிலாப்
பொழியுந் தரங்கம் பொறையுயிர்த்த பொன்போற்
றொடுதோ லடிப்பொ லன்சூட்
டன்னம் பொலியுந் தமிழ்மதுரைக் கரசே
தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட வங்கயற்கண் ணமுதே
தாலோ தாலேலோ.

(இ - ள்.) தென்னன் - பாண்டியனது, தமிழினுடன் - தமிழுடனே, பிறந்த - பொதியமலையிற்றோன்றிய, சிறு கால் - தென்றற்காற்றானது, அரும்ப - மெல்லெனவீச, தீ - நெருப்பைப்போலுந் தளிர்கள், அரும்பும் - கிளைத்திருக்கின்ற, தேமா-தேமாமரங்களினது, நிழற்கண் - நிழலினிடத்து, துஞ்சும் - உறங்குகின்ற, இளம் - இளமைப்பருவத்தையும், செம் கண் - சிவந்த கண்களையும், கய வாய் - பெரிய வாயினையும், புனிற்றெருமை - ஈன்றணிமையையுமுடைய எருமைகள், இன்னம் - இன்னமும், பசு - பசுமையாகிய, புல் - புல்லை, கறிக்கல்லா - கறிக்கத்தெரியாத, இளங்கன்று - இளமைபொருந்திய கன்றுகளை, உள்ளி - நினையாநிற்க, மடித்தலம் நின்று - அவற்றின் மடியாகிய இடத்துநின்றும், இழி - ஒழுகுகின்ற, பாலருவி - பால் நதியானது, உவட்டெறிய - பெருக்கெடுப்ப, எறியும் - மோதுகின்ற, திரை - அலைகளையுடைய, தீ - தித்திப்பாகிய,

புனல் - நீரினையுடைய, பொய்கை - தடாகங்களில், பொன்-பொன் மயமாகிய, அம் கமலம் - அழகிய தாமரைமலரினுடைய, பசு - பசுமையாகிய, தோட்டு - இதழ்களிலிருக்கின்ற, பொன் தாது - பொன் மயமாகிய மகரந்தங்களை, ஆடி - பூசிக்கொண்டு, நிலாக்கற்றை - நிலவின் தொகுதிபோலும் வெள்ளொளியினை, பொழியும் - உமிழ்கின்ற, தரங்கம் - திருப்பாற்கடலானது, பொறையுயிர்த்த - பெற்றெடுத்த, பொன்போல் - இலக்குமியைப்போல, தொடு தோல் - தொடுத்திருக்கின்ற தோல்பொருந்திய, அடி - கால்களையும், பொலன் - பொன்மயமாகிய, சூட்டு - உச்சியினையுமுடைய, அன்னம் - அன்னங்களினால், பொலியும் - அழகுவாய்ந்திருக்கின்ற, தமிழ்-தமிழையுடைய, மதுரைக்கு - மதுரையென்னுந் தலத்துக்கு, அரசே - அரசாயுள்ளவளாகிய மீநாக்ஷிதேவியே, தாலோ தாலேலோ - தாலாட்டக்கடவாய் தாலாட்டக்கடவாய், அருள்-திருவருளாகிய, சூல்கொண்ட - கர்ப்பங்கொண்ட, அங்கயற்கண் - அங்கயற்கண்ணியென்னுந் திருநாமத்தையுடைய, அமுதம் - அமுதம்போல்வாளே, தாலோ தாலேலோ - தாலாட்டக்கடவாய் தாலாட்டக்கடவாய். எ - று.

தேமாநிழற்கண் துஞ்சும் புனிற்றெருமை இளங்கன்றுள்ளி மடித்தலநின் றிழிபாலருவி உவட்டெடுப்ப, எறியுந்திரைத்திம் புனற் பொய்கைப் பொன்னங்கமலப் பசுந்தோட்டுப் பொற்றாதாடிக் கற்றைநிலாப் பொழியுந்தரங்கம் பொறையுயிர்த்த பொன்போற்றொடு தோலடிப்பொலன் சூட்டன்னம் பொலியும் தமிழ்மதுரைக்கரசே, அருள் சூற்கொண்ட வங்கயற்கண்ணமுதே, தாலோ தாலேலோ என முடிக்க. அரும்ப அரும்பும் என இயையும். பாண்டியன் முத்தமிழ்க்காப் பருமைதோன்றத் தென்னன்றமிழ் என்றார். "மருவு முத்தமிழை முன்னாள் வளர்த்த பாண்டியனேபோல" என்றார் பிறரும். இவ்வாறன்றித் தென்னன் தமிழ் எனப் பிரித்துத் தென்றேயத்திற் பயிலுநற்றமிழ் எனினுமிழுக்காது. தமிழும் சிறுகாலும் பிறந்த

இடம் பொதியமலையாதலால் பிறந்த என்பதற்குப் பொதியமலையிற் பிறந்த என்றுரைக்கலாயிற்று. தேமா - இனிய மாமரம். தேம் - இனிமை. தென்றல்வீச அரும்புதல் மாவுக்கியல்பாதலால் சிறுகா லரும்ப அரும்பும் என்றும், அவ்வாறரும்புந் தளிர்கள் செவந்திருத்த லியல்பாதலால் தீயரும்பும் என்றும் கூறினர். புனிறு - ஈன்றணிமை. கயம் - பெருமை. தேமாவில் முன்மொழிபொருட் சிறப் புணர்த்து. கறிக்கல்லா - கறித்தலைக்கல்லாத. ஓசைநிரப்பிய ஒற்று மிக்கது. உள்ளி - செயவெனெச்சத்திரிபு. பொய்கை - இவ்விடத் துப் பொற்றாமரைவாவிக் காயிற்றென்றலுமொன்று. பொற்றாமரை டினண்மையால் அன்னம் பொன்போற் பொலிதற் கேதுவாயிற்று. கற்றைநிலாப்பொழியும் என்ற குறிப்பால் தரங்கம் பாற்கடலை புணர்த்திற்று. தரங்கம் சினையாகுபெயர். பொறையுயிர்த்தல் ஒரு சொல். திருவருட்குத் தாயகமாயிருத்தலால் அருள் சூற்கொண்ட வங்கயற்கண்ணமுது என்றார். அருள்சூற்கொண்ட வென்பதனைக் கண்களுக்கு விசேடணமாக்கலுமாம். (௬)

வீக்குஞ் சிறுபைந் துகிற்றோகை விரியுங்
கலாப மருங்கலைப்ப
விளையாட் டயரு மணற்சிற்றில் வீட்டுக்
குடிபுக் கோட்டியிருள்
சீக்குஞ் சுடர்தாங் கழன்மணியின் செந்தீ
மடுத்த சூட்டடுப்பிற்
செழுந்தாட் பவளத் துவரடுக்கித் தெளிக்கு
நறுந்தண் டேறலுலை
வாக்குங் குடக்கூன் குழிசியிலம் மதுவார்த்
தரித்த நித்திலத்திண்

வல்சி புகட்டி வடித்தெடுத்து வயன்மா
மகளிர் குழாஞ்சிறுசோ
றாக்கும் பெருந்தண் பணைமதுரைக் கரசே
தாலோ தாலேலோ
அருள்கூற் கொண்ட வங்கயற்கண் ணமுதே
தாலோ தாலேலோ.

(இ - ள்.) வயன் மாமகளிர் குழாம் - வயனிலத்தை யிடமாக வுடைய அழகிய பெண்கூட்டங்கள், வீக்கும் - அரையில் கட்டுகின்ற, சிறு - சிறிய, பை - பசுமையாகிய, துகில் - வஸ்திரத்தினது, தோகை - முன்றானையின்மேல், விரியும் - பரந்த, கலாபம் - கலாபமென்னு மாபரணமானது, மருங்கு - இடையை, அலைப்ப - அலையாநிற்க, விளையாட்டு அயரும் - விளையாடலைச்செய்கின்ற, மணற்சிற்றில் - மணலினாலே கட்டிய சிற்றிலாகிய, வீட்டு - வீட்டில், குடி புக்கு - குடியாகப்பிரவேசித்து, இருள் ஒட்டி - இருளையோட்டி, சீக்கும் - நீக்குகின்ற, சுடர் தூங்கு - காந்தி மிகுந்த, அழல் மணியின் - மாணிக்கமணியாகிய, செந்தீ மடுத்த - சிவந்த நெருப்பை மூட்டிவைத்த, கூட்டு-கொம்மைகளையுடைய, அடுப்பில்-அடுப்பினிடத்து, செழு - செழுமையாகிய, தாள் - தாள்களையுடைய, பவளத்துவர் - பவள விறகை, அடுக்கி - அடுக்கிவைத்து, தெளிக்கும் - தெளிவித்திருக்கின்ற, நறு - வாசனைபொருந்திய, தண் - குளிர்ச்சியாகிய, தேறல் - தேனை, உலைவாக்கும் - உலையாக வார்த்திருக்கின்ற, குடம் - குடம்போன்ற, கூன் குழிசியில் - சங்காகிய மிடாவில், அ - அந்த, மதுவார்த்து - தேனைவார்த்து, அரித்த-அரிக்கப்பட்ட, நித்திலத்தின் - முத்துக்களாகிய, வல்சி - அரிசியை, புகட்டி - பெய்து, வடித்து எடுத்து - வடித்தெடுத்து வைத்து, சிறுசோறு ஆக்கும் - சிறு சோற்றைச் சமைக்கின்ற, பெரும்-பெருமையினையுடைய, தண் - குளிர்ச்சியாகிய, பணை - மருதநிலம் சூழ்ந்த,

மதுரைக்கு - மதுரையென்னுந் தலத்திற்கு, அரசே - அரசாயுள்ளவளாகிய மீநாக்ஷிதேவியே, தாலோ தாலேலோ. எ - று.

வயல்மா மகளிர் குழாம் துகிற்சோரை விரியுங் கலாப மருங் கலைப்ப சிற்றில் வீட்டுக் குடிபுக்கு அழல் மணியின் செந்தீ மடுத்த சூட்டடுப்பில் பவளத்துவரடுக்கி தேறலுலைவாக்குங் குடக்கூன் குழிசியி லம்மதுவார்த்தரித்த நித்திலத்தின் வல்சி புகட்டி டெடுத் தெடுத்துச் சிறு சோறுக்கும் பெருந்தண்பணை மதுரைக்கரசே, அருள்—அமுதே. தாலோ தாலேலோ என முடிக்க. சிறு பைந்துகில் என்றது சிற்றுடையை. கலாபம் - பதினாறு கோவையுள்ள அரைப்பட்டிகை. இருபத்தொரு கோவையுள்ள தென்பாருமுளர். இது மேகலையெனப்படும். அலைத்தல் - வருத்தல். அழல்மணி சூரிய காந்தம் என்பாருமுளர். துவர் - விறகு. கூன் - சங்கு. இது பண்பாகுபெயர். குழிசி - திசைச்சொல். நித்திலத்தின் வல்சி என்பதில் இன் அல்வழிச்சாரியை. "காய்சினவேலன்ன மின்னியல்கண்ணின் வலைகலந்து வீசியபோது" என்னுந் திருக்கோவையார்-எ௪-ம் செய்யுளானாயினும் இன் அல்வழிச்சாரியையென வரைந்திருத்தல் காண்க. வயல் மகளிர் - மள்ளப்பெண்கள். பணை - வயலென்பாருமுளர். செழுந்தாட்பவளம் - நீட்சியாகிய பவளம். சிற்றில் வீடு - இருபெயரொட்டு. அரித்தல் - கல்முதலியவை யொழிய ஆய்தல். அழல்மணி முதலியவை கொண்டு வயல் மாமகளிர் குழாம் சிறு சோறுக்கும் பெருந்தண்பணை மதுரை யென்றமையால் பாண்டிநாட்டுப் பெருவளம் விளங்கும். மருங்கு பக்கம் என்பாருமுளர். வயன் மாமகளிர் குழாம் என்றாராயினும், சிறு பைந்துகிற்சோரை எனவும், சிறு சோறுக்கும் எனவும் கூறினமையால் இவர் மள்ளச்சிறுமியர் எனக்கொள்க. (௨)

ஓடும் படலை முகிற்படல முவர்நீத்
துவரி மேய்ந்துகளு

வூறுங் கமஞ்சூல் வயிறுடைய வுகைத்துக்
கடவுட் கற்பகப்பூங்
காடுந் தரங்கக் கங்கைநெடுங் கழியு
நீந்தி யமுதிறைக்குங்
கலைவெண் மதியின் முயறடவிக் கதிர்மீன்
கற்றை திரைத்துதழீ
மூடுங் ககன வெளிக்கூட முகடு
திறந்து புறங்கோத்த
முந்நீ ருழக்கிச் சினவாளை மூரிச்
சுறவி னேடும்விளை
யாடும் பழனத் தமிழ்மதுரைக் கரசே
தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட வங்கயற்கண் ணமுதே
தாலோ தாலேலோ.

(இ - ள்.) சினம் - கோபத்தையுடைய, வாளை - வாளைகள், உவரி - சமுத்திரசலத்தினது, உவர்நீத்து - உப்பைக்கெடுத்து, மேய்ந்து - பானம்பண்ணி, ஓடும் - ஓடுகின்ற, படலை - ஒழுங்கினையுடைய, முகில் - மேகங்களாகிய, படலம் - கூட்டத்தினது, கரு ஊறும் - கருவாகவூறுகின்ற, கமம் - நிறைந்த, சூல் - கருப்பத்தையுடைய, வயிறு - வயிறுனது, உடைய - உடையும்படிக்கு, உகைத்து - தாவி, கடவுள் - தேவர்களினது, பூ - மலர்களையுடைய, கற்பகக்காடும் - கற்பகவனத்தையும், தரங்கம் - அலைகளையுடைய, கங்கை - ஆகாசகங்கையாகிய, நெடு - நீண்ட, கழியும் - கழியையும், நீந்தி - கடந்து, அமுது - அமிர்தத்தை, இறைக்கும் - சிந்துகின்ற, கலை - கலைகளையும், வெள் - வெண்மையையுமுடைய, மதியின் -

சந்திரனுடைய, முயல்-முயற்களங்கத்தை, தடவி-வருடி, கதிர்-கிரணங்களையுடைய, மின்கற்றை-நட்சத்திரத்திரள்களை,திரைத்துதறி-சிதைத்துதறி, மூடும் - மூடப்பட்டிருக்கின்ற, ககனவெளி - ஆகாயவெளியாகிய, கூடம் - கூடத்தினது, முகடு - உச்சியை, திறந்து - திறக்கப்பண்ணி, புறம்கோத்த - அண்டத்துக்கு வெளிப்புறத்திற் கோத்துக்கொண் டிருக்கின்ற, முந்நீர் - பெரும்புறக்கடலை, உழக்கி-கலக்கி, மூரி - வலியினையுடைய, சுறவினொடும் - சுறாமீன்களுடனே, விளையாடும் - விளையாடுகின்ற, பழனம் - வயல்களையுடைய, தமிழ் - தமிழையுடைய, மதுரைக்கு - மதுரையென்னுந்தலத்துக்கு, அரசே-அரசாயுள்ளவளாகிய மீநாக்ஷிதேவியே, தாலோதாலேலோ.

சினவாளை முகில்வயிறுடைய வுகைத்து, கற்பகக்காடுங் கங்கைக்கழியுநீந்தி, மதியின் முயறடவி, மீன்கற்றை திரைத்துதறி. ககனவெளிக்கூட்முகடு திறந்து, புறங்கோத்த முந்நீருழக்கி மூரிச்சுறவினொடும் விளையாடும் பழனத் தமிழ்மதுரைக்கரசே தாலோதாலேலோ வெனமுடிக்க.

படலை - மாலை. மேகம் ஒன்றையொன்று தொடர்ந்து மாலைபோற் சேறலால், "படலைமுகில், என்றார். வாளை மேகமண்டலத்தையுந்திப் பொன்னுலகிற் கற்பகக்காட்டையுங் கங்கைக்கழியையுநீந்தி மதிமண்டலத்தைத் தடவி மீன்கற்றையையுதறிக் ககனவெளிமுகடுதிறந்து புறங்கோத்த முந்நீருழக்கிச் சுறவினோடும் விளையாடுந் தமிழ்மதுரை என்றதனாற் பாண்டிநாட்டின் பெருவளமித்தன்மைத் தென்றவாறும். ஓடுமுகிலை வாளையுகைத்தலானம் முகிலின் மிக்க வேகமுடைத் திவ்வாளை யென்றதாயிற்று. ககனவெளிக்கூடம் - இருபெயரொட்டு, இவ்வாறன்றி இவ்வண்டத்தையும் பகிரண்டத்தையும் பிளந்தெனினுமாம். இட்பொருட்குக்ககனம் வெளிக்கூடம் எனப்பாடமோதுக. இங்குள்ள வாளைகள் தமதாற்றலான்

மேகமண்டல முதலண்ட கடாகத்தளவுஞ் சேறலேயன்றிப் பெரும் புறக்கடற் சுறவையுமடக்கித் தம் வயப்படுத்தித் தமதுறையுளாகிய பழனத்திற் கொடுவந்து அவற்றோடுகூடி விளையாடுமென்றமையால், பாண்டிவேந்தர் தமதாற்றலானும், சோமசுந்தரக்கடவுளருளானும் எந்நாட்டரசரையும் வென்று தம்வயப்படுத்தி, அவர் தம்மோடு பொரும் வலியிலராதலா னட்டொழச்செய்வரென வுள்ளுறையுவமமாமாறுங்காண்க. வாளையொடெதிர்த்துப் பொரும் வன்மை சுறவுக்குமின்மைகொள்க. பழனத்தில் வாளையுங் கடலிற் சுறவுங்கூறினர் அவற்றிற்குரிமைநோக்கி. பழனவாளை பகிரதியை யெளிதினீந்தினமையா னந்நதியை யகழியென்றிழித்துரைத்தனர். (௯)

ஊறுங் கரடக் கடத்துமுகந் தூற்று
மதமா மடவியர்நின்
றுதறுங் குழற்பூந் துகளடங்க வோட
விடுத்த குங்குமச்செஞ்
சேறு வழுக்கி யோட்டறுக்குந் திருமா
மறுகி லரசர்பெருந்
திண்டே ரோதுங்கக் கொடிஞ்சிநெடுஞ் சிறுதே
ருருட்டுஞ் செங்கண்மழ
வேறு பொருவே லிளைஞர்கட விவுளி
கடைவாய் குதட்டவழிந்
திழியும் விலாழி குமிழியெறிந் திரைத்துத்
திரைத்து நுரைத்தொருபே
ராறு மடுக்குந் தமிழ்மதுரைக் கரசே
தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட வங்கயற்கண் ணமுதே
தாலோ தாலேலோ.

(இ - ள்.) ஊறும் - சுரக்கின்ற, கரடம் - மதச்குழியாகிய, கடத்து - மிடாவினாலே, முகந்து - மொண்டு, ஊற்றும் - ஊற்றுகின்ற, மதம் - மதத்தினையுடைய, மா - யானைகளை, மடவியர்-மாதர்கள், நின்று - நின்றுகொண்டு, உதறும் - உதறுகின்ற, குழல் - அளகத்தினுடைய, பூந்துகள் - புட்பப்பொடிகள், அடங்க - அடங்கும்படிக்கு, ஓட விடுத்த - செல்ல விடுத்த, குங்குமம் - குங்குமத்தினது, செம் - சிவந்த, சேறு - சேறானது, வழுக்கி - சறுக்கி, ஒட்டறுக்கும் - தடைப்படுத்துகின்ற, திரு - அழகையும், மா - பெருமையையுமுடைய, மறுகில் - வீதியில், அரசர் - அரசர்களினது, பெரு - பெருமையையும், திண் - வலியினையுமுடைய, தேர் - தேர்களானவை, ஒதுங்க - இடையும்படிக்கு, கொடிஞ்சி - சிகரங்களையுடைய, நெடு - நெடிய, சிறு தேர் - சிறிய தேர்களை, உருட்டும் - நடத்துகின்ற, செங்கண் - சிவந்த கண்களையும், மழம் - இளமையையுமுடைய, ஏறு - ரிஷபத்துக்கு, பொரு - சமானமாகிய, வேல் - வேலினையுடைய, இளைஞர் - இளையோர்கள், கடவு - செலுத்துகின்ற, இவுளி - பரிகளானவை, கடைவாய் குதட்ட - கடைவாயைக்குதட்ட, வழிந்திடும் - அதினின்று வழிந்தொழுகுகின்ற, விலாழி - பல்லடி நுரையானது, குமிழி யெறிந்து - குமிழியையுண்டாக்கிக்கொண்டும், இரைத்து - சத்தித்துக்கொண்டும், திரைத்து - அலைத்துக்கொண்டும், நுரைத்து - நுரைத்துக்கொண்டும், ஒரு-ஒப்பற்ற, பேர் ஆறு - பெருநதியாக, மடுக்கும் - ஓடுகின்ற, தமிழ் - தமிழினையுடைய, மதுரை - மதுரையென்னுந் தலத்துக்கு, அரசே - அரசாயுள்ளவளாகிய மீநாக்ஷிதேவியே, தாலோ தாலேலோ. எ - று.

மடவியருதறும் பூந்துகளாகிய புழுதியடங்க விடுத்த குங்குமச்சேறு மதமாவை வழுக்கியோட்டறுக்கு மறுகிற் பெருந்தேரொதுங்கச் சிறுதேருருட்டு மிளைஞருகைத்தவிவுளிவிலாழி குமிழியெறிந் திரைத்துத் திரைத்து நுரைத்தொரு பேராறு மடுக்குந் தமிழ்

மதுரைக்கரசே தாலோ தாலேலோவென முடிக்க. நின்றுதரல் - இடைவிடாது தறல். மா என்பது விலங்கின் பொதுப்பெயராயினும் மதம் என்ற விசேடணத்தால் ஈண்டியானையை யுணர்த்திற்று. பூந்துகள் - மகரந்தம். ஒட்டறுக்கும் என்பதில் அறுத்தல் தடுத்தற் பொருட்டு. மழவேறு இளங்காளை யெனினுமாம். விலாழி - குதிரை வாய்நுரை. இது "இவுளிவாயினும் யானைக்கையினு, முமிழ்நீர் விலாழி யென்றுரைக்கப்படுமே" என்பதனா லினிதுவிளங்கும். கொடிஞ்சி - தேர்மொட்டு. பூந்துகளுங் குங்குமச்சேறு நீங்காதனவாய், மதயானைகளுங் குதிரைகளும் அரசர் பெருந்தேர்களும் இளவரசர் சிறுதேர்களும் இடையறா தியங்குதற்கிடனாகிய நெடுந் தெருத்திரு மதுரையென அந்நகரச் சிறப்புக்கூறியவாறு. இந்நகரத் தெருக்கணெடுமைய வென்பதனை, "பன்மாடக்கூடன் மதுரைநெடுந்தெருவி, லென்னோடுநின்றா ரிருவரவருள்ளும், பொன்னோடை நன்றென்றா ளல்லளே பொன்னோடைக், கியானை நன்றென்றாளு மந்நிலையள் யானை. எருத்தத்திருந்த விலங்கிலை வேற்றென்னன் றிருத்தார்நன் றென்றேனறியேன்" "மாடநீண் மறுகிற்கூடற்குடவயின்" என்றற்றொடக்கத்துச் செய்யுட்களானுங்கண் கூட்டானுமுணர்க.

வார்க்குன் றிரண்டு சுமந்தொசியு மலர்க்கொம்
பனையார் குழற்றுஞ்சு
மழலைச் சுரும்பர் புகுந்துழக்க மலர்த்தா
துகுத்து வானதியைத்
தூர்க்கும் பொதும்பின் முயற்கலைமேற் றுள்ளி
யுகளு முசுக்கலையின்
றுழனிக் கொதுங்கிக் கழனியினெற் சூட்டுப்
படப்பை மேய்ந்துகதிர்ப்
போர்க்குன் றேறுங் கருமுகிலை வெள்வாய்
மள்ளர் பிணையலிடும்

பொருகோட் டெருமைப் போத்தினொடும் பூட்டி
யடிக்க விடிக்குரல்விட்
டார்க்கும் பழனத் தமிழ்மதுரைக் கரசே
தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட வங்கயற்கண் ணமுதே
தாலோ தாலேலோ.

(இ - ள்.) வார் - கச்சினையுடைய, குன்று இரண்டு - மலைக் கொப்பாகிய இரண்டு முலைகளை, சுமந்து - தாங்கி, ஒசியும் - துவளு கின்ற, மலர் - மலர்களையுடைய, கொம்பு - பூங்கொம்புக்கு, அனை யார் - சமானமாகிய மாதர்களினுடைய, குழல் - அளகத்தில், துஞ் சும் - உறங்குகின்ற, மழலை - மழலையிசைபாடுகின்ற, சுரும்பர்-வண் டுகள், புகுந்து - பிரவேசித்து, உழக்க - கலக்கினதால், மலர்த்தாது குத்து - புஷ்பப்பொடிகளை யுதிர்த்து, வான் - ஆகாயத்தின்கண்ண தாகிய, நதியை - கங்கையை, தூர்க்கும் - தூர்க்கப்பண்ணுகின்ற, பொதும்பில் - சோலையினின்றும், முயல் - களங்கத்தையுடைய, கலைமேல் - சந்திரன்மேல், துள்ளி யுகளும் - துள்ளிக்குதிக்கின்ற, முசுக்கலையின் - ஆண் முசுக்கலையினுடைய, தழனிக்கு - ஆரவாரத் துக்கு, ஒதுங்கி - அஞ்சி யொதுங்கி, கழனி - கழனிகளில், நெல் - நெல்லினது, சூட்டு-குவியலையுடைய, படப்பை-மருதநிலத்தில், மேய் ந்து - மேய்ந்து, கதிர் - கதிர்களையுடைய, போர்-போராகிய, குன்று- மலைமேல், ஏறும் - ஏறியிருக்கின்ற, கருமுகிலை - கரிய மேகங் களை, வெள்வாய் மள்ளர் - வெளுத்த வாயினையுடைய வுழவர்கள், பிணையலிடும் - பிணையலிடுகின்ற, பொரு - பாய்கின்ற, கோடு - கொம்புகளையுடைய, எருமைப் போத்தினொடும் - எருமைக்கடாக்க ளுடனேகூட, பூட்டி - சேர்த்து, அடிக்க - அடித்துச்செலுத்த, இடி குரல் விட்டு - அம்மேகங்களானவை இடியாகிய குரலை வெளிப்படு

த்தி, ஆர்க்கும் - ஆரவாரிக்கின்ற, பழனம் - வயனிலத்தையும், தமிழ் - தமிழையுமுடைய, மதுரை - மதுரையென்னுந் தலத்தக்கு, அரசே - அரசாயிருப்பவளாகிய மீனாக்ஷிதேவியே, தாலோதாலே லோ. எ - று.

கொம்பனையார் குழற்சுரும்பருழக்கத்தாதுகுத்து, அப்புழுதி களாற் சுரநதியைத் தூர்த்து மேடாக்கும் பொழிலினின்று மீதெழுந்து மதிமேற்றாவு முசுக்களின் பேரொலியையஞ்சிக் கழனியினெற் சூட்டெப்படப்பை மேய்ந்து நெற்கதிர்ப் போர்க்குன்றேறு முகிலை, மள்ளர் பிணையலிடும் பொருகோட் டெருமைப் போத்தினொடும் பூட்டி யடிக்க, அம்முகில் விடிக்குரல் விட்டார்க்கும் பழனத் தமிழ் மதுரைக்கரசே தாலோ தாலேலோ என முடிக்க. வார்க்குன்றிரண்டு - கச்சணிந்த முலைபோலுந் தனத்துணை. குன்றைச் சுமந்தொசியுங் கொம்பு என்றமையால் குன்றின் பெருமையுங் கொம்பின் சிறுமையும் போதரும். அன்றி குன்றின் வன்மையும் மலர்க்கொம்பின் மென்மையும் கோடலுமாம். மாதர் முகம் கண் கை கால் முதலிய வுறுப்புக்கள் தாமரை நீலம் முதலிய மலர்கள் போறலின் அவரை மலர்க்கொம்புக்கும், அவர் தனத்துணைவரைத் துணைபோறலின் அவற்றை வார்க்குன்றிரண்டிக்கும் உவமையாகக்கொள்க. வார்க்குன்று நெடுமையாகிய மலையெனவுங்கொள்க. வானதியைத் தூர்க்கும் பொதும்பு என்றமையான் அந்நதியின் மிக்கோங்கு வதிப்பொதும்பென்பது விளங்கும். முசு - வாநரவிசேடம். கள்ளுண்ட லோவாமையான் வெளிறிய வாயினராதலேக்கி மள்ளரை "வெள்வாய் மள்ளர்" என வடைகொடுத்தோதினர். "போரடித்த விதியவன் பொன்றுமூன், றாரடித்தவ னூர்தியென் றெண்ணியே, யேரடிப்ப விருசிறை யுங்கொடு, மாரடித் திரியும் மடவன்னமே" என்பதூஉ மிச்செய்யுட் பொருட்கிணம். (கு)

காரிற் பொழிமழை நீரிற் சுழியெறி
கழியிற் சிறுகுழியிற்

கரையிற் கரைபொரு திரையிற் றலைவிரி
கண்டலின் வண்டலினெற்
போரிற் களநிறை சேரிற் குளநிறை
புனலிற் பொருகயலிற்
பொழிலிற் சுருள்புரி குழலிற் கணிகையர்
குழையிற் பொருகயல்போய்த்
தேரிற் குமரர்கண் மார்பிற் பொலிதரு
திருவிற் பொருவில்வரிச்
சிலையிற் றிரள்புய மலையிற் புலவி
திருத்திட ஆழ்த்தமுடித்
தாரிற் பொருதிடு மதுரைத் துரைமகள்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ.

(இ - ள்.) காரில் - மேகங்களிலும், பொழிமழை நீரில் - அம்மேகங்கள் பொழிகின்ற மழைத்தாரைகளிலும், சுழியெறி - சுழிகளைவீசுகின்ற, கழியில் - கழியிலும், சிறுகுழியில் - சிறியபள்ளங்களிலும், கரையில் - தடாகங்களினுடைய கரைகளிலும், கரைபொருதிரையில் - அக்கரைகளில் மோதுகின்ற அலைகளினும், தலைவிரிகண்டலின் - தலை விரிந்திருக்கின்ற தாழைகளிலும், வண்டலில் - மாதர்விளையாடு மிடங்களிலும், நெற்போரில் - நெல்லாலியற்றிய போர்களிலும், களநிறைசேரில் - களத்தில் நிறைந்திருக்கின்ற நெற்சேர்களிலும், குளநிறைபுனலில் - தடாகங்களில் நிறைந்திருக்கின்ற நீரிலும், பொரு - பாய்கின்ற, கயலின் - சேற்கெண்டைகளைப்போல, கணிகையர் - தாசிகளினுடைய, பொழி

வில்-சோலையைப்போலும், சுருள்விரி - சுருண்டுவிரிந்திருக்கின்ற, குழலில் - அளகத்திலும், குழையில் - குண்டலங்களிலும், பொரு - பாய்கின்ற, கயல்-கண்களாகிய சேற்கெண்டைகளானவை, போய்- சென்று, குமரர்கள் - இளையோர்களினுடைய, தேரில் - தேர்களிலும், மார்பில் - அவ்விளையோர்களுடைய மார்பிலும், பொலிதரு - அழகுசெய்கின்ற, திருவில் - அழகியவடிவிலும், பொருவில் - ஒப்பில்லாத, வரிசிலையில் - கட்டுகளையுடைய விற்களிலும், திரள் புய மலையில் - அவர்களுடைய திரண்டிருக்கின்ற புயமாகிய மலைகளிலும், புலவிதிருத்திட - அவ்விளையோர்கடத்தம் நாயகிகளினது ஊடலைத்திருந்தச் செய்தமையால், ஊழ்த்த முடித்தாரில் - உதிர்ந்த கிரீடங்களிலிருக்கின்ற மாலைகளிலும், பொருதிடு - பாய்கின்ற சிறப்பினையுடைய, மதுரை - மதுரையென்னுந் தலத்துக்கு, துரைமகள் - அரசாகிய பாண்டியனுடைய மகளே, தாலோதாலேலோ - தாலாட்டக்கடவாய், சங்கம்வளர்ந்திட - சங்கமானதோங்க, நின்ற - நிலைபெற்ற, பொலன்கொடி - பொன்மயமாகிய கொடிபோல்வாளாகிய மீநாக்ஷிதேவியே, தாலோதாலேலோ. எ - று.

கார்முதல்குளநிறை புனலிறவாய-கிய இடங்களில், பொருகயல் மீனையொத்த, கண்கையாது குழலினுங் குழையினும் பொருகயல்விழிபோய், குமரர்கள் மார்பு, திரு, சிலை, புயமலை, முடித்தார் என்பவற்றோடு பொருதற் கிடனாகிய மதுரைத்துரைமகளே. சங்கம்வளர்ந்திட நின்ற பொலன்கொடியே தாலோதாலேலோ வெனமுடிக்க.

கார்முதலிய விடங்களிற் பொருகயல் என்றமையால் குறிஞ்சிநெய்தல் மருதம் என்னுந் திணைகள் மயங்கினவாறு கூறப்பட்டது. கார்முதலிய விடங்களிற் சென்று அவற்றோடு பொருகயல் போலக் கணிகையர்கண் மீனும் குமரர்கள் மார்பு முதலியவற்றிற் பொருதிடும் என்றமையால் தொழிலுவமமும் பண்புவமமுமாம.

வித்தை பதினான்கிற்கும் முதலாதலால் இறைவியைச், "சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி" என்றார். வண்டல் - மகளிர் விளையாட்டு. இது "வண்டலுற்றேம்" என்று முதனூல் திருக்கோவையார். உகரம், செய்யுளாலும் அதனுரையாலும் இனிதுவிளங்கும். "வண்டலயாயத்துட னயர்ந்தோ" என்றார் பிறரும். பொருகயலின் என்பதில் இன் ஐந்தாவத னுப்புப்பொருட்டு. புயமலை - மலைபோலும்புயம், "புலவிதிருத்திட வூழ்த்தமுடித்தார்" என்றது குமரர்கள் தந்தேவியரதாட றணிப்பான்பணியுங்காலம் மாதரதுபாதராட நத்தான்மலருதிர்ந்த முடிமாலை. "சிலைமலிவாளுத லெங்கை யதாகமெனச் செழும்பூண்மலைமலிமார்பி னுதைப்பத்தந்தான் றலை" என்றார், போதமேவிய திருவாதவூரடிகளும். "ஆதிபகவன்றனதாடறணிப்பான் பணியவவ்விறைவன் பாதமிறைஞ்சு மதற்கும்" என்றார் பிறரும். (௬)

சேனைத் தலைவர்க டிசையிற் றலைவர்கள்
செருவிற் றலைவர்களாற்
சிலையிற் றடமுடி தேரிற் கொடியொடு
சிந்தச் சிந்தியிடுஞ்
சோனைக் கணைமழை சொரியப் பெருகிய
குருதிக் கடலிடையே
தொந்த மிடும்பல் கவந்த நிவந்தொரு
சுழியிற் பவுரிகொள
ஆனைத் திரளொடு குதிரைத் திரளையு
மப்பெயர் மீனமுகந்
தம்மனை யாடுக டற்றிரை போல
வடற்றிரை மோதவெழுந்

தானைக் கடலொடு பொலியுந் திருமகள்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ.

(இ - ள்.) சேனைத்தலைவர்கள் - சத்துரு ராசாக்களினுடைய படைத்தலைவர்களும், திசையிற்றலைவர்கள் - திக்குப்பாலகர்களுமாகிய இவர்களுடைய, தடம் - பெருமைபொருந்திய, முடி - கிரீடங்களும், தேரிற் கொடியொடு - தேரிற் கட்டிய கொடிகளோடு, சிந்த - சிதறும்படிக்கு, செருவில் - யுத்தரங்கத்தில், தலைவர்களால் - நினது படைத்தலைவர்களால், சிலையில் - வில்லினாலே, சிந்தியிடும் - பிரயோகம் பண்ணப்படுகின்ற, சோனை மழை - விடாது பொழிகின்ற மழையைப்போல, கணை - பாணங்களை, சொரிய - சொரிந்தமையால், பெருகிய - பெருக்கெடுத்த குருதிக்கடலிடையே - இரத்தசாகரத்தில், தொந்தமிடும் - கூத்தாடுகின்ற, பல - பலவாகிய, கவந்தம் - குறைத்தலைப் பிணங்களானவை, நிவந்து - நிமிர்ந்து, ஒரு சுழியில் - ஒரு சுழலில், பவுரி கொள - வட்டமிட்டுச் சுழல, அப்பெயர் மீனை - அப்பெயர்கொண்ட யானைமீன்களையும் குதிரைமீன்களையும், முகந்து-வாரி, அம்மனை யாடு - அம்மனை யாடுகின்ற, கடல் - கடலினுடைய, திரைபோல் - அலைகளைப்போல, அடல்-வலியினையுடைய, திரை - இரத்தசாகரத்தினுடைய அலைகளானவை, ஆனைத்திரளொடு-ஆனைக்கூட்டங்களோடு, குதிரைத்திரளையும் - குதிரைக்கூட்டங்களையும், மோத - வாரி மோதும்படிக்கு, எழும் - உண்டாகின்ற, தானைக்கடலொடு - சேனாசமுத்திரத்துடனே, பொலியும் - அழகுசெய்கின்ற, திருமகள் - திருமகளாகிய மீநாக்ஷிதேவியே, தாலோ தாலேலோ. எ - று.

செருவிற்றலைவர்களால் சேனைத்தலைவர்கள் திசையிற்றலைவர்கள் சிதறுமாறு அவர் சொரியு மப்புமாரியாற் பெருகிய குருதிக்

சுடற் சுழியிற் பல கவந்தம் பவுரிகொள்ள, யானைத்திரள் குதிரைத் திரள்களை அக்குருதிக்கடற்றிரை யெடுத்தெறிய எழுந்த தானைக்கட லொடு பொலியுந் திருமகள் தாலோ தாலேலோவென முடிக்க. சேனைத்தலைவர் - திசைத்தலைவர்க் குதவியாய் வந்தவர்கள். செருவிற் றலைவர்கள் - தேவியின் தானைக்குரியவர்கள். இவர்கள் இவ்வாறு உதிரமாறோடப் பொருதது தேவியார் திக்குவிசயஞ்செய்யப்போந்த காலத்தில். யானை - யானையை விழுங்குமீன். குதிரை - குதிரையை விழுங்குமீன் எனக் கடலுக்கும், யானை குதிரை எனச் செருக்களத் துதிரக் கடற்கும் ஏற்பவுரைத்துக்கொள்க. சோனை - விடாமழை தொந்தம் - இரண்டு. தொந்திடல் - இணைதல். அதாவது ஒன்றோ டொன்று சேர்ந்திடுதல். பல கவந்தங்கள் இரட்டையிரட்டையாய்ச் சேர்ந்து பவுரியாட வென்றவாறு. பவுரி - ஓர் கூத்து. அது சுழன்று டுகை. "வேதாகப்பவுரி விசுங்களாசநிலை" என்றார் மேலோரும். அம்மனை - அம்மானை, அதாவது கழங்காடுகை. தேவியார் திக்குவிச யம் போந்தகாலத்தேத் திசைத்தலைவர் முதலியோரெய்திய தோல்வி யும், தம்படை யெய்திய வெல்வியும் இச்செய்யுளிற் புகழப்பட்ட வாறுமாயிற்று (௭)

அமரர்க் கதிபதி வெளிறக் களிறெதிர்
பிளிறக் குளிறியிடா
வண்ட மிசைப்பொலி கொண்ட லுகைத்திடு
மமரிற் றமரிரிய
கமரிற் கவிழ்தரு நிரையிற் றலைவர்கண்
மலையிற் சிறகரியுங்
கடவுட் படையொடு பிறகிட் டிடைவது
கண்டு முகங்குளிராப்
பமரத் தருமலர் மிலையப் படுமுடி
தொலையக் கொடுமுடிதாழ்

ணைபம்பொற் றடவரை திரியக் கடல்வயி
றெரியப் படைதிரியாச்
சமரிற் பொருதிரு மகனைத் தருமயில்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ.

(இ - ள்.) அமரர்க்கு - தேவர்களுக்கு, அதிபதி - அதிபதியாகிய, தேவேந்திரனுடைய, வெளிறு - வெளுத்தநிறத்தினையுடைய, அக்களிறு - அந்த அயிராவதமென்னும் யானையானது, எதிர்பிளிற - எதிராகவொலிக்க, குளிறியிடா - ஆரவாரித்து, அண்டமிசைப்பொலி - ஆகாயத்தி லியங்குகின்ற, கொண்டல் - மேகத்தை, உகைத்திடும் - செலுத்துகின்ற, அமரில் - யுத்தத்தில், தமரினொடும் - சுற்றத்துடனே, கமரில் - யுத்தகள வெடிப்பில், கவிழ்தரு - கவிழ்ந்துவிழுகின்ற, திசையிற்றலைவர்கள் - திக்குப்பாலகர்களும், மலையின் சிறகு அரியும் - மலைகளினுடைய சிறகுகளை யறுக்கின்ற, கடவுட்படையொடு - தெய்வத்தன்மையுள்ள வச்சிராயுதத்துடனே, உடைந்து பிறகிடுவது - தோற்றுப்புறங்காட்டி யோடுவதை, கண்டு - கடைக்கணித்து, முகங்குளிரா - முகமலர்ந்து, பமரம் - வண்டுகளையுடைய, தருமலர் - தருமலர்மாலையை, மிலையப்படும் - அணிந்திருக்கின்ற, முடி - கிரீடமானது, சொலிய - உடையவும், கொடுமுடி - சிகரங்கள், தாழ் - தங்கிய, பைம்பொற்றடவரை - பசும்பொன்மயமாகிய மகாமேருமலையானது, திரிய - சுழலவும், கடல் - கடலினது, வயிறு - வயிறானது, எரிய - அழலவும், படைதிரியா - வாள்செண்டுவேல் களாகிய ஆயுதங்களைத்திரித்துவிட்டு, சமரில் - யுத்தத்தில், பொரு - பொருகின்ற, திருமகனை - செல்வக்குமாரனை, தரு - ஈன்ற, மயில் - மயில்போல்வாளாகிய மீனாக்ஷிதேவியே, தாலேலோதாலேலோ. எ - று.

அமரர்க்கதிபதிகொண்ட லுகைத்திடும் அமரில், திசையிற் றலைவர்கள் பிறகிட்டுடைவதுகண்டு, முகங்குளிரா, முடிதொலைய வரைதிரியக் கடல்வயிறெரியப் படைதிரியாப் பொருதிருமகனைத் தருமயில் தாலோதாலேலோ வெனமுடிக்க.

உடைவதுகண்டு முகங்குளிராப் பொருதிருமகன் எனவியையும். "அமரர்-சாவாதவர்எனப்பொருள்படுஞ் சொல்லாயினும் ஈண்டுக் கற்புத்தளவுஞ் சாவாதவரெனப் பொருள்கொள்க. குளிறியிடா, முகங்குளிரா, படைதிரியா, என்பன செய்யாவென்னும் வாய்பாட்டுவினையெச்சங்கள். இந்திரனுக்குதவியாய் வந்தமையால் திசையிற்றலைவர்கள் கைப்படையைவச் சிரப்படையென்றுரைக்கலாயிற்று. இந்திரனுக்கும் அவனுதவிப்படைத் தலைவருக்கு மொற்றுமையுண்மையா லிவ்வாறு கூறப்பட்டதெனினுமாம். பிறகிட்டுடைவது என்பதை உடைந்து பிறகிடுவது என விகுதிபிரித்துக் கூட்டிப்பொருளுரைத்துக்கொள்க, உடைவது முன்னும் பிறகிடுவத பின்னும் நிகழ்வனவாதலான். இது எதுபோலவெனின், "தொழுதெழுவாள்" என்பதனை விகுதிபிரித்துக்கூட்டி எழுந்துதொழுவாள் எனப்பொருள்கொண்டாற்போலவென்க. தரு - கற்பகத்தரு. தாழ் என்பதற்கு நீண்டவென் றுரைத்தலுமொன்று. பைம்பொற்றடவரை - பசும்பொன்னுனியன்ற பெரியமலையெனினுமமையும். திருமகன் என்றது உக்கிரவழுதியை. அமரர்க்கதிபதி வெளிறக்களிறெதிர்பிளிறக் குளிறியிடா வண்டமிசைப் பொலிகொண்ட லுகைத்திடு மமரில் என்றதனுல் முன்வந்தெதிர்த்தவன் இந்திரன் என்பது விளங்கும். இந்திரன் முடிதொலைந்தவாறும், மேருவரைதிரிந்தவாறும், கடல்வயிறெரிந்தவாறும் மதுரைப்புராணத்திற் காண்க. மலையின் சிறகு எனப்புணரற்பாலது மலையிற்சிறகு எனத்திரிந்து புணர்ந்தது சந்தவின்பப்பொருட்டு,

(அ)

முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ்
நூல்பாழ் போகாமே
முளரிக் கடவுள் படைத்த வசுந்தரை
கீழ்மே லாகாமே
அதிரப் பொருது கலிப்பகை ஞன்றமிழ்
நீர்நா டாளாமே.
அகிலத் துயிர்க ளயர்த்து மறங்கடை
நீணீர் தோயாமே
சிதைவுற் றரசிய னற்றரு மங்குடி
போய்மாய் வுறாமே
செழியர்க் கபயரு மொப்பென நின்றுணா
ராதா ரோதாமே
மதுரைப் பதிதழை யத்தழை யுங்கொடி
தாலோ தாலேலோ
மலயத் துவசன் வளர்த்த பசுங்கிளி
தாலோ தாலேலோ.

(இ - ள்.) முது சொல் - முதிர்ந்த சொல்லில் வல்ல, புலவர் - புலவர்களால், தெளித்த பசும் தமிழ் நூல் - தெளிவிக்கப் பட்ட இனிமையாகிய தமிழ் நூல்கள். பாழ்போகாமே - பாழாகப் போகாமலும், முளரிக்கடவுள் - தாமரைமலரை யிடமாகவுடைய பிரமாவினால், படைத்த - உண்டாக்கப்பட்ட, வசுந்தரை - பூமியானது, கீழ்மேலாகாமே - கீழ்மேலாகாமலும், அதிர - உயிர்கள் நடு ங்க, பொருத - வருத்தின, கலி - கலியாகிய, பகைஞன்-பகைவன், தமிழ் - செந்தமிழ் வழங்குகின்ற, நீர் நாடு-நீர்மையையுடைய பாண் டிநாட்டை, ஆளாமே - ஆளாமலும், அகிலத்து - பூமியிலுள்ள,

உயிர்கள் - சீவகோடிகளெல்லாம், அயர்த்தும் - மறந்தும், அறங் கடை - பாவமாகிய, நீணீர் - சாகரத்தில், தோயாமே-மூழ்காமலும், அரசியல் - இராசநீதியானது, சிதைவுற்று - கெட்டு, நற்றருமம் - நல்ல தருமமானது, குடிபோய் மாய்வாகாமே - அப்புறப்பட்டு மாய்ந்துபோகாமலும், செழியர்க்கு - பாண்டியர்களுக்கு, அபயரும் - சோழரும், ஒப்பென - சமானமென்று, நின்று - நின்று, உணராதார்- தெரியாதவர்கள், ஓதாமே -, சொல்லாமலும், மதுரைப்பதி - மதுரை யென்னுந் திருப்பதியானது, தழைய - விளங்க, தழையுங்கொடி - விளங்குகின்ற கொடிபோல்வாளாகிய மீநாக்ஷிதேவியே, தாலோ தாலேலோ - தாலாடக்கடவாய், மலயத்துவசன் - மலயத்துவச பாண்டியன், வளர்த்த - வளர்க்கப்பெற்ற, பசுங்கிளி - பசுங்கிளி போல்பவளாகிய மீநாக்ஷிதேவியே, தாலோ தாலேலோ - தாலாடக் கடவாய். எ - று.

நூல்பாழ்போகாமே, வசுந்தரைகீழ்மேலாகாமே, கலிப்பகை ஞன் நீர்நாடாளாமே, உயிர்கள் அறங்கடை நீணீர் தோயாமே, தரு மங்குடிபோய் மாய்வாகாமே, உணராதார் செழியர்க்கபயரு மொப் பென வோதாமே, மதுரைப்பதி தழையத் தழையுங்கொடி தாலோ தாலேலோவென முடிக்க. முதுசொற்புலவர் என்றது அகத்தியனா யுள்ளிட்டோரை. இவர்கள் தெளித்த பசுந்தமிழ்நூல்கள் அகத்திய முதலிய நூல்களாம். தமிழ் நீர்நாடு என்பதற்கு நீர்வளமுள்ள தமிழ் நாடு மூன்றுமென்றுரைப்பினுமாம். அறங் கடை - பாவம். இது அறத்தினீக்கப்பட்டமையின் அறங்கடையெனப்பட்டது. இதனை, "அறன்கடை நின்ருருளெல்லாம் பிறன்கடை நின்ருரிற் பேதையா ரில்'' என்னும் திருக்குறளுரையானறிக. நூல் பாழ்போதலாவது - அவற்றின் பொருளுணர்வாரின்றி அவை வாளாகிடத்தல். கீழ்மே லாதலாவது - உலகியல்கள் வழுவுதல். கலிப்பகைஞன் றமிழ்நீர் நாடாளலாவது - உலகத்துயிர்கள் வறுமை முதலியவற்ருற் கோட்

படுதல். உயிர்கள் அறங்கடை நீணீர்தோய்தலாவது-விலக்கானவற்றைச்செய்து அதனுல் நிரயம்புகுதல். தருமங்குடிபோய் மாய்வாதலாவது - கொடுங்கோன்மையான் உயிர்கள் தமக்குரிய வொழுக்கங் கனிற்றவறுதல். உணராதாரோதலாவது - திக்குவிசய மகிமையை யறியாதவர்கள் பாண்டியர்க்குச் சோழனையும் ஒப்பென்றுரைத்தல். இவை முதலாயின நிகழாமைச் செங்கோன்மையைச் செலுத்தின இறைவியின் பேரருண்மாண்பு இச்செய்யுளிற் கூறப்பட்டது. அரசியல் சிதைவுற்று என்றமையால் கொடுங்கோன்மையாயிற்று. அதிரப்பொருது என்றும் பாடம். கடலிற் பெருநீரின்மையான் அது நீணீர் எனப்பட்டது. பசுங்கிளி - பச்சைக்கிளி. மதுரைப்பதி மீநாக்ஷி சுந்தரேசர் எனினுமாம். (க)

தகரக் கரிய குழற்சிறு பெண்பிளை
நீயோ தாயோன்வாழ்
சயிலத் தெயிலை வளைப்பவ ளென்றெதிர்
சீறு வீரோதா
நிகரிட் டமர்செய் கணத்தவர் நந்திபி
ரானோ டேயோடா
நிலைகெட் டுலைய வுடற்றவு டைந்தகொ
ரானோ ருகாமே
சிகரப் பொதிய மிசைத்தவ ழுஞ்சிறு
தேர்மே லேபோயோர்
சிவனைப் பொருத சமர்த்த னுகந்தருள்
சேல்போன் மாயாமே
மகரத் துவச முயர்த்தபொ லன்கொடி
தாலோ தாலேலோ

மலயத் துவசன் வளர்த்த பசுங்கிளி
தாலோ தாலேலோ.

(இ - ள்.) தூயோன் - நிர்மலராகிய பரமசிவனுனவர், வாழ் - எழுந்தருளியிருக்கின்ற, சயிலத்து - கைலாயமலையினது, எயிலை - மதிலை, வளைப்பவள் - சுற்றிக்கொள்ளவல்லவள், தகரக்கரிய - மயிர்ச்சாந்தொழுகுகின்ற கருமையாகிய, குழல் - அளகத்தினையுடைய, சிறு பெண்பிள்ளை நீயோ - சிறியபெண்பிள்ளையாகிய நீயா, என்று எதிர்சீறு - என்றெதிராகக்கோபித்து, வீறுஒதா பெருமைகளைச் சொல்லி, நிகரிட்டு - எதிரிட்டு, அமர்செய் - யுத்தஞ்செய்த, கணத்தவர் - சிவகணங்களும், நந்திபிரானோடே - நந்திகேசுவரருடனே, ஓட - ஓடி, நிலைகெட்டுலைய - தாங்கள் நின்றநிலை கெட்டுவருந்த, உடற்ற - போர்செய்ய, உடைந்ததோர் - தோற்றதாகிய ஒப்பற்ற, ஆன் ஏறு ஆகாமே - ரிஷபக்கொடியைப்போலுமாகாமலும், சிகரம் - சிகரங்களையுடைய, பொதியமிசை - பொதியமலையின்மேல், தவழும் - ஊர்கின்ற, சிறுதேர் மேலேபோய் - தென்றலாகியசிறிய தேர்மேலேறிச்சென்று, ஓர் - ஒப்பற்ற, சிவனைப்பொருத - பரமசிவனுடனே யுத்தம்பண்ணின, சமர்த்தனுகந்தருள் - சமர்த்தனாகிய மன்மதனுயர்த்தருளிய, சேல்போல்மாயாமே - மீனக்கொடியைப் போலு மாய்ந்துபோகாமலும், மகரத்துவச முயர்த்த - மகரக்கொடியையெடுத்த, பொலன்கொடி - பொற்கொடிபோல்வாளே, தாலோ தாலேலோ. எ - று.

தூயோன்வாழ் சயிலத்தெயிலை வளைப்பவள் சிறுபெண் பிளை நீயோவென்று சீறுவீறோதாநிகரிட்டமர்செய்கணத்தவர் நந்தி பிரானோடேயோடாநிலை கெட்டுலையவுடற்ற வுடைந்ததொரானே றுகாமே, பொதியமிசைத் தவழுஞ் சிறு தேர்மேலேபோ யோர் சிவனைப்பொருத சமர்த்தனுகந்தருள் சேல்போன்மாயாமே மகரத் துவச முயர்த்தபொலன்கொடி தாலோதாலேலோ வெனமுடிக்க,

எயில்வளைத்தல்-முற்றிக்கைசெய்தல் (பகைவ ரரண்வளைத்தல்.) பகைவரரண் வளைப்பாரணிவது உழிஞைப்பூ மாலையாதலால், இவ்வெயில் வளைத்தலையுழிஞையென்பர். இதனை "முடிமிசை யுழிஞைசூடி யொன்னார் கொடிநுடங்கா ரெயில்கொளக் கருதின்று" என்பதனானுணர்க. எதிர்சீறல் - அறைகூவல். ஓர்சிவன் என்றது இவனின்மிக்கோரொருத்தரிலரென்பதையும், ஓரானேறு என்றது இதனின்மிக்கது மிதனைநிகர்த்தது மின்றென்பதையும் வலியுறுத்துகின்றன. இங்ஙனம் பெருமைவாய்ந்த சிவபிரானோடு ஒரு சிறுதேரூர்ந்துசென்று பொருதானாதலால் மன்மதனைச் சமர்த்தன் என்றார். அச்சமர்த்தனுந் தோற்று நீற்றுருவாகநோக்கினவிறைவனது விடைக்கொடியும் படையுமுடைந்து பின்னிட்டமையான் அவ்விருகொடிகள்போ லாதமகரத்துவச முயர்த்த பொன்கொடி என்றார். தகரம்-மாதர்குழலிற் பூசுவதோர் மணத்தைலம். நீயோவென்ற ஓகாரம் எதிர்மறைப்பொருளது. உடைந்தது முற்றெச்சம். மன்மதன் இறைவனோடு பொரப்போமிடங் கைலைமலையாதலான் மலையிற் றவழப் பயின்ற தேரூர்ந்துசென்றான் என்றற்கு, சிகரப்பொதியமிசைத் தவழுஞ் சிறுதேர்மேலேபோ யோர் சிவனைப்பொருத சமர்த்தன் என்றார். (௬௦)

## ௪-வது. சப்பாணிப்பருவம்.



நாளவட் டத்தளிம நளினத் தொடுதுத்தி
　　நாகணையும் விட்டொ ரெட்டு
நாட்டத்த னும்பரம விட்டத்த னுந்துஞ்சு
　　நள்ளிருளி னொப்ப னண்ட
கோளவட் டம்பழைய நேமிவட் டத்தினொடு
　　குப்புற்று வெற்பெட்டு மேழ்

குட்டத்தி னிற்கவிழ மூதண்ட வேதண்ட
கோதண்ட மோடு சக்ர
வாளவட் டஞ்சுழல மட்டித்து நட்டமிடு
மதுமத்தர் சுத்தநித்த
வட்டத்தி னுக்கிசைய வொற்றிக் கனத்ததன
வட்டத்தை யொத்திட் டதோர்
தாளவட் டங்கொட்டு கைப்பாணி யொப்பவொரு
சப்பாணி கொட்டி யருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டி யருளே.

(இ - ள்.) தாளம் - தாளிணையும், வட்டம் - வட்ட வடிவத்தினையுமுடைய, தளிமம் - தவிசாகிய, நளினத்தொடும் - தாமரை மலருடனே, துத்தி - படப்பொறியையுடைய, நாகணையும் - நாக சயனத்தையும், விட்டு - துறந்து, ஓர் - ஒப்பற்ற, எட்டு நாட்டத்தனும் - எட்டுக்கண்களையுடையோனாகிய பிரமாவும், பரம வீட்டத்தனும் - பரமபதத்தை யுடையோனாகிய திருமாலும், துஞ்சும் - தம் பதங்களிற்சென்று துயில்கின்ற, நள்ளிருணாப்பண் - மிக்க இருளாகிய அரையாமத்தில், அண்டகோள வட்டம் - அண்டகோளமாகிய வட்டமும், பழைய நேமிவட்டத்தினொடு - பழமையாகிய பூமண்டலத்தோடு, குப்புற்று - கவிழாநிற்கவும், வெற்பு எட்டும் - குலாசலங்களெட்டும், ஏழ் குட்டத்தினில் கவிழ - ஏழு சமுத்திரத்தில் கவிழாநிற்கவும், மூதண்டம் - சத்தியலோகமும், வேதண்டம் - மேருமலையாகிய, கோதண்டமோடு - தமது வில்லோடு, சக்ரவாள வட்டம் - வட்டமாயிருக்கின்ற சக்கிரவாள பர்வதமும், சுழல - சுழலாநிற்கவும், மட்டித்து - மண்டலித்து, நட்டமிடும் - நர்த்தனஞ்செய்

கின்ற, மது மத்தர் - தேனுள்ள மத்த மலர்மாலையைத்தரித்த பரம சிவனது, சுத்த - நிர்மலமாகிய, நிர்த்த வட்டத்தினுக்கு - நர்த்தனஞ் செய்கின்ற பவுரியாடலுக்கு, இசைய - இயைய, கனத்த - கனத் திருக்கின்ற, தன வட்டத்தை - திருமுலைகளினுடைய வட்ட வடி வை, ஒத்திட்டது - நிகர்த்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, தாள வட்டம் - வட்டமாகிய தாளத்தை, ஒற்றி - ஒன்றோடொன்றைச் சேர்த்து, கொட்டும் - கொட்டுகின்ற, கைப்பாணியொப்ப - கைத்தாளவொத் திசைக்குச் சமானமாக, ஒரு சப்பாணி கொட்டியருள் - ஒரு சப் பாணி கொட்டியருளக்கடவாய், தமிழொடு பிறந்து - தமிழுடனே யுற்பவித்து, பழ மதுரையில் - பழமையாகிய மதுரையென்னுந் தலத்தில், வளர்ந்த - வளர்ந்தருளிய, கொடி - கொடிபோல்வாளே, சப்பாணி கொட்டியருள்-சப்பாணி கொட்டியருளக்கடவாய். எ-று.

எட்டு நாட்டத்தனும் பரம வீட்டத்தனும் துஞ்சுநள்ளிருளி னொப்ப னண்டகோள வட்டமாகிய குப்புற்றுக் கவிழ்ந்து சுழல மட் டித்து நட்டமிடு மத்தர் நித்தவட்டனுக் கிசையத் தாளவட்டங்கொ ட்டு கைப்பாணியொப்பவொரு சப்பாணி கொட்டியருள், தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி சப்பாணி கொட்டியருள் என முடிக்க. நாளம் உட்டுளையெனினுமாம். தனிமானினம் என்ப தற்குக் கோயிலாக நிலைபெற்ற என்றலுமொன்று. நாகணை யென் பது நாகணையென நிலைமொழியீறு தொகுத்தது. "நாகணை என்புழி வடமொழி யம்முக்கெட்டு கெரவீறாய்நின்றது" இதனை "நாகணை யான்" "பெற்றொன்றுயர்த்த பெருமான்" "பேதுசெய்து வாதுசெய் த் திருவுள்ளமே" என்பவற்றானுமறிக. என்றார் சிவஞானமுனி வர். துஞ்சும் என்பதற்கு அவ்விருவரும் முறையே மனோவதியினும் வைகுந்தத்தினும் போய்த்தங்குகின்ற என்றுரைத்தலுமுண்டு. அன் றியும் அவ்விருவரும் கழிகின்ற என்பாருமுளர். பிரளயபேதம் பல வுள. அவற்றுள் இது, மூதண்ட வேதண்ட கோதண்டமோடு சக்

கிடவாளஞ் சுழல என்றமையால் மகாப்பிரளயமன்றாம், ஆதலானவ் வுரை பொருந்தாமையறிக. மத்திம அதமப் பிரளயங்களில் சங்கார காரணனாகிய இறைவன் தநுவாதிகளைத்தந்து முன்னரொடுக்கமெய்திய வுயிர்களுய்வா னுடல்புரியுங் காற்றனதருளாகிய சத்தியொருத்தியே யுடனிருந்து அவ்வாடற்கேற்பத் தாளமுழக்குவளென்றுணர்க. இங்ஙனந் தாளமுழக்கலும் மீளப்படைக்குங் கருத்தைப் புலபபடுத்துகின்றது. கைப்பாணி யொப்பவொரு சப்பாணி கொட்டியருள் என்றதில் ஈண்டும் யாமுய்வேமாதலா னியதனைச் செய்தருள் என வுள்ளுறை தோன்றுமாறுங் காண்க. குப்புற்று - எச்சத்திரிபு. கவிழ சுழல என்னு மெச்சங்கள் நட்டமிடலோடு முடிந்தன. அதுபோலப் பிறிதொன்றின்மையால் ஓர் தாளவட்டம் என்றார். ஒரு சப்பாணி கொட்டியருள் என்றது ஒருகால் சப்பாணி கொட்டியருள் என்றபடி. சப்பாணி கொட்டல் - கைகொட்டல். சப்பாணி - சேர்ந்தகை. (ச - சேர்ந்த, பாணி - கை.) (க)

பொய்வந்த நுண்ணிடை நுடங்கக் கொடிஞ்சிப்
பொலந்தேரொ டமரகத்துப்
பொன்மேரு வில்லியை யெதிர்ப்பட்ட ஞான்றம்மை
பொம்மன்முலை மூன்றி லொன்று
கைவந்த கொழுநரொ டுள்ளப் புணர்ச்சிக்
கருத்தா னகத்தொடுங்கக்
கவிழ்தலை வணக்கொடு முலைக்கண்வைத் திடுமொரு
கடைக்கணோக் கமுத மூற்ற
மெய்வந்த நாணினொடு நுதல்வந் தெழுங்குறு
வெயர்ப்பினொ டுயிர்ப்பு வீங்கும்
விம்மிதமு மாய்நின்ற வுயிரோவ மெனவூன்று
விற்கடை விரற்கடை தழீஇத்



பட்டாணிப்பாவம குமநதை இரணடுகைகளாயுமசோகததுகைகொட்டுதல.

வைதவந்த நாணினொடு தவழ்தந்த செங்கைகொடு
சப்பாணி கொட்டி யருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டி யருளே.

(இ - ள்.) பொய்வந்த - பொய்யுருவாகிய, நுண் - நுண்ணிய, இடை - இடையானது, நுடங்க - வளையும்படி, கொடிஞ்சி - சிகரத்தையுடைய, பொலம் - பொன்மயமாகிய, தேரொடு - தேருடனே, அமரகத்து - யுத்தகளத்தில், பொன்மேரு - பொன்மயமாகிய மேருவை, வில்லினை - வில்லாகவுடைய பரமசிவனை, எதிர்ப்பட்டஞான்று - எதிர்ப்பட்டநாளில், அம்மை - அன்னையே, பொம்மல் - பூரிப்பையுடைய, முலைமூன்றில் - மூன்றுமுலைகளில், ஒன்று - ஒருமுலையானது, கைவந்தகொழுநரொடும் - எல்லாவற்றிலும் பூர்ணராகிய நாயகருடனே, உள்ளப்புணர்ச்சிக்கருத்தால் - உள்ளப்புணர்ச்சியாகிய கருத்தினாலே, அகத்தொடுங்க - உள்ளேமறைதலும், கவிழ்தலைவணக்கொடு - கவிழ்ந்ததலைவணக்கத்துடனே, முலைக்கண் வைத்திடும் - முலையினிடத்தில் வைக்கின்ற, ஒருகடைக்கணோக்கு - ஒருகடைக்கண் பார்வையானது, அமுதமூற்ற - அமுதத்தைச்சொரிய, மெய்வந்த - மெய்யாயுண்டாகிய, நாணினொடு - நாணத்துடனே, நுதல்வந்தெழும் - நுதலில்வந்தெழுகின்ற, குறுவெயர்ப்பினொடு - குறுவெயர்வினுடனே, உயிர்ப்பு வீங்கும் - பெருமூச்சுவிடும், விம்மிதமுமாய் - அச்சத்தோடுங்கூடி, நின்ற - நிற்கின்ற, உயிரோவமென - உயிருள்ளசித்திரம்போல, ஊன்று - ஊன்றின, விற்கடை - வில்லினது நுனியை, விரற்கடை - விரனுனியினாலே, தழீஇ - தழுவி, வைதவந்த - வருகின்ற, நாணினொடு - வில்லினது நாரியுடனே, தவழ்தந்த - தவழ்ந்த, செங்கையொடு - சிவந்த கைகளினால், சப்பாணிகொட்டியருள். எ - று.

அமரகத்து மேருவில்லினை யெதிர்ப்பட்டனொன்று மூலை மூன்றிலொன்று கொழுநரொடு முள்ளப்புணர்ச்சிக் கருத்தானகத் தொடுங்கக் கவிழ்தலைவணக்கொடு முலைக்சண்வைத்திடுங் கடைக்க ணோக்க முதமூற்றாணிரெனடு குறுவெயர்ப்பினொடு விம்மிதமுமாய் உயிரோவமென வூன்றுவிற் கடைவிரற்கடை தழீஇத்தை வந்த நாணினொடு தவழ்தந்த செங்கைகொடு சப்பாணிகொட்டியருள் என முடிக்க.

தானிருக்கவும் தனது நுண்மையாற் பலராலு மிலையென் றுரைக்கப்பட்டமையால் இடையைப் பொய்வந்த நுண்ணிடை என்றார். "பொய்கூறிலஞ்சிலர் போலிலையேயென" எனச் சிவப்பிர காச முனிவரும் "அறந்திகழ்தரு மகிலமு மிதனுலழியுமென்ற யன்படைத்திலனே, சிறந்த வேல்விழியை முன் படைத்தயர்ந்து செங்கரஞ்சோர்ந்த தேர்திகைத்த, மறந்ததோகடுந் தவைத்ததோக ளபவனமுலைப்பொறைசுமந்துருகி யிறந்ததோவுளதோவில்லையோ வினிமேலெய்துமோ வறியொணுதிடையே" எனப்பிறரும், பொட் டணியானுதல் போயிறுமென்று பொய்போலிடை" எனத் திருவா தவூரடிகளும், இன்னும் ஆன்றோர்பலரு மிவ்வாறு கூறுமாறுங் காண்க. நுடங்க எதிர்ப்பட்டவெனவினையும். பொன்மேரு வில் லினை நுண்ணிடை நுடங்க எதிர்ப்பட்ட அம்மையென்பதனல் இறைவனது பேராற்றலும் அம்மையின் ஆற்றலின்மையும் விளங்கு கின்றன வேனும், மூலைமூன்றிலொன்று மறைதலும் கொழுநன் என்னுங் கருத்தானேர்ந்த தலைவணக்கம் நாணமுதலியவை தகை யாவிடின், அச்சிவபிரானையும் எளிதின் வெல்லுவள் என்பது குறி ப்பெச்சம். கைவந்த தை வந்த என்பன ஒருசொன்னீர்மைய, இவற் றிற்கு முறையே கைவா தைவா என்பனபகுதிகளாம். மெய்வந்த நாண் - இயற்கையாகிய நாண், "ஒருநாள்பிரியா துயிரிற்பழகியுடன் வளர்ந்தவருநாண்" என்பது திருக்கோவையார்.

பூமரு வெடிப்பமுகை விண்டதண் டலையீன்ற
    புனைநறுந் தளிர்கள் கொய்தும்
பொய்தற் பிணாக்களொடு வண்டற் கலம்பெய்து
    புழுதிவிளை யாட்டயர்ந்தும்
காமரு மயிற்குஞ்சி மடவனப் பார்ப்பினொடு
    புறவுபிற வும்வளர்த்துங்
காந்தள்செங் கமலத்த சழுநீர் மணந்தெனக்
    கண்பொத்தி விளையாடியுந்
தேமரு பசுங்கிள்ளை வைக்கூடுந் தாழியுந்
    திரள்பொற் கழங்காடியுஞ்
செயற்கையா னன்றியு மியற்கைச் சிவப்பூறு
    சேயிதழ் விரிந்த தெய்வத்
தாமரை பழுத்தகைத் தளிரொளி துளும்பவொரு
    சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்தபழ மதுரையில் வளர்ந்தகொடி
    சப்பாணி கொட்டியருளே.

(இ - ள்.) பூ - மலர்கள், மருவெடிப்ப - வாசனைவீசும்படி, முகை - அரும்புகள், விண்ட - விரிந்த, தண்டலை - சோலைகள், ஈன்ற - தளிர்த்த, புனை - அலங்கரிக்கத்தக்க, நறு - வாசனையையுடைய, தளிர்கள் - தளிர்களை, கொய்தும் - பறித்தும், பொய்தற்பிணாக்களொடு - தோழிக்கூட்டங்களாகிய பெண்களுடனே கூடி, கலம் - சிறு கலங்களில், புழுதி பெய்து - மணலரிசியிட்டுச் சமைத்து, வண்டல் விளையாட்டயர்ந்தும் - வண்டல் விளையாடலைச்செய்தும், கா மரு - சோலைகளின் மருவியிருக்கின்ற, மயிற்குஞ்சி - மயிற்குஞ்சுகளையும், மடஅனப்பார்ப்பினொடு - இளமையாகிய அன்னக்

குஞ்சுகளுடன், புறவு - புறாக்களையும், பிறவும் - பிற பறவைகளை யும், வளர்த்தும் - வளரச்செய்தும், காந்தள் - காந்தண்மலர்கள், செங்கமலத்த - செந்தாமரைப்போதை யிடமாகவுடைய, கழுநீர் மணந்தென - கருங்குவளை மலர்களைச் சேர்ந்ததுபோல, கண்பொத்தி விளையாடியும் - கண்ணை மூடி விளையாடியும், தேமரு - இன்பம் பயக்கின்ற, பசுங்கிள்ளை - பசிய கிளிப்பிள்ளைகளை, வைத்து முத் தாடியும் - (முன்கையில்) வைத்து முத்தமிட்டுக்கொண்டும், திரள் பொற்கழங்கு ஆடியும் - பொன்னினாலியற்றிய திரண்ட வம்மனையா டியும், செயற்கையானன்றியும் - செயற்கையினாலே யல்லாமலும். இயற்கைச் சிவப்பூறு - இயல்பாகச் சிவப்பூறுகின்ற, சே இதழ் விரி ந்த - சிவந்த இதழ்களோடு மலர்ந்த, தெய்வத்தாமரை - தெய்வத் தன்மையையுடைய தாமரைமலர்போலும், பழுத்த கைத்தளிர் - அழகு முதிர்ந்த கையாகிய தளிர்கள், ஒளி தளும்ப - காந்தி தளும் பும்படி, ஒரு சப்பாணி கொட்டியருள். எ - று.

கொய்தும், அயர்ந்தும், வளர்த்தும், கண்பொத்தி விளையாடி யும், வைத்துமுத்தாடியும், கழங்காடியும் செயற்கையானன்றி இயற் கைச் சிவப்பூறுகைத் தளிரொளி தளும்பவொரு சப்பாணி கொட் டியருள் என முடிக்க.

பொய்தல் - மகளிர்கூட்டம். முகைவிண்ட தண்டலை-முகை விள்ளுதற்கிடமாகிய தண்டலை. தளிர்கொய்தலாதியாய விளையாட் டுக்கள் இளஞ்சிறுமியர்க்குரியன. கொய்து முதலிய வினையெச்சங் கள் ஊறும் என்னும் வினைகொண்டன. ஈன்ற என்பதற்கு அரும் பின எனலுமாம். காமரு என்பதில் காமர் அழகெனவும் உகரஞ் சாரியை யெனவும் கூறலுமுண்டு, "காமரு கழனிதோறுங் கடை சியர் குரவை யீட்டம்" என்புழியு மிவ்வாறே பொருளுரைக்கப் பட்டமை காண்க. காமம் மருவெனல் அம்முக்கெட்டுக் காமருவென் [illegible] எனச் சிலப்பதிகாரத்து அடியார்க்கு நல்லாருரைப்பர்,

கின்னை வைத்து முத்தாடியும் என்றேனும் வைத்தற்கிடமாகிய முன்கை வருவித்துரைக்கப்பட்டது. "இறைக்குவளையு மெகின்மூங் கின்ளையும்" "பூவைமலர் நிறத்தெம் பெருமாட்டி பொருப்பனையன் பாவை வளர்க்குங்கிளி முன்கையாள்" எனச் சிவப்பிரகாசமுனிவரும், "வளர்கிளி யழகு பழகிய கையாள்" என இரட்டையரும் கூறுதலுங் காண்க. செயற்கைச் சிவப்பு - ஐவணமனைத்தட்டன் முதலியவற்றானுளதாஞ் சிவப்பு. (கூ)

விண்ணளிக் குஞ்சுடர் விமானமும் பரநாத
 வெளியிற் றுவாத சாந்த
வீடுங் கூடம்புபொதி காடுந் தடம்பணை
 விரிந்ததமிழ் நாடு செற்றிக்
கண்ணளிக் குஞ்சுந் தரக்கடவுள் பொலியுமறு
 காற்பீட மும்மெம் பிரான்
காமர்பரி யங்கக் கவின்றங்கு பள்ளியங்
 கட்டிலுந் தொட்டி லாகப்
பண்ணளிக் குங்குதலை யமுதொழுகு
 குமுதப் பசுந்தேற லூறலாடும்
பைங்குழவி பெருவிரல் சுவைத்துநீ பருகிடப்
 பைந்தேற லூறு வண்கைத்
தண்ணளிக் கமலஞ் சிவப்பூற வம்மைபொரு
 சப்பாணி கொட்டி யருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
 சப்பாணி கொட்டி யருளே.

(இ - ள்.) விண்-தேவேந்திரனாலே, அளிக்கும் - தரப்பட்ட, சுடர் - காந்தியினையுடைய, விமானமும் - இந்திரவிமானத்தையும்,

பரநாதம் - மேலாகிய நாதத்தையுடைய, வெளியில் - ஆகாயத்தில், துவாதசாந்த வீடும் - பன்னிரண்டங்குலத்தினது முடிவாகிய வீட்டையும், கடம்பு பொதி காடும் - கடப்பவிருக்ஷம் பொருந்திய வனத்தையும், தடம் - பெரிய, பணை விரிந்த - வயல்கள் விரிந்திருக்கின்ற, தமிழ் நாடும் - செந்தமிழ்நாட்டையும், அளிக்கும் - காக்கின்ற, நெற்றிக்கண் - நெற்றிக்கண்ணினையுடைய,சுந்தரக்கடவுள்-சோமசுந்தரக்கடவுள், பொலியும் - வீற்றிருக்கின்ற, அறுகாற் பீடமும் - அறுகாற் பீடத்தையும், எம்பிரான் - எம்மிறைவரது, காமர் - (காண்பார்க்கு) விருப்பத்தைத்தருகின்ற, பரியங்கம் - படுக்கையாகிய, கவின் தங்கு - அழகுதங்கிய, பள்ளியங்கட்டிலும் - படுக்கைக் கட்டிலையும், தொட்டிலாக - தொட்டிலாகும்படி, பண்ணளிக்கும் - இசையைத்தருகின்ற, குதலை பழுதொழுகு - குதலைச்சொல்லாகிய வமுதமொழுகுகின்ற, குமுதப்பசுந்தேறலூறலாடும் - செங்குமுதம் போன்ற திருப்பவளநீர் பசிய தேன்போலூறுகின்ற, பைங்குழவி - பசிய குழவியே, பெருவிரல் - பெருவிரலை, சுவைத்து நீ பருகிட - சுவைத்து நீ யுண்ண, பைந்தேறலூறு - பசியதேனை யூறுகின்ற, வண்கை - வளப்பம்பொருந்திய கைகளாகிய, தண்ணளிக்கமலஞ் சிவப்பூற - குளிர்ச்சிபொருந்திய வண்டுகணெருங்கிய தாமரைமலரானது சிவப்பெழ, அம்மை - மீநாகூஷியம்மையே, ஒரு சப்பாணி கொட்டியருள். எ - று.

விண்ணளிக்கும் விமானமும், துவாதசாந்த வீடும், கடம்பவனமும், தமிழ்நாடும், அறுகாற்பீடமும், பள்ளியங்கட்டிலுமாகிய விவற்றையொரு தொட்டிலாகக்கொண்டு, பெருவிரல் சுவைத்து நீ பருகிடத் தேறலூறு வண்கைக்கமலம் சிவப்பூறச் சப்பாணிகொட்டியருள் என முடிக்க.

விண் இடவாகுபெயரா யிந்திரனை யுணர்த்திற்று. சுடர்விமானம் என்றது இந்திரன் தனது பழிதீர்ந்து மதுரா கடம்பவனமா

யிருந்த ஞான்று பூசித்துழி மயனுனிருமிப்பித்து மீனாக்ஷிசுந்தரே சர்க்குச் சமர்ப்பித்ததோர் விமானத்தை. துவாதசாந்தவீடு-பன்னிரு விரலுயர்ச்சிக்கு மேலாயதோர்நிலை. அறுகாற்பீடம்-சொக்கேசர் சந்நிதியிலுள்ளதாகிய அறுகான் மண்டபம். மதுரையில் இறைவி தடாதகைப்பிராட்டியா யவதரித்து விளையாடினமையால் அவ்விளம்பருவத்துக்கேற்ப, விமானமுதலியவற்றைத் தொட்டிலாகக்கூறினர். பரநாதம்-சிவத்திலுலதிட்டிக்கப்பட்ட நித்தியதத்துவமாம். தடம்பணை விரிந்த என்பதனை நாட்டிற்கு அடையாக்காது பெருமையாகிய துறைகள் பலவாய்ப்பரந்த தமிழ்மொழியெனத் தமிழிற்கு அடையாக்கினுமாம். பள்ளியங்கட்டில் என்பதில் அம் சாரியை. தண்ணளி - தண்ணிய அருளுமாம். இப்பொருள் அபயவரதங்களைக் குறிக்கும். கமலம் உவமையாகுபெயர். குமுதமுமது. பண்ணளிக்கும் என்பதற்குப் பண்களை வைத்துக் காக்கின்ற எனினுமமையும். பண்-இந்தளம், நட்டபாடை, பஞ்சுரம், பழம்பஞ்சுரம், புறநீர்மை முதலாயின. கோமளக்கரஞ்சேர்த்தம் மைகொட்டுழிக்கன்றிச் சிவக்குமாதலால், தண்ணளிக்கமலஞ் சிவப்பூறவென்றார். சிவப்பூரவென்றும் பாடம். (ச)

சேலாட்டு வாட்கட் கருங்கடற் கடைமடை
திறந்தமுத மூற்று கருணைத்
தெண்டிரை கொழித் தெறிய வெண்டிரை நெருப்பூட்டு
தெய்வக் குழந்தை யைச்செங்
கோலாட்டு நின்சிறு கணைக்காற் கிடத்திக்
குளிப்பாட்டி யுச்சி முச்சிக்
குஞ்சிக்கு நெய்போற்றி வெண்காப்பு மிட்டுவளர்
கொங்கையிற் சங்கு வார்க்கும்
பாலாட்டி வாயிதழ் நெரித்தூட்டி யுடலிற்
பசுஞ்சுண்ண முந்தி மிர்ந்து

பைம்பொற் குறங்கினிற் கண்வளர்த் திச்சிறிய
பரூஉமணித் தொட்டி லேற்றித்
தாலாட்டி யாட்டுகைத் தாமரை முகிழ்த்தம்மை
சப்பாணி கொட்டி யருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டி யருளே.

(இ - ள்.) வெள் - வெள்ளிய, திரை - அலைகளையுடைய சமுத்திரத்தில், நெருப்பு ஊட்டு - நெருப்பையூட்டிய, தெய்வக்குழந்தையை - தெய்வத்தன்மையையுடைய முருகவேளென்னுங் குழந்தையை, சேலாட்டு - சேற்கெண்டையைப்போலப் பிறழ்கின்ற, வாள் - வாளுக்கொப்பாகிய, கண் - திருக்கண்களாகிய, கரு - கரிய, கடல் - கடலினுடைய, கடை - கடையானது, மீடை திறந்து-மடையெடுத்துக்கொண்டு, அமுதம் - அமுதத்தை, ஊற்று - சொரிகின்ற, கருணை - கருணையென்னும், தெள் - தெளிந்த, திரை - அலைகளை, கொழித்தெறிய - எடுத்துவீசாநிற்க, செங்கோலாட்டு - செங்கோல் செலுத்துகின்ற, நின் - உன்னுடைய, சிறுகணைக்கால் - சிறியகணைக்கால்களின்மேல், கிடத்தி - வளர்த்தி, குளிப்பாட்டி - ஸ்நாநஞ்செய்வித்து, உச்சி - உச்சியிலிருக்கின்ற, முச்சிக்குஞ்சிக்கு - உச்சிக்கொண்டைக்கு, நெய்போற்றி - எண்ணெய்பூசி, வெள் - வெள்ளிய, காப்புமிட்டு - திருநீற்றுக் காப்புமிட்டு, வளர் - வளர்கின்ற, கொங்கையின் - தனங்களிரண்டினின்றும், சங்குவார்க்கும் - சங்கிலே வார்க்கப்படுகின்ற, பாலாட்டி - பாலைக்குலுக்கி, வாயிதழ் - வாயிதழை, தெரித்தூட்டி - தெரித்துண்பித்து, உடலில் - திருமேனியில், பசு - பசுமையாகிய, சுண்ணமும் - வாசனைப்பொடிகளையும், திமிர்ந்து - பூசி, பைம்பொன் - பசும்பொன்னைப்போலிருக்கின்ற, குறங்கினில் - துடைகளின்மேல், கண்வளர்த்தி - நித்திரைசெய்வித்

து, பருமணி - பருத்தரத்தினங்களைப் பதித்திருக்கின்ற, சிறியதொட்டிலேற்றி - சிறுதொட்டின்மேலேற்றி, தாலாட்டி - நாவையசைத்து, ஆட்டு - தொட்டிலாட்டின, கைத்தாமரை - கைகளாகிய தாமரைமலர்களை, முகிழ்த்து - குவித்து, அம்மை - மீனாக்ஷியம்மையே, சப்பாணிகொட்டியருள். எ - று.

தெய்வக்குழந்தையை வாட்கண்மடைதிறந்து அமுதமூற்று கருணைத்திரைகொழித்தெறியக் கணைக்காற்கிடத்திக் குளிப்பாட்டிப் போற்றி இட்டு ஊட்டித்திமிர்ந்து கண்வளர்த்தித் தொட்டிலேற்றித் தாலாட்டி யாட்டுகைத் தாமரைமுகிழ்த்தம்மை சப்பாணிகொட்டியருள் என முடிக்க. சேலாட்டு என்பதற்குச் சேல்போன்ற என்றும், சேலைவருத்துகின்ற என்றும் உரைப்பினுமாம். அன்றியும் சேலைக்கற்பிக்கின்ற என்றலு மொன்று, சேலைக்கற்பித்தலாவது-பருவநோக்கி யுயிர்களையீன்று காத்தருளுமாற்றைக் கற்பித்தல். வாள் - ஒளியுமாம். திரை சினையாகுபெயர். நெருப்பூட்டு என்பதற்கு நெருப்புக்கிரையாக்கின என்றலு மொன்று. இளம்பருவத்தே சூர்முதறடிந்தமையும் அன்றிற்பொறையையடல் வேலிற்போழ்ந்தமையுமாகிய இன்னோ ரன்னவற்றைநோக்கித் தெய்வக்குழந்தை என்றார். வெண்டிரை நெருப்பூட்டலாவது-கடல்சுவறவேல்விட்டமை. செங்கோலம் என்பதனை செங்கோல்எனக் கடைக்குறையாக்கிச் செந்நிறம்வாய்ந்தவென் றுரைப்பினுமாம். வெண்காப்பு - திருநீறுமாம் வாயிதழ் - வாயுதடு. பசுஞ்சுண்ணம் - பொற்சுண்ணம். பசும்பொற்குறங்கு - பசுமையாகிய அழகியதொடை, பசும்பொனரம்பையுமாம். சிறியதொட்டிலென வியையும். இறைவிக்கு உண்ணுமுலையாதலாற் கொங்கையிற் சங்குவார்க்கும் பால் என்றார். பாலைக்குழுக்கலும் வாய்நெரித்தூட்டலும் தாயர்க்குப் பொதுச்செயல்கள். சங்கு - பால்டை. அம்மே, நீயீன்றருளினபிள்ளை யாரை இங்ஙனஞ் சீராட்டி மகிழ்ந்தனையன்றே, அங்ஙனமே யாமுங் குழவியாய்க்

தருளின நின்னையுஞ் சீராட்டி மகிழ்கின்றேமென்பது குறிப்பெச்சம். (௬)

வானத் தாருமொ டுடுத்திரள் சிந்த
மலைந்த பறந்தலையின்
மண்ணவர் பண்ணவர் வாளின் மறிந்தவர்
மற்றவர் பொற்றொடியார்
பானற் கணையு முலைக்குவ டும்பொரு
படையிற் படவிமையோர்
பைஞ்சுடர் மூளையொடும்புதி தூண்டு
பசுந்தடி சுவைகாணச்
சேனப்பந்தரி னலைகைத் திரள்பல
குரவை பிணைத் தாடத்
திசையிற் றலைவர்கள் பெருநா ணெய்தச்
சிறுநா ணொலி செய்யாக்
கூனற் சிலையி னெடுங்கணை தொட்டவள்
கொட்டுக சப்பாணி
குடைநிழல் விற்புலி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி

(இ - ள்.) அவர் - மண்ணை யிடமாகவுடைய அரசருந் தேவர்களுமாகிய அவர்களுடைய, பொற்றொடியார் - பொன்னாலியற்றிய வளையலணிந்த மாதர்களுடைய, பானற்கணையும் - நீலோற்பலத்துக்கொப்பாகிய கண்களாகிய பாணங்களும், முலைக்குவடும் - முலைகளாகிய மலைகளும், பொரு - பொருகின்ற, படையின் - ஆயுதங்களைப்போல, பட - படும்படிக்கு, வாளின் - வாளாயுதங்களினாலே, மறிந்தவர் - கவிழ்ந்தவர்களாகிய, மண்ணவர் - பூமியை யிடமாக

வுடைய வரசரும், பண்ணவர் - தேவர்களும், வானத்துருமொடு - மேகத்தினிடியுடனே, உடுத்திரள் - நட்சத்திரத்திரள்கள், சிந்த - உதிரும்படிக்கு, மலைந்த - போர்செய்த, பறந்தலையில் - யுத்தகளத்தில், அலகைத்திரள் பல - பலவாகிய பேய்க்கூட்டங்கள், சேனப்பந்தரில் - பருந்தினிடப்பட்ட பந்தலின்கீழ், இமையோர் - தேவர்களினுடைய, பை - பசுமையாகிய, குடர் - குடல்களையும், மூளையொடும் - மூளைகளையும், புதிதுண்டு - புதிய விருந்தாகவுண்டு, பசுந்தடி - பசுமையாகிய தசையினது, சுவை காணு - சுவையைக் கண்டு, பிணைத்து - கையைக்கோத்துக்கொண்டு, குரவை யாட - குரவையாட்டமாட, திசையிற்றலைவர்கள் - திக்குப்பாலகர்கள், பெருநாணெய்த - மிகவும் வெட்கத்தை யடையும்படி, சிறுநாணொலி செய்யா - நாணைச் சிற்றொலிசெய்து, கூனற் சிலையின் - வளைவாகிய வில்லிலே, நெடுங்கணை தொட்டவள் - நீண்ட பாணங்களைப் பிரயோகம் பண்ணினவளாகிய மீனாக்ஷியம்மையே, கொட்டுக சப்பாணி - சப்பாணி கொட்டியருள்க, குடை நிழலில் - வெண்கொற்றக்குடை நிழலின்கண், புவி மகளை - பூமிதேவியாகிய மகளை, வளர்த்தவள் - வளர்த்தவளாகிய மீனாக்ஷியம்மையே, கொட்டுக சப்பாணி. எ - று.

பறந்தலையில், வானின் மறிந்தவர் பொற்றொடியார் பானற்கணையு முலைக்குவடும் படையிற்பட, சேனப்பந்தரி னலகைத்திரளிமையோர் குடர்மூளை யொடுமுண்டு பசுந்தடி சுவைகாணுக் குரவை பிணைத்தாடத் திசையிற்றலைவர்கள் பெருநாணெய்தச் சிறுநாணொலிசெய்யாக் கூனற்சிலையி னெடுங்கணை தொட்டவள் சப்பாணி கொட்டுக, குடைநிழலிற் புவிமகளை வளர்த்தவள் சப்பாணி கொட்டுக எனமுடிக்க. மண்ணவர் இறைவி சேனைவீரர். பண்ணவர் இமையோர், இவர் திக்குப்பாலகருடைய படைவீரர். பட ஆட எய்த என்னும் வினையெச்சங்கள் தொட்டவென்னும் வினைகொண்டன. பா

ஞல் உவமையாகுபெயராய்க் கண்ணையுணர்த்திற்று. வாளின்மறிந்தவர் பொற்கொடியார் என்றது போர்க்களத்திற் கணவரை யிழந்த மாதர். அவர் அக்கணவருடம்பின் மேல்வீழ்ந்து புலம்புங்கால் அன்னோர் கண்டனங்க ளவ்வுடம்புகளிற் படுகின்றனவென்றற்கு, பானற்கணையு மூலக்குவடும் பொருப்படையிற்பட என்றார். ஈண்டுள்ள வலகைகள் முன்னெல்லாம் வேந்தர் போரில் வீந்த மாந்தர் தீந்தசைச் சுடர்களை யுண்டறிந்தன, இப்போது தேவி போரில், அமுதாசநராயிருந்து வீந்த தேவர்களூறுப்புக்களையுஞ் சுவைபடவுண்டு களித்தாடினவென்பார், புதிதுண்டு. பசுந்தடி சுவைகாணு ஆடவென்றார். கூனற்சிலை - வளைவாகிய நல்ல வில் எனினுமாம். நற்சிலையாவது மண்ணவரேயன்றிப் பண்ணவருஞ்சிறு நாணொலிக்கஞ்சிய பெருமைவாய்ந்த வில். (சு)

சமரிற் பிறகிடு முதியரு மபயரு
மெதிரிட் டமராடித்
தண்ட தரன்செல் கரும்பக டுந்திரன்
வெண்பக டோடுடையாத்
திமிரக் கடல்புக வருணன் விடுஞ்சுற
வருணன் விடுங்கடவுட்
டேரி னுகண்டெழ வார்வில் வழங்கு
கொடுங்கோல் செங்கோலா
இமயத் தொடும்வளர் குலவெற் பெட்டையு
மெல்லைக் கல்லினிறீஇ
எண்டிசை யுந்தனி கொண்டு புரந்து
வடாது கடற்றுறைதென்
குமரித் துறையென வாடு மடப்பிடி
கொட்டுக சப்பாணி

குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
  கொட்டுக சப்பாணி.

(இ - ள்.) சமரில் - யுத்தத்தில், பிறகிடும் - முதுகிட்ட, உதியரும் - சேரரும், அபயரும் - சோழரும், எதிரிட்டு - எதிர்த்து, அமராட - யுத்தம்பண்ணவும், தண்டதரன் - யமன், செல் - ஏறிச்செல்கின்ற, கரும்பகடு - கரிய எருமைக்கடா, இந்திரன் - தேவேந்திரனுடைய, வெண்பகடொடு - வெள்ளையானையுடன், உடையா - தோற்றுப்போய், திமிரம் - இருளினையுடைய, கடல் - சமுத்திரத்தில், புக - ஒளித்துக்கொள்ளவும், வருணன்விடும் - வருணனாலே செலுத்தப்படுகின்ற, சுறவு - சுறுவாகிய வாகனமானது, அருணன் விடும் - அருணனாலே செலுத்தப்படுகின்ற, கடவுள் - சூரியனது, தேரில் - இரதத்தில், உகண்டெழ - பாய்ந்தெழவும், வார்வில்வழங்கு - நீண்டவில்லிலே பிரயோகம்பண்ணுகின்ற, கொடுங்கோல் செங்கோலா - கொடியபாணமானது செங்கோலாகவும், இமயத்தொடும் - இமயமலையோடும், வளர் - வளர்கின்ற, குலவெற்பெட்டையும் - அஷ்டகுலாசலங்களையும், எல்லைக்கல்லினிறீஇ - எல்லைக்கல்லாக நிறுத்தி, எண்டிசையும் - எட்டுத்திக்குகளையும், தனி-தானாக, கொண்டு - கைக்கொண்டு, புரந்து - பாதுகாத்து, வடாதுகடற்றுறை - வடக்கின்கண்ணுளதாகிய கடற்றுறையானது, தென் - தெற்கின்கண்ணுள்ளதாகிய, குமரித்துறையென - கன்னியாகுமரித் துறையைப்போல, ஆடும் - நீராடுகின்ற, மடப்பிடி - இளமையாகிய பெண்யானைபோல்வாளாகியமீநாக்ஷியம்மையே, கொட்டுகசப்பாணி.

உதியரும் அபயரும் தன்படையோடுசேர்ந்து தேவரோடு பொருதுழி, இயமனூர்தியும் இந்திரனூர்தியும் உடைந்து திமிரக் கடல்புகவும், வருணனூர்தி அருணன்விடுந்தேரினுகண்டெழவும், வில்வழங்கு கொடுங்கோல் செங்கோலாகவும், வெற்பெட்டையு

மெல்லைக்கல்லினிறீ இயெண்டிசையுந் தனிகொண்டு புரந்து வடா துகடற்றுறை தென்குமரித்துறையென வாடுமடப்பிடி கொட்டுக சப்பாணியென முடிக்க. சமரிற்பிறகிடு முதியருமபயரு மெதிரிட் டமராட என்றமையால், பிறகிட்ட வவ்விருதிறத்தாரும் பின்னர்ப் பாண்டியர்க்கு நண்பினராய், திக்குவிசயத்தில் தேவிக்குதவியாக, தேவரை யெதிர்த்தாரொன்றதாயிற்று. திசைத்தலைவரொண்ம ருள் ளும் மிகுவலியனுதலால் தண்டதரனை முற்கூறினர். தண்டம்-செங் கோல், தரன் - தரித்தவன், இவ்வேதுவானே இயமனுக்குச் செங் கோற் கடவுளென்னும் பெயர்வழங்குவது. பகடு-பல பொருளொரு சொல்லாயினும் ஈண்டுத்தண்டதரன் செல்கரும்பகடு என்றதனுற் காரொருமைப் போத்தைக் குறித்தது. திமிரக்கடல் இருட்பிழம்பு மாம். அதுபெரும்புறக்கடற் கப்பாற்பட்டதாகிய பேரிருள். கட வுட்டேர்-தெய்வத்தன்மையமைந்ததேர் எனினுமாம். கொடுங்கோ ல்செங்கோலாதலாவது - இறைவி தனது கொடுமையாகிய அம்பி னுற் பகைவரைவென்றடக்கிச் செங்கோன்மைசெலுத்தச்செய்தமை. இமயத்தொடும் வளர்குல வெற்பெட்டையு மெல்லைக்கல்லினிறுவ லாவது - மேருமலைவரையுந் தனதாணைசெலநிற்றல். தென் குமரித் துறையென வடாதுகடற்றுறையாடுமடப்பிடி என்றமையால், தென் குமரித்துறை தன் யத்ததாயதுபோல வடகடற்றுறையுந் தன் வயத்ததாயிற்றென்பதினிது விளங்கும். தனிகொண்டு புரத்தலா வது-பொதுவறப்புரத்தல். தென்குமரித்துறையென வடாது கடற் றுறை ஆடும் என நிறுத்தி, தென்குமரித்துறையிற்போல வடகடற் றுறையினு மாடுகின்ற என்றுரைத்தலு மொன்று. (எ)

ஒழுகிய கருணை யுவட்டெழு
வைத்தவ ருட்பார்வைக்
குளநெகி ழடியர் பவக்கடல்
வற்றவ லைத்தோடிக்

குழையொடு பொருது கொலைக்கணை
      யைப்பிணை யைச்சீறிக்
குமிழொடு பழகி மதர்த்த
      கயற்கண்மட ப்பாவாய்
தழைகெழு பொழிலின் முசுக்கலை
      மைப்புய லிற்பாயத்
தவழிள மதிகலை நெக்குரு
      புத்தமு தத்தோடே
மழைபொழி யிமய மயிற்பெடை
      கொட்டுக சப்பாணி
மதுரையில் வளரு மடப்பிடி
      கொட்டுக சப்பாணி.

(இ - ள்.) ஒழுகிய - பொழிகின்ற, கருணை - கருணைவெள்ளம், உவட்டெழ - பெருக்கெடுக்க, வைத்த-தம்மீதுவைத்த, அருள்பார்வைக்கு - அருணோக்கத்தால், உளம் நெகிழ் - மனமுருகுகின்ற, அடியர் - அடியார்களுடைய, பவக்கடல்-பிறவிக்கடலானது, வற்ற - சுவறும்படி, அலைத்து ஓடி - அலையெறிந்து விரைந்து சென்று, குழையொடு பொருது - காதணியோடு போர்செய்து, கொலைக்கணையை - கொலைத்தொழிலையுடைய அம்பையும், பிணையை - பெண்மானையும், சீறி - வெகுண்டு, குமிழொடு பழகி - குமிழம்பூவை நிகர்த்த நாசியோடு பயின்று, மதர்த்த - களித்திருக்கிற, கயல்கண் - கயல்போலுங் கண்களையுடைய, மடப்பாவாய் - இளம்பாவையே, தழை கெழு - தழைத்தலமைந்த, பொழிலில் - சோலைகளிலுள்ள, முசுக்கலை - முசுவாகிய கலை, மை புயலில் பாய - கருமையாகிய மேகத்தின்மேற் பாய்தலால், தவழ் - அம்மேகத்தின்மேலே தவழ்கின்ற, இளமதி - பிறைமதியானது, கலை நெக்கு - தன்

கலை நெகிழ்ந்து, உகு - சிந்துகின்ற, புது அமுதத்தோடே - புதிய அமிர்தத்துடனே, மழை பொழி - (மேகம்) மழையைச் சொரிதற் கிடனாயுள்ள, இமயம் - இமயமலையிற்றோன்றிய, மயிற்பெடை - மயிற்பெடையே, சப்பாணி கொட்டுக - சப்பாணி கொட்டியருள்க, மதுரையில் வளரும் - மதுரைப்பதியில் வளர்ந்த, மடப்பிடி - இளம் பிடியே, சப்பாணி கொட்டுக - சப்பாணி கொட்டியருள்க. எ - று.

ஒழுகிய கருணை யுவட்டெழவைத்த வருட்பார்வைக் குள நெகிழடியார் பவக்கடல்வற்ற வலைத்தோடிப்பொருது, சீறிப்பழகி மதர்த்தகயற்கண் மடப்பாவாய், இமயமயிற்பெடை சப்பாணிகொட்டுக, மதுரையில் வளருமடப்பிடி சப்பாணி கொட்டுக என முடிக்க. அருட்பார்வைக் குளநெகிழடியார் என்றமையால் ஆணவமல பரிபாகம் பெற்றவரென்பதூஉம், இவ்வருட்பார்வைக்கன்றி யேனையவற்றிற் குளநெகிழாரென்பதும், பவக்கடல் வற்ற என்றமையால் இனிப் பிறப்பிறப்புக்களாகிய தடுமாற்றத்தி னலைப்புண்டு வருந்தாரென்பதும் பெறப்பட்டன. முசு - வாநரபேதங்களிலொன்று. கலை - ஆண். இது கடுவன் எனப்படும். மதி உகு எனவியையும். புத்தமுதத்தோடே மழைபொழி என்றமையாற் புத்தமுதமும் மழையும் மைப்புயலான் ஒருங்கு பொழியப்பட்டன வென்றவாறாயிற்று. மயிலுக்கு இமயமலையும் பிடிக்குக் கடம்பவனமுங் கூறினார் அவற்றுரிமைதோன்றற்கென்க. கணை - கூர்மைக்கும் வேகத்துக்கும், பிணை மருட்சிக்கும் மதர்ப்புக்கு முவமையாகக்கொள்க. அடியர் என்றது பொறிவாயிலாகப் புலன்களை நுகரும் பசுகரணங்கள் அந்நுகர்ச்சியொழிந்து சிவகரணங்களாகப் பெற்றோரை. அடியர் பவக்கடல் வற்றவலைத்தோடி, குழையொடு பொருது, கணையைப் பிணையைச் சீறிக், குமிழொடு பழகி, மதர்த்த கயற்கண் என்னுஞ் சொற்றொடர் இறைவியது கண்ணழகி விவரிக்கப்பட்டமை புலப்படுத்தா நின்றது. இறைவி தானே இமயமலைக்கேற்ப மயிலாகவும், கடம்பவனத்துக்

கேற்பப் பிடியாகவு மிருந்தமையோர் வியப்பிற்குக் காரணமாமென்றற்கு, இமயமயிற்பெடையென்றும் மதுரையில்வளரு மடப்பிடியென்றும் கூறினார். மயில் சாயலுக்கும் பிடி அசை நடைக்கும் உவமையாகக்கொள்க. மயிலும் பிடியும் உவமையாகுபெயர்கள். பெடை பிடியென்பன அண்மைவிளிகளாதலா னியல்பாயின. (அ)

சென்றிடு வாளிகள் கூளிகள் காளிகள்
 ஞாளியி லாளியெனச்
செருமலை செம்மலை முதலியர் சிந்தச்
 சிந்திட நந்திபிரான்
நின்றில னோடலு முன்னமு ரும்மவன்
 பின்னமு ருங்காணா
நிலவு விரிந்திடு குறுநகை கொண்டு
 நெடுங்கயி லைக்கிரியின்
முன்றிலி னுடன் மறந்தம ராடியொர்
 மூரிச் சிலைகுனியா
முரிபுரு வச்சிலை கடைகுனி யச்சில
 முளரிக் கணை தொட்டுக்
குன்றவி லாளியை வென்ற தடாதகை
 கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
 கொட்டுக சப்பாணி.

(இ - ள்.) சென்றிடுவாளிகள் - நீசெலுத்தச்சென்ற அம்புகள், கூளிகள் - பூதகணங்களும், காளிகள் - காளிகளும், ஞாளியில் ஆளியென - ஞாளிமேலாளிபோல, செருமலை செம்மலைமுதலியர் - போர்செய்த வயிரவனை முதலாகக்கொண்ட கணங்களும், சிந்த -

உடையும்படி, சிந்திட - சிந்தஞ்செய்ய, நந்திபிரான் - ஸ்ரீநந்திதேவர், நின்றிலன் ஓடலும் - நின்றிலராயோடுதலும், அவன் - அவரது, முன்அழகும் பின்அழகும் காணு - முன்னழகையும் பின்னழகையும் கண்டு, நிலவுவிரிந்திடு குறுநகைகொண்டு-வெள்ளொளிபரந்த புன்னகைசெய்து, நெடுகயிலைக்கிரியின் முன்றிலின் - நெடியகயிலைமலையின் முற்றத்தில், ஆடல்மறந்து - ஆடலைமறந்து, அமராடி - போர்புரிந்து, ஓர் மூரிசிலைகுனியா - ஒருவல்வில்வளைத்து, மூரிபுருவச்சிலை கடைகுனிய - மூரிப்புள்ள புருவமாகிய வில்முனைவளைய, சில முளரிகணைதொட்டு - சில முளரியம்புகளையெய்து, குன்றவில்லாளியை - மேருமலையாகிய வில்லையுடைய சிவபிரானை, வென்ற தடாதகை - வென்ற தடாதகைப்பிராட்டியே, கொட்டுகசப்பாணி. எ-று.

வாளிகள் கூளிகள் காளிகள் ஞாளியி லாளியெனச் செருமலை செம்மலை முதலியர் சிந்தச்சிந்திட நந்திபிரானோடலும், அவன் முன்னழகும் பின்னழகுங்காணு, குறுநகைகொண்டு, கயிலையிலுடன் மறந்தமராடி, சிலைகுனியா, புருவச்சிலை கடைகுனிய முளரிக்கணைதொட்டுக் குன்றவிலாளியை வென்றதடாதகை சப்பாணி கொட்டுக எனமுடிக்க.

வாளிகள் சிந்திடவெனவியையும். காணுக்கொண்டு மறந்தமராடிக்குனியாத்தொட்டு வென்றவள் எனக்கூட்டுக. முன்னழகு-எதிர்க்கவந்தபோ துண்டாயிருந்த முகமலர்ச்சி. பின்னழகு - உடைந்தோடிப் புறங்காட்டிய அயர்ச்சி. இறைவன்வருமுன் அவனது படைவீரரும் படைத்தலைவரும் உடைந்தோடச் செய்ததே இறைவனையும் வென்றதாகக்கொண்டு குன்றவிலாளியை வென்றதடாதகையெனத் துணிவுபற்றி யிறந்தகாலத்தாற் கூறினர். போர்புரிவோர்க்கு மிகுசினத்தாற் புருவமேலேற வியல்பாதலால், புருவச்சிலை கடை குனிய என்றார். முளரிக்கணை என்பதற்குப் புருவத்துக்கேற்பத் தாமரைமலர்போலுங் கட்கணை யெனவும், சிலைக்கேற்ப

ஆனற்கணையெனவு முரைத்துக்கொள்க, மூரிச்சிலை புருவச்சிலை யென்பவற்றில் மூளரிக்கணைதொடுத்துக் குன்றவிலாளியை வென்ற தடாதகை என்றமையால் இறைவியின் பேராற்றல் விளங்கும். இறைவற்குக் குன்றவில்லாதலான் அதனை வேறற்கியாமினை வில் லேந்தாது மென்றிறைவியுமினை வில்லேந்தினளென்க. (௬)

செழுமறை தெளிய வடித்தத
 மிழ்ப்பதி கத்தோடே
திருவரு ளமுது குழைத்துவி
 டுத்தமு லைப்பாலாற்
கழுமல மதலைவ யிற்றைநி
 ரப்பிம யிற்சேயைக்
களிறொடும் வளர வளர்த்தவ
 ருட்செவி லித்தாயே
குழலிசை பழகி முழுப்பிர
 சத்திர சத்தோடே
குதிகொளு நறிய கனிச்சுவை
 நெக்க பெருக்கேபோன்
மழலையி னமுதுகு சொற்கிளி
 கொட்டுக சப்பாணி
மதுரையில் வளரு மடப்பிடி
 கொட்டுக சப்பாணி.

(இ - ள்.) செழுமறை - செழியவேதார்த்தங்களை, தெளிய - யாவருந்தெளியும்வண்ணம், வடித்த - வடித்தெடுத்த, தமிழ்ப்பதிகத்தோடே - தமிழ்ப்பதிகத்துடன், திருவருள் அமுதுகுழைத்து விடுத்த - திருவருளாகிய அமிழ்தத்தையுங் கலந்துவார்த்த, முலைப்

பாலால் - திருமுலைப்பாலினால், கழுமலமதலை - சீகாழியில் அவதரித்தருளின ஆளுடைய பிள்ளையாருடைய, வயிற்றை நிரப்பி - வயிற்றை நிறைத்து, மயிற் சேயை - மயிலூர்தியை யுடைய குமரவேளை, களிறோடும் - யானைமுகத்தையுடைய மூத்தபிள்ளையாரோடும், வளர வளர்த்த - வளரும்படி வளர்த்த, அருள் - அருளையுடைய, செவிலித்தாயே - செவிலித்தாயே, குழல்இசைபழகி - குழலிசையைப்பயின்று, முழுப்பிரசத்து இரசத்தோடே - முதிர்ந்த தேனின்சுவையுடன், குதிகொளும் - கொப்புளிக்கின்ற, நறியகனி - நறுங்கனிகளின், சுவைநெக்க - சுவைநெகிழ்ந்த, பெருக்கேபோல் - பெருக்கைப்போலவே, மழலை - மழலைமொழியாகிய, இன் அமுது உகு - இனிய அமிழ்தஞ்சிந்துகின்ற, சொல் - சொல்லையுடைய, கிளி - கிள்ளைபோல்வாளே, மடுவையில் வளரும் - கடம்பவனத்தில் வளர்கின்ற, மடப்பிடி - இளம்பிடியே, சப்பாணிகொட்டுக எ-று.

மறைதெளியவடித்த தமிழ்ப்பதிகத்தோடே திருவருளமுது குழைத்து விடுத்தமுலைப்பாலாற் கழுமலமதலைவயிற்றை நிரப்பி மயிற்சேயைக் களிறொடும் வளரவளர்த்த வருட்செவிலித்தாயே, குழலிசை பழகி முழுப் பிரசத்திரசத்தோடே குதிகொளுநறிய கனிச்சுவை நெக்கபெருக்கேபோல் மழலையினமுதகு சொற்கிளி கொட்டுக சப்பாணி யென முடிக்க.

வேதங்கள் வடமொழியாயும் அரிதுணர்பொருளன வாயுமிருத்தலான் அவையாவர்க்கும் புலப்படுமாறுணர்த்து வித்தருளினமையால் மறைதெளிய எனவும், அவ்வேதத்தினுட்கிடையாகிய பரமார்த்தமே தேவாரத்திருப்பதிகங்களாதலால் மறைதெளியவடித்த தமிழ்ப்பதிகம் எனவும்கூறினர். அவ்வாறு வடித்ததமிழ்ப்பதிகத்தோடே திருவருளமுது குழைந்த முலைப்பாலாவது முறையே அபரஞானமும் பரஞானமுமாம். கழுமலம் என்பது சீகாழியின்பெயர் பன்னிரண்டனுள் ஒன்று. இதனை ஆளுடையபிள்ளையா ரருளிய,



முத்தப்பர்வம் தாய்தந்தை முதலியனர் குழந்தையை முத்தமிட்டுகொள்ளல்.

"பிரமனூர் வேணுபுரம் கலிவெங்குருப் பெருநீர்த்தோணி, பூரமன் னுபூந்தராய் பொன்னஞ்சிரபுரம் புறவஞ்சண்பை, யரன்மன்னுதண் காழிகொச்சைவய முன்னிட்டங்காதியாய, பரமனூர்பன்னிரண்டா ய்நின்ற திருக்கழுமல நாம்பரவுமூரே" என்னுந் திருநெறித்தேவா ரத்தானுணர்க. சிவபெருமானது திருவாக்காதலான் மறையைச் செழுமறையென்றும், அது பொதுமைத்தாய்ப் பல்பொருளையு மு ணர்த்தலானும் திருநெறித்தமிழ்ப்பதிகம் அம்மறைமுடிவொன்றனை யே யுணர்த்தியருளுதலானும் செழுமறை தெளியவடித்த தமிழ்ப் பதிகம் என்றும் கூறினூர். செழுமறை தெளியவடித்த தமிழ்ப்பதி கம் என்ற சொற்றொடர் பலபொருளைக்கருதிக் கலங்கலாயிருந்த வேதநீரை ஒருபொருளைக்கருதித் தெளிவாயிருக்குந் திருநெறித்த மிழ்நீர்சிறந்த தென்பதனை விளக்கின்றது. மயிற்குஞ்சையும் களிற் றுக்கன்றையும் ஒருங்கு வளர்த்தாளெனச் சொன்னயந் தோன்ற, மயிற்சேயைக் களிற்றேயும் வளர வளர்த்தவருட் செவிலித்தாயே என்றார். (க0)

## ரு-வது. முத்தப்பருவம்.

காலத் தொடுகற் பனைகடந்த கருவூ
  லத்துப் பழம்பாடற்
கலைமாச் செல்வர் தேடிவைத்த கடவுண்
  மணியே யுயிராலவ
ஆலத் துணர்வி னீர்பாய்ச்சி வளர்ப்பார்க்
  கொளிபூத் தருள்பழுத்த
மலர்க்கற் பகமே யெழுதாச்சொன் மழலை
  ததும்பு பசுங்குதலைச்

சோலைக் கிளியே யுயிர்த்துணையாந் தோன்றாத்
துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியிற் றுரியங்
கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்த முழுமுதலே
முத்தந் தருகவே
முக்கட் சுடர்க்கு விருந்திடு மும்முலையாய்
முத்தந் தருகவே.

(இ - ள்.) காலத்தொடு-முக்காலத்துடன், கற்பனை-கற்பனையையும், கடந்த - தாண்டின, கருவூலத்து - மூலபண்டாரத்தில், பழம் பாடல் - பழமையாகிய பாடல்களும், கலை - (அவற்றாலாகிய) கலைகளுமாகிய, மாசெல்வர் - பெருஞ்செல்வத்தை யுடையவராகிய அறிஞர், தேடிவைத்த - சம்பாதித்துவைத்த, கடவுள் மணியே - தெய்வத்தன்மையுள்ள மணியே, உயிர் - உயிராகிய, ஆலவாலத்து-பாத்தியில், உணர்வின் நீர்பாய்ச்சி-அறிவாகிய நீரைப்பாய்ச்சி, வளர்ப்பார்க்கு - வளர்க்கின்றவர்க்கு, ஒளி பூத்து - சிவஞானமலர் பூத்து, அருள் பழுத்த - திருவருளாகிய கனிபழுத்த, மலர்க்கற்பகமே-மலர்களையுடையகற்பகத்தருவே, எழுதாச்சொல் - வேதமாகிய, மழலை ததும்பும் - மழலைச்சொற்கள் துளும்புகின்ற பசுங்குதலை - பசிய இளமையுள்ள, சோலைக்கிளியே - சோலைக்கிள்ளையே, உயிர்த்துணை ஆம் - எல்லா வுயிர்களுக்கும் துணையாகிய, தோன்றா துணைக்கு - தோன்றாத்துணையாகிய சிவபெருமானுக்கு, ஓர் துணை ஆகி - ஒரு துணைவியாகி, துவாதசாந்தப் பெருவெளியில் - துவாதசாந்தமாகிய பர்வெளியில், துரியம் கடந்த - துரியத்தைத்தாண்டின, பரநாதம் - பரநாதமாகிய, மூலத்தலத்தில் - காரணநிலத்தில், முளைத்த - உற்பவித்த, முழுமுதலே - முழுமுதற்பொருளே, முத்தம் தருக - முத்

தம் தருவாயாக, முக்கண் சுடர்க்கு - முக்கட்சோதிக்கு, விருந்தி டும் - விருந்துசெய்கின்ற, மும்முலையாய் - முத்தனத்தையுடையவளே, முத்தம் தருக - முத்தம் தருவாயாக. எ - று.

மணியே, கற்பகமே, கிளியே, முழுமுதலே முத்தந்தருக எனவும், மும்முலையாய் முத்தந்தருக எனவும் முடிக்க.

கருவூலம் - பொற்களஞ்சியம். இதனைப் பொக்கசம் என்றும், பொன்னுறை என்றும் கூறுப. பழம்பாடல் - வேதமென்றும், கலை - அதின் சாகைகளென்றும் கூறினுமாம். வேதம் சந்தரூபமாயன்றி எழுதியுணர்த்துவதன்றாதலால் அதனை எழுதாச்சொல் என்றார். இது வேதத்திற்குக் காரணக்குறி. துரியம் - நின்மலாவத்தையில் நான்காவது. உளதாயினன்றே யிலதாவது, உளதாகாத பொருள் இலதாவது மின்றாதலால், தோன்றாத்துணையென்றது தோற்றக்கேடில்லாத தொல்பொருளை யென்க. "சிவமெனும் பொருளு மாதிசத்தியொடு சேரினெத்தொழிலும் வல்லதாம், இவளபிரிந்திடி லியங்குதற் குமரிதரிதெனு மறையிரைக்கும்" என்ற கருத்தை யுட்கொண்டு, "உயிர்க்குயிராந் தோனறாத்துணைக்கோர் துணையாகி" என்றார். முக்கட்சுடர் என்றது சிவபெருமானை. தெய்வத்தன்மையுள்ள மணிமுதலிய வாயிருப்பவளாகிய மும்முலைத் தடாதகைப் பிராட்டியே முத்தந் தருவாயாக என்பது கருத்து. கடவுள் மணியென்பதற்கு எல்லாவற்றையுங் கடந்த பொருளாகிய பரமசிவத்துக்குக் கண்மணியாயிருப்பவள், அன்றிச் சிரோமணியாயிருப்பவள் என்றலுமொன்று. அன்றியும், தெய்வத்தொகுதியில் மணிபோல்பவள் எனினுமிழுக்காது. முழு முதல் - அபிந்நமாகிய பீஜம், இது அபிந்நசத்தியெனப்படும். ஆன்மா அறிவுருவாதலால் உயிர்க்குயிர் என்பதற்கு அறிவுக்கறிவு எனினுமாம். குணகுணிகட்குப்போலச் சத்திசத்தர்கட்குளதா மொற்றுமைகருதி துணைக்கோர் துணையாகி என்றார். பரநாத மூலத்தலத்து முளைத்த முழுமுதல் என்றது பர

விந்துவை. ஆலவாலம் - வயலுமாம். முன்பாசத்தால் மறைப்புண்டு பாழ்நிலம்போலிருந்த ஆன்மா குருவருளா னம்மறைப்பு நீங்கித் தத்துவப்பொருட்டன்மையை யறிந்து நீங்கின பக்குவமே உயிராகிய புன்செய் (விளைநிலம்.) உணர்வு - ஞானம். மேல்பக்குவமடைந்த வுயிரிடத்தே தான் தன்னைத் தத்துவத்தின் வேறென்றறிந்து, அறிந்த அறிவே தன் சொரூபமாகக்கண்டு, இறைவன் தன்னை யுடையவன் என்றும், தான் அவனுடைமை யென்றும் உணர்ந்த வுணர்வே அதனைப் பயன்படுத்தும் நீர். வளர்ப்பார் சீவன்முத்தர். ஒளிபூத்து என்பதனால், அரும்பிப் பின்பூத்ததென்பது பெறப்படும். அங்ஙனம் வளர்க்கச் சிவத்தினுண்மை தோன்றல் அரும்பாகும். ஆகவே தன்னையறிவித்துத் தன்னைக்காட்டியதே சிவஞானமாம். அது மலரெனப்படும். அருள் பழுத்த என்பதனால் அலர்ந்தபின் காய்த்துப்பழுத்தது என்பது பெறப்படும். சிவத்தோடு கூடிநிற்றலைக் காயாகவும், சிவாநுபவமுண்டாகி அச்சிவத்திலொன்றலைக் கனியாகவும் கொள்க. விரிவஞ்சி விடுக்கலாயிற்று. இவ்வுண்மையின் விரிவெல்லாம் சிவாகமாதிகளாகிய பெருநூல்களிற் கண்டமைக. கற்பனை - புனைந்துரை (இல்லதை யுள்ளதாகக் கற்பித்துச்சொல்லல்.) முக்கட்சுடர்க்கு விருந்திடுதலாவது இறைவற்குச் சுகாநுபவரூபமாயிருத்தல். முக்கட்சுடர் என்பதற்கு முச்சுடர்க்கண்ணற்கு என்றுரைத்தலுமொன்று. முச்சுடர் - சோமசூரியாக்கினிகள். (௪)

உருகி யுருகி நெக்குநெக் குடைந்து
கசிந்திட் டகம்பூறும்
உழுவ லன்பிற் பழவடியா ருள்ளத்
தடத்தி லூற்றெடுத்துப்
பெருகு பரமா னந்தவெள்ளப் பெருக்கே
சிறியேம் பெற்றபெரும்

பேறே யூறு நறைக்கூந்தற் பிடியே
கொடிநுண் ணுசுப்பொசிய
வருகுங் குமக்குன் றிரண்டேந்து மலர்ப்பூங்
கொம்பே தீங்குழலின்
மதுரங் கனிந்த பசுங்குதலை மழலை
யரும்பச் சேதாம்பன்
முருகு விரியுஞ் செங்கனிவாய் முத்தந்
தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்பெம் முலையாய்
முத்தந் தருகவே.

(இ - ள்.) உருகி உருகி - மனம் இடையறாதுருகி, நெக்கு நெக்கு - மிகவும் நெகிழ்ந்து, உள் உடைந்து - உட்கரைந்து, கசிந் திட்டு - கசிந்து, அசம்பு ஊறும் - பசையறாத, உழுவல் அன்பின் - எழுமையும் தொடர்ந்த அன்பினையுடைய, பழ அடியார் - பழமையா கிய தொண்டரது, உள்ளம் தடத்தில் - மனமாகிய தடாகத்தில், ஊற்றெடுத்து பெருகு - ஊறிப் பெருகுகின்ற, பரம ஆநந்தம் - பேரின்பமாகிய, வெள்ளப்பெருக்கே - பெருவெள்ளமே, சிறியேம் பெற்ற - சிற்றறிவினேம் அடைந்த, பெரும்பேறே - பெரும்பய னே, ஊறும் - சுரக்கின்ற, நறை - தேனையுடைய (மலர்கள் மணக் கின்ற,) கூந்தல் - கூந்தலையுடைய, பிடியே - பெண்யானைபோல் வாளே, கொடி - கொடிபோன்ற, நுண் நுசுப்பு - நுட்பமாகிய இடை, ஒசிய - நுடங்க, வரு - வளராநின்ற, இரண்டு குங் குமக்குன்று - இரண்டு குங்குமமலைகளை, ஏந்தும் - தாங்குகின்ற, பூ - பொலிவாகிய, மலர்க்கொம்பே - பூங்கொம்புபோல்பவளே, தீ குழலின் - மதுரமாகிய குழலோசையினும், மதுரம் கனிந்த - இனி மை மிகுந்த, பசு குதலை - இளங்குதலையாகிய, மழலை அரும்ப - மழ

லைச்சொற்கள் தோன்றுநிற்க, சேதாம்பல் - செவ்வல்லிமலர்போ ன்ற, முருகு விரியும் - மணம் பரவுகின்ற, செம் கனி வாய் - செங் கனிவாயின் கண்ணுள்ள, முத்தந்தருக. எ - று.

பரமாநந்தப் பெருக்கே, சிறியேம் பெற்ற பெரும்பேறே, நறைக்கூந்தற் பிடியே, மலர்ப்பூங்கொம்பே, செங்கனிவாய், முத் தந்தருக என முடிக்க.

உருகியுருகி, நெக்கு நெக்கு என்னும் அடுக்கு இடையறா மைப்பொருளது. பிடி நடையாலுவமை. குங்குமக்குழம்பு பூசப்பெற் றுச் செவ்ந்து தோன்றுதலால் தனத்தைக் குங்குமக்குன்றென்றார். இது உருவத்தாலும் நிறத்தாலும் தனத்துக்குவமை. மனமுருகி யிவ் வாறாயதெனவே மனச்சங்கற்ப விகற்பத்தொடர்பற்றனவென்பதும், அறவே பிரகிருதி நீங்கிற்றென்பதும், நீங்கவே அசுத்தமாயை கழி ந்ததென்பதும், கழியவே சுத்தமாயையும் ஒடுங்கிப் பராசத்தியின் திருவருளுண்டா மென்பதும் பெறப்பட்டன. அவ்வருள்மேலீடு ஈண்டுப் பரமாநந்தப்பெருக்கு எனப்பட்டது. சிறியேம் பெற்ற பெ ரும்பேறு என்றது, யாம் பெறக்கடவதன்றென்றாய் அப்பேற்றி னருமைதோன்ற நின்றது. சேதாம்பலைத் திருவாய்க்கும் செங்கனி யைத் திருவதரத்துக்கும் உவமையாக்குக. செங்கனியை விளியா க்கி, சேதாம்பன் முருகு விரியும். வாய் முத்தந்தருகவென்றுமைப் பினுமமையும். (உ)

கொழுதி மதர்வண் டுழக்கு குழற்
கோதைக் குடைந்த கொண்டலுநின்
குதலைக் கிளிமென் மொழிக் குடைந்த
குறுங்கட் கரும்புங் கூன்பிறைக்கோ
டுழுத பொலன்சீ றடிக்குடைந்த செந்தா
மரையும் பசுங் கழுத்துக்

குடைந்த கமஞ்சூற் சங்குமொழு கொளிய
 கமுகு மழகு தொய்யில்
எழுது தடந்தோட் குடைந்த தடம்
 பணையும் பணைமென் முலைக்குடைந்த
இணைமா மருப்புந் தருமுத்துன் றிருமுத்
 தொவ்வா திக பரங்கள்
முழுதுந் தருவாய் நின்கனி வாய்
 முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும் முலையாய்
 முத்தந் தருகவே.

(இ - ள்.) கொழுதி - கோதி, மதர் வண்டு - மதர்த்த வண்டுகள், உழக்கு - துவைக்கின்ற, கோதை குழலுக்கு - பூமாலையையணிந்த கூந்தலுக்கு, உடைந்த - தோற்ற, கொண்டலும் - மேகமும், நின் - உனது, குதலை - இளமையாகிய, மெல் - மெல்லிய, கிளிமொழிக்கு - கிளிமொழிபோலும் சொல்லுக்கு, உடைந்த - தோற்ற, குறு கண் - சிறு கணுக்களுள்ள, கரும்பும் - கரும்பும், கூன் - வளைவாகிய, பிறைக்கோடு - பிறைநுனியால், உழுத-உறத்தப்பட்ட, பொலன் - பொன்னிறமாகிய, சீறடிக்கு - சிற்றடிக்கு, உடைந்த - தோற்ற, செந்தாமரையும் - செந்தாமரை மலரும், பசு கழுத்துக்கு - பசுமையாகிய கழுத்துக்கு, உடைந்த - தோற்ற, கமம் சூல் - நிறைவாகிய சூலினையுடைய, சங்கும் - சங்குகளும், ஒழுகு ஒளிய - ததும்புகின்ற ஒளியையுடைய, கமுகும் - கமுகும், அழகு - அழகாகிய, தொய்யில் எழுது - சந்தனக்கோலம் எழுதப்பெற்ற, தடம் தோட்கு - பெருந்தோள்களுக்கு, உடைந்த - தோற்ற, தடம் பணையும் - நீளமாகிய மூங்கிலும், பணை - பருத்த, மெல் முலைக்கு - மெல்லிய தனங்களுக்கு உடைந்த - தோற்ற, இணை - இரண்டா

கிய, மா மருப்பும் - யானைக்கொம்புகளும், தரும் முத்து - தருகிற முத்தங்கள், உன் திருமுத்து ஒவ்வா - உன் திருமுத்தத்தை நிகர்க்க மாட்டா. (ஆதலால்) இகபரங்கள் முழுதும் - இம்மை மறுமைப் பயன்களெல்லாவற்றையும், தருவாய் - அருள்செய்பவளே, நின் - உனது, கனிவாய் முத்தம்தருக. எ - று.

உன் கூந்தல் முதலியவற்றிற்குத் தோற்றமேக முதலியவை தரும் முத்தங்கள் உன் திருமுத்தத்தை ஒவ்வா ஆதலால் அவற்றை விரும்பேம், இகபரவின்பமுழுதும் தரவல்லவளே உன் கனிவாய் முத்தத்தைத் தருவாயாக என முடிக்க.

மேகமுதலியவற்றில் முத்துண்டாமென்பது "தந்திவராக மருப்பிப்பி பூகந்தனிக்கதலி, நந்துசலஞ் சலமீன்றலை கொக்குகளி னமின்னார், கந்தரஞ்சாலி கழைகன்னலாவின்பல்கட்செவி காரிந்து வுடும்புகரா முத்தமீனு மிருபதுமே" என்னும் இரத்தினச்சுருக்கச் செய்யுளால் இனிதுவிளங்கும். பிறைக்கோடுழுத சீறடியென்றது இறைவியூடலை இறைவன் தணிக்குஞ் செய்தியைக்குறித்தது. "ஆதிபகவன்றனதுட றணிப்பான்பணிய" என்றார் பிறரும். இகபரங்கள் என்றொழியாது முழுதும் என்றமையால் வீடுங்கொள்ளப்படும். செந்தாமரை ஆகுபெயர். பசுங்கழுத்து - மங்கலக்கழுத்து. "வேதரஞ்சகன்மால் புரந்தரன் வேகசண்ட குபேரனே, டாதியெண்டிசை பாலர்பொன்றவு மாதியந்த மிலாததோர், நாதர்பொன்றில ரேதுன் மங்கல நாணுறுந்திற மாதலா, னீதலழ்ந்தது யோகமம்பிகை நீலியென்பது பாவமே" என்றார் பிறரும். இணைமாமருப்பு, பிணைமென்முலைக்குடைந்த, என்னுங் குறிப்பினால் மாவென்னும் பலபொருளொருசொல்லீண்டி யானையை யுணர்த்திற்று. (௯)

மத்த மதமாக் கவுட்டொருநான் மருப்புப்
பொருப்பு மிசைப் பொலிந்த

வானத் தரசு கோயில் வளர் சிந்தா
மணியும் வட புலத்தார்
நத்தம் வளர வளகை யர்கோ
னகரில் வளரும் வான்மணியும்
நளினப் பொகுட்டில் வீற்றிருக்கு நங்கை
மனைக்கோர் விளக்க மெனப்
பைத்த சுடிகைப் படப்பாயற் பதுமநாபன்
மார்பில் வளர்
பரிதி மணியு மெமக்கம்மை பணியல்
வாழி வேயீன்ற
முத்த முகந்த நின்கனிவாய் முத்தந்
தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடும் முலையாய்
முத்தந் தருகவே.

(இ - ள்.) மத்தம் மதம்-மயக்கத்தையும் மதத்தையுமுடைய, மாக வட்டு - கரிய கவுளோடுகூடிய, ஒரு நால் மருப்பு-ஒரு நான்கு கொம்புகளுள்ள, பொருப்பு மிசை - மலைமேல், பொலிந்த-விளங்குகின்ற, வானத்து அரசு - விண்ணுலகத்துக்கரசனாகிய இந்திரனது, கோயில் வளர் - அரண்மனையில் வளராநின்ற, சிந்தாமணியும் - சிந்தாமணியும், வடபுலத்தார்-வடதிசையிலுள்ளோரது, நத்தம் வளர-ஊர் பெருகும்படி, அளகையர்கோன் - அளகேசனது, நகரில் வளரும் - பட்டணத்தில் வளர்கின்ற, வான் மணியும் - மேலான மணிகளும், நளினப்பொகுட்டில் - தாமரைப்பூங்கொட்டையில், வீற்றிருக்கும் - எழுந்தருளியிருக்கிற, நங்கை மனைக்கு - திருமகள் வீட்டிக்கு, ஓர் விளக்கம் என - ஒரு தீபமாக, பைத்த - விரித்த, சுடிகைப்

படம் - உச்சிப்படத்தையுடைய, பாயல் - சர்ப்பசயநத்தில், பதும நாபன் - திருமாலின், மார்பில் வளர்-மார்பில் விளங்குகின்ற, பரிதி மணியும் - ஒளியுள்ள மணியும், எமக்கு - எங்களுக்கு, அம்மை - அம்மையே, பணியல் - அருளல்வேண்டா, வாழி - வாழி, வேயீன்ற முத்தம் உகந்த - வேய்தந்த முத்தமானது விரும்புகின்ற, நின் கனி வாய் முத்தந்தருக. எ - று.

சிந்தாமணி முதலியவை யெமக்கு வேண்டா, வேயீன்ற முத்தமாகிய சிவபெருமான் விரும்பின நின் கனிவாய் முத்தந் தருளுக என்பது கருத்து.

ஒருகாலத்தில் சிவபெருமான் திருநெல்வேலியில் மூங்கிலடியில் சுயம்புவாய்த் தோற்றினாராதலால் அவருக்கு வேயீன்ற முத்தம் என்னும் பெயருண்டாயிற்று. வடபுலத்தார் என்றது கின்னரர் இயக்கர் முதலியோரை. நால்மருப்புப்பொருப்பு - ஐராவதம். வான் மணி - சங்கநிதி பத்மநிதி. பரிதிமணி - கௌத்துவமணி. இந்திரற்குரிய சிந்தாமணியும், குபேரற்குரிய வான்மணியும், பத்மநாபற்குரிய பரிதிமணியும் ஒன்றினொன்றுயர்ந்தன, ஆயினும் அவை புண்ணியவயத்தாற் பெறப்படும். படினும் பிறவிக்கேதுவாதலால் அவற்றைப்பெற விரும்பேம், எவ்வாற்றானும் பெறலரிதாகிய நின் கனிவாய்முத்தந்தருடியெனின், அப்பிறவித்தொடக்கறப் பெறுவேமாதலான் அதனைப்பெற விரும்பினேம், தந்தருள்க என்றவாறு. வாழியென்றது அவற்றைப் பணித்துப் போகநுகர்ச்சிக் கண்விடேவென்னும் ஒழியிசைப்பொருட்கண் வந்தது. இவ்வாறன்றி முன்னிலையசையிடைச்சொல் லெனினுமிழுக்காது. மத்தம் - மதத்தினனிலை தடுமாறுந்தன்மை. நங்கைமனை - திருமான்மார்பு. பரிதிமணி ஈண்டுக்கௌத்துவமணிக்காயிற்று, நங்கைமனையென்றமையான். இவையாவு மகித்தம் இறைவிமுத்தமொன்றே நித்தம் என்று முணர்வு நற்றாய முதலியோர்க் கெவ்வாவற்றாற் றோன்றிற்றெனின் இறைவி சந்நிதி

விசேடத்தாரென்க. இப்பருவச் செய்யுட்களி னுள்ளக்கிடைடயிது வேயாம், வானத்சரசு கோயில் வளர்வது என்றும், அளகையர் கோனத்தம் வளர வளர்வது என்றும், பதுமநாபன் மார்பில் வளர்வது என்றும் கூறியது அம்மணிக ளிருப்பிடங்களி னுயர்வு தோன்றற்கென்க. (௪)

கோடுங் குவடும் பொருதரங்கக் குமரித்
துறையிற் படுமுத்தும்
கொற்கைத் துறையிற் றுறைவாணர் குளிக்குஞ்
சலாபக் குவான்முத்தும்
ஆடும் பெருந்தண் டுறைப் பொருனை யாற்றிற்
படுதெண் ணிலாமுத்தும்
அந்தண் பொதியத் தடஞ்சார லருவி
சொரியுங் குளிர் முத்தும்
வாடுங் கொடிநுண் ணுசுப்பொசிய மடவ
மகளி ருடனாடும்
வண்டற் றுறைக்கு வைத்துநெய்த்து மணந்தாழ்
நறுமென் புகைப்படலம்
மூடுங் குழலாய் நின்கனிவாய் முத்தந்
தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும் முலையாய்
முத்தந் தருகவே.

(இ - ள்.) கோடும் - கரையையும், குவடும் - குன்றுகளையும், பொரு - மோதுகின்ற, தரங்கம் - அலைகளையுடைய, குமரித்துறையில் - குமரியாற்றுத்துறையில், படும் - உண்டாகின்ற, முத்தும் - முத்துக்களையும், கொற்கைத்துறையில் - கொற்கைத்துறையின்

கண், துறை வாணர் - அத்துறையில் வாழ்வோர், குளிக்கும்-மூழ்கி யெடுக்கின்ற, சலாபம் - சலாபத்திலுள்ள, குவால் முத்தும் - தொகையாகிய முத்துக்களையும், ஆடும் - யாவரும் மூழ்குகின்ற, பெருதண் துறை - பெரிய குளிர்ச்சியாகிய துறைகளையுடைய, பொருநை ஆற்றில் - பொருநை நதியில், படு - உண்டாகின்ற, தெள் - தெளிவாகிய, நிலா முத்தும் - வெள்ளொளியுள்ள முத்துக்களையும், அம் தண் - அழகிய குளிர்ச்சியாகிய, பொதியம் - பொதிகைமலையின், தடம் சாரல் - பெரிய சாரலின்கண், அருவி சொரியும்-அருவியாறு கொழிக்கின்ற, குளிர் முத்தும் - குளிர்ச்சியாகிய முத்துக்களையும், வாடும் - துவளாநின்ற, கொடி - கொடிபோன்ற, நுண் நுசுப்பு - நுண்ணிய இடை, ஒசிய - வருந்த, மடவம் - மடப்பத்தையுடைய, மகளிருடன் - சிறுமியரோடு, ஆடும் - விளையாடுகின்ற, வண்டல் துறைக்கு - வண்டல் விளையாட்டுக்கு, வைத்து - வைத்துக்கொண்டு, நெய்த்து - நெய்ப்புளதாய், மணம் தாழ் - மணந்தங்கிய, நறு மெல் - நல்ல மென்மையாகிய, புகைப்படலம் - புகைக்கூட்டம், மூடும் - மூடுகின்ற, குழலாய் - கூந்தலையுடையவளே, நின் கனிவாய் முத்தம் தருக. எ - று.

கொற்கைத்துறை முதலிய இடங்களிலுண்டாகு முத்துக்களை உன் வண்டல் விளையாட்டுக்கு வைத்துக்கொண்டு உன் கனிவாய் முத்தமொன்றையுமே எமக்கருளுக என்பது கருத்து.

குமரியாறு மலையையடுத்ததாதலால் "கோடுங்குவடும் பொருதரங்கக்குமரி" என்றார். சலாபம் - முத்துக்குளிக்குமிடம். பொருநை - தாமிரபர்ணியாறு. இது புண்ணியதீர்த்தமாதலால் "ஆடும் பெருந்தண்டுறைப் பொருநையாறு" என்றார். ஒசிய ஆடும் என - இயையும். நறுமென்புகை யென்றது அகிற்புகையை. மணம்-இயற்கைமணம். சலாபமுத்தின் மிகுதிபற்றிக் குவால்முத்து என்றார்.

குமரி - முதலில் யாறாயிருந்து பின்னர்க் கடலாற் கொள்ளப்பட்டமையால் தரங்கக்குமரி எனப்பட்டது. மூடுதல் - ஊட்டுதல். (௯)

பைவைத்த துத்திப் பரூஉச்சுடிகை முன்றிற்
பசுங்கொடியுடுக்கை கிழியப்
பாயிருட் படலங் கிழித்தெழு சுடர்ப்பரிதி
பரிதிக் கொடிஞ்சி மான்றேர்
மொய்வைத்த கொய்யுளை வயப்புரவி வாய்ச்செல்ல
முட்கோல் பிடித்து நெடுவான்
முற்றத்தை யிருள்பட விழுங்குந் துகிற்கொடி
முனைக்கணை வடிம்பு நக்கா
மைவைத்த செஞ்சிலையு மம்புலியு மோடநெடு
வான்மீன் மணந்து கந்த
வடவரை முகந்தநின் வயக்கொடி யெனப்பொலியு
மஞ்சிவர் வளாக நொச்சித்
தெய்வத் தமிழ்க்கூட றழையத் தழைத்தவ
டிருப்பவள முத்த மருளே [டி.
செல்வைத்த வொண்கொடியை வலம்வைத்த பெண்கொ
திருப்பவள முத்த மருளே.

(இ - ள்.) பைவைத்த-படத்தின்கண்ணுள்ள, துத்தி-புள்ளிகளையுடையபாம்பின்(சேடனது),பருசுடிகைமுன்றில்-பருமையாகிய உச்சியென்கிற முற்றத்தில் நிலைபெற்ற, பசுங்கொடி - பசுங்கொடிபோன்ற நிலமகளது, உடுக்கை கிழிய - ஆடையாகிய கடல் பிளக்கும்படி, பாய் இருள் - பரந்த இருளாகிய, படலம் - கூட்டத்தை, கிழித்து எழு - பிளந்தெழுந்த, சுடர்ப்பரிதி - கிரணங்களையுடைய

சூரியனது, பரிதி - ஒளிபொருந்திய, கொடிஞ்சி - கொடிஞ்சியென்னும் உறுப்பையுடைய, மான் - தன்னைத்தானே நிகர்த்த, தேர் - ஒற்றையுருளைத்தேரின், மொய்வைத்த - நெருங்கின, கொய் உளை - திருத்தின புறமயிரையுடைய, வயப்புரவி - வேகமிக்க குதிரையின், வாய் செல்ல - வாயிலேற, முள் கோல் பிடித்து - தாற்றுக்கோலைத் தாங்கி, நெடு வான் - நெடிய ஆகாயமாகிய, முற்றத்தை - வெள்ளிடத்தை, இருள் பட விழுங்கும் - இருளுண்டாக மறைக்கின்ற. துகில் கொடி - கொடியாடைகள், மூனை கணை - மூனைக்கணைக் கோலின், வடிம்பு நக்கா - வடிம்பு பட்டு, மை வைத்த - மேகத்தில் தோற்றுகிற, செஞ்சிலையும் - செவ்விய வில்லும், அம்புலியும் - சந்திரனும், ஓட - ஓடும்படி, நெடு வான் - நெடிய வானத்து, மீன் - தாராகணங்களை, மணந்து - கூடி, உகந்த - விரும்புகின்ற, வட வரை - மகாமேருவை, முகந்த - தன் எல்லைக்குட்படுத்தின, நின் வயக்கொடி என - உன் வெற்றிக்கொடிபோல், பொலியும் - விளங்குகின்ற, மஞ்சு இவர் - மேகங்கள் ஏறித்தவழ்கின்ற, ஊாகம் - சூழ்தலையுடைய, நொச்சி - மதிலையுடைய, தெய்வத்தமிழ் - தெய்வத்தன்மையாகிய தமிழ் மிகுந்த, கூடல் - மதுரைப்பதியானது, தழைய - செழிக்கும்படி, தழைத்தவள் - செழித்தவளே, திருப்பவள முத்தம் அருள் - அழகிய பவளம்போலுந் திருவாயின் முத்தத்தை யருளுவாயாக, சேல் வைத்த - சேல்மீனுருவை யெழுதின, ஒண் கொடியை ஒள்ளிய துவசத்தை, வலம் வைத்த - வலத்தில் உயர்த்த, பெண் கொடி - பெண்கொடியே, திருப்பவள முத்தம் அருள். எ - று.

பைவைத்த துத்திப்பரூஉச்சுடிகை முன்றிற் பசுங்கயுமிழ்ந்தைகிழிய, இருட்படலங்கிழித்தெழு பருதித்தேர் வயவாய்ச்செல்ல, முட்கோல் பிடித்து, வான்முற்றத்தை யிருள்பட விழுங்குந் துகிற்கொடி மூனைக்கணை வடிம்புநக்கா, சிலையு மம்புலியு மோட, வான்மீன் மணந்து, வடவரை முகந்த நின் வயக்கொடி

யெனப்பொலியு நொச்சித் தமிழ்க்கூடற்றழையத் தழைத்தவள் திரு ப்பவள முத்தமருள், சேற்கொடியை வலம்வைத்த பெண்கொடி திருப்பவள முத்தமருள் என முடிக்க.

பைவைத்த துத்தி - ஆகுபெயராய்ச் சேடனையுணர்த்திற்று. நிலமகளைப் பசுங்கொடி யென்றதற்கேற்பச் சுடிகையை முன்றிலென்றார். மானல் - ஒத்தல். துகிற்கொடி நின்வயக்கொடி யெனப் பொலியும் என வியைக்க. செஞ்சிலையும் - சேரனது விற்கொடியும், அம்புலியும் - சோழனது அழகிய புலிக்கொடியும், ஒட - தோற்றோட, நெடு வான் மீன் - பெருஞ்சிறப்புள்ள மீனை, மணந்து - தன்னிடத்துக்கொண்டு, உகந்த - தேவரால் விரும்பப்பட்ட, வடவரை முகந்த - மேருவைத் தன்னெல்லைக்குள்ளாக்கின, எனத் தேவியது வயக்கொடிக்கும், செஞ்சிலையும் - வானவில்லும், அம்புலியும் - சந்திரனும், ஒட - தாழ்ந்தோட, நெடுவான்மீன்மணந்து - நெடியவான்மீனைச்சேர்ந்து, பொலியும் - விளங்குகின்ற எனத்துகிற்கொடிக்கும் ஏற்பவுரைத்துக்கொள்க, முட்கோல் - தாற்றுக்கோல். இது கொடிகளின் மூனையிற் செருகப்பட்டிருக்கும் வேலுருவமைந்தகோல், முனைக்கணை - அம்முட்கோலாகிய கணையின்முனை, இதுஇலக்கணப் போலி. வடிம்பு - கூர்நுதி. வான்மீன்மணந்த வயக்கொடியெனக் கூறி, மீண்டுஞ்சேல்வைத்த வொண்கொடியெனல் வழுவன்றோவெனின், அன்று, முன்னையது உவமைப்பொருட்டாகவும் பின்னையது பாண்டிவேந்தரது மரபினங்கத்தை யுணர்த்தற் பொருட்டாகவும் ரயுதினமையின், இது கூறியது கூறலென்னுங் குற்றத்தின்பாற் படுது அநுவாதத்தின்பாற்பட்டு அப்பெயர்த்தாம்.

பன்னற் றிரைக்கடன் மதுக்குட மறத்தேக்கு
பெய்முகிற் காருடலம் வெண்
பிறைமதிக் கூன்குயக் கைக்கலைஞ ரொடுபுடை
பெயர்ந்திடை நுடங்க வொல்கு

மின்னற் றடித்துக் கரும்பொற் றொடிக்கடைசி
 மெல்லியர் வெரீஇப் பெயரவான்
மீன்கணம் வெருக்கொள்ள வெடிவரால் குதிகொள்ளும்
 விட்புலம் விளைபுல மெனக்
கன்னற் பெருங்காடு கற்பகக் காட்டுவளர்
 கடவுண்மா கவளங் கொளக்
காமதே னுவுநின் று கடைவாய் குதட்டக்
 கதிர்க்குலை முதிர்ந்து விளையுஞ்
செந்நெற் படப்பைமது ரைப்பதி புரப்பவ
 டிருப்பவள முத்த மருளே
சேல்வைத்த வொண்கொடியைவலம்வைத்த பெண்கொடி
 திருப்பவள முத்த மருளே.

(இ - ள்.) பின்னல் - ஒன்றோ டொன்று பின்னலிடுகிற
திரை - அலைகளையுடைய, கடல் - கடலாகிய, மதக்குடம் - கட்
டம், அற - வடியும்படி, தேக்கு - உண்டுதெவிட்டுகின்ற, பெய்
கில் - நீரைச்சொரிகிற மேகம்போன்ற, கார் உடலம் - கரியசரீர
த்தையும், வெண்பிறைமதி-வெள்ளியபிறைச்சந்திரன்போன்ற, கூ
குயம் - வளைவாகிய அரிவாளையேந்திய, கை - கையையுமுடை
கடைஞரொடு - மள்ளருடனே, புடைபெயர்ந்து - இடம்பெயர்ந்
இடைநுடங்க - இடையசைய, ஒல்கும் - தளர்கின்ற, மின்ன
மின்னுதலையுடைய, தடித்த - மின்போன்ற, கரும்பொன் - இ
பினலாகிய, தொடி - வளையலையணிந்த - கடைசிமெல்லியர் - உ
தியர், வெரீஇபெயர - பயந்து ஓடவும், வான் - ஆகாயத்திலுள்
மீன்கணம் - நக்ஷத்திரத்தொகுதி, வெருக்கொள்ள - அஞ்சவும்,
டிவரால் - குதிக்கின்றவரால் மீன்கள் - குதிகொள்ளும் - தாவு
ற, விண்புலம் - ஆகாயமாகிய இடமே, விளைபுலம் என - விளை
ன்றும்படி, பெருகன்னல்காடு - பெரிய கரும்பஞ்சோலை

கற்பகக் காவெளர் - கற்பகச்சோலையில் தங்குகின்ற, கடவுள்மா - தெய்வத்தன்மையுள்ளயானை (ஐராவதம்), கவளம்கொள - கவளமாக வுண்ணவும், காமதேநுவும் - காமதேநுவும், நின்று - குனியாது நின்று, கதிர்க்குலை - நெற்கதிர்த்திரளை, கடைவாய்குதட்ட - கடைவாயிலிட்டுக்குதட்டவும், முதிர்ந்து - முற்றி, விளையும் - விளைதற்கிடமாகிய, செந்நெல்படப்பை - செந்நெல்வயல் சூழ்ந்த, மதுரை - மதுரைக்கு, பதி - அரசியாய், புரப்பவள் - உலகமுழுதுங் காப்பவளே, திருப்பவளமுத்தம் அருள். எ - று.

கடைஞரொடு கடைசிமெல்லியர் செரீஇப்பெயர, மீன்கணம் வெருக்கொள்ள, வரால் குதிகொள்ளும் விட்புலம் விளைபுலமெனக் கன்னற்காடு கடவுண்மாக வளங்கொள, கதிர்க்குலைகாமதேநுக்கடைவாய் குதட்ட, முதிர்ந்துவிளையுஞ் செந்நெற்படப்பை மதுரைப்பதி புரப்பவள் திருப்பவளமுத்தமருள் என முடிக்க.

பின்னல் - ஒன்றின்பின்னொன்றிடையறாது தொடர்தல். கடைஞர்கள் ஞண்போராதலால் அவர்க்கிணையாகிய மனமுமேசமும் அவர் தொழில்போலுந் தொழிலுடைத்தென்பார், கடன் மதுக்குடமறத் தேக்கு பெய்முகில் என்றார். புடைபெயர்ந்து செரீஇப்பெயரவென இயையும். கரும்பொற்றொடி என்பதற்குப்பெருமையுள்ள பொன்ஞனியன்ற தொடியெனினுமாம். வெருக்கொளல் குதிகொளல் என்பன ஒருசொன்னீர்மைய. நின்றுவாய்குதட்ட என்றது நெற்பயிரினுயர்வையும், விட்புலம் விளைபுலமென என்றது வானிடமுழுதும் செந்நெற்பயிர் தழைத்தோங்கினமையையும் விளக்கினின்றன. மின்னற்றடித்து - ஒளிசெய்கின்ற அழகிய மின்கொடியென்றது மொன்று. மீன் - நக்ஷத்திரமெனவும், மீனெனவு முரைத்துக் கொள்க. வெடிவரால் - வெடிபோற்றுள்ளி யெழும்வரால். அன்றிக் கடுக்கொனியை யுடையவரால் எனினுமாம். தொடி - தொடுக்கப்படுவது என்னும்பொருட்டு. (எ)

சங்கோ லிடுங்கடற் றானைக்கு வெந்நிடு
தராபதிகண் முன்றி றார்த்த
தமனியக் குப்பையுந் திசைமுதல்வர் தடமுடித்
தாமமுந் தலைம யங்கக்
கொங்கோ லிடுங்கைக் கொடுங்கோ லொடுந்திரி
குறும்பன் கொடிச்சு றவுநின்
கொற்றப் பதாகைக் குழாத் தொடுமிரசதக்
குன்றினுஞ் சென்று லாவப்
பொங்கோல வேலைப் புறத்தினொ டகத்தினியிர்
பேராழி பரிதி யிரதப்
பொங்காழி மற்றப் பொருப்பாழி யிற்றிரி
புலம்பப் புலம்பு செய்யச்
செங்கோ றிருத்திய முடிச்செழியர் கோமக
டிருப்பவள முத்த மருளே
செல்வைத்தவொண்கொடியை வலம்வைத்தபெண்கொடி
திருப்பவள முத்த மருளே.

(இ - ள்.) சங்கு ஒலிடும் - சங்குகள் முழங்குகின்ற, கடல் - கடல்போன்ற, தானைக்கு - சேனைக்கு, வெந்நிடு - புறங்காட்டின, தராபதிகள் - அரசர்கள், முன்றில் - முற்றத்தில், தூர்த்த - நிரப்பின, தமநியக்குப்பையும் - பொற்குவியலும், திசைமுதல்வர் - திக்குப்பாலகருடைய, தடம் - பெரிய, முடி - மகுடத்திலணிந்த, தாமமும் - மாலையும், தலைமயங்க - ஒன்றோடொன்று கலக்கவும், கொங்கு - மலர்மணத்தில், ஒலிடும் - வண்டுகள் முழங்குகின்ற, கை - கையின்கண், கொடுங்கோலொடும் - கொடியபாணங்களுடன், திரி - திரிகின்ற, குறும்பன் - சிற்றரசனாகிய மன்மதனது - சுறவுகொடி

யும் - மீனக்கொடியும், நின் - உன்னுடைய, கொற்றம் - வெற்றி யுள்ள, பதாகைகுழாத்தினொடும் - கொடித்திரளோடும், இரசதக் குன்றினும் - வெள்ளிமலையினிடத்தும், சென்று உலாவ - போயுலா வவும், பொங்கு ஓலம் - மிக்க ஓசையையுடைய, வேலைப்புறத்தி னொடு - கடற்கப்புறத்தனவாகிய த்வீபங்களினும், அகத்தில் - கடற் குட்பட்ட தேயங்களினும், நிமிர் - மிகுத்துச்சென்ற - போர் ஆழி - போர்க்குரிய ஆணைச்சக்கரம், பரிதி - சூரியனது, இரதம் - தே ரின், பொங்கு ஆழி - விளங்குகின்ற ஒற்றைச்சக்கரமும், அ - அந்த, பொருப்பு ஆழியில் - சக்கரவாளகிரியில், திரிபுலம்ப - திரிந்துவ ருந்தும்படி, புலம்புசெய்ய - அதனைவருத்தவும், செங்கோல்திருத் திய - செங்கோல் செலுத்தின, முடி - மகுடத்தையுடைய, செழி யர் - பாண்டியர்க்கு, கோ - தலைவனாகிய மலயத்துவச பாண்டியனு க்கு, மகள் - புதல்வியே, திருப்பவள முத்தம் அருள். எ - று.

தமனியக்குப்பையும் முடித்தாமமும் தலைமயங்க, குறும்பன் கொடிச்சுறவு நின்பதாகைக் குழாத்தினொடு மிரசதக்குன்றினுஞ் சென்றுலாவ, போராழி பரிதியிரதப் பொங்காழி பொருப்பாழியிற் றிரிபுலம்பப் புலம்புசெய்யச் செங்கோறிருத்திய முடிச்செழியர் கோமகள் திருப்பவள முத்தமருள் என முடிக்க.

திசைமுதல்வர் முடித்தாமமுங் கற்பகப்பொன்மலரர னியன்ற தாதலின் தமனியக்குப்பையொடுந் தலைமயங்கலாயிற்று. நராபதி கள் - பூபதிகளாகிய நரேந்திரர்கள். தானை - இறைவிசேனை. சங் கோலிடுங் கடற்றானையெனத் தானையைக் கடற்குவமையாக்கினார், கடலிற்போலத் தானையினும் போர்வீரர்குறிக்குஞ் சங்கோலிடுத லான். அன்றியும் கடலிற்போலத் தானையினும் பேரிரைச்சலா கிய வுண்மையானும், அன்றியும் கடலிற்றரங்கமுதலியபோலத் தா னையினுந் துரங்கமுதலாய நால்வகை யங்கங்க ளுண்மையானும் உவமித்தனர் எனக்கோடலுமாம். இங்ஙனங் கோடற்கண், தரங்

கந்தாரங்கத்திற்கும், தோணி யிரதத்திற்கும், சுருயானைக்கும், மீ னெறிவோர் காலாளுக்கும் உவமையாம். ஆகவே கடல்தானைக் குவமையாதல் சொல்லாமேயமையும், இதனை, "கார்த்தரங்கந் திரைதோணி சுருக்கடன் மீனெறிவோர், போர்த்தரங்கந் துறைமானுந் துறைவர்" என்னுந் திருக்கோவையார் கஅள - ம் செய்யுளிற் காண்க. கொங்குதேன் எனினு மிழுக்காது. கொங்கோல்கொடுங்கோல் என்றது மலர்க்கணையை. திக்குவிசயத்தில் தேவி இந்திரதிசை முதலியவற்றை வென்று ஈசானதிசையையடைந்து கயிலையெயிலைவளைக்க, திருநந்திதேவர் கணங்களோடு வந்தெதிர்ந்து பொருதுடைந்து புறங்காட்டினமையுணர்ந்த புராந்தகர் தாமெதிர்ந்துநோக்கி, யாம் மதுரையிற் போந்து மணத்துமென மனக்கொண்டருளிய கொள்கையொன்றுளதாகலின், நினைகொற்றப்பதாகைக் குழாத்தினொடும் (முன்பொருகா லிறைவனை யெதிர்ந்துருவிழுந்த) மலர்க்கோற்கரமதன் பதாகையுமுடன்சென்றிரசதக்குன்றினு முலாவ என்றார். குன்றினும் சுறவும் என்பவற்றும்மைகள் முறையே உயர்வுசிறப்பும் இழிவுசிறப்புமாம். சிரிபுலம்ப என்பதைத்திரிபு உலம்ப எனப்பிரித்து திரிந்து நாண என்றுரைப்பினுமாம். உருவிழுந்த மதக்குறுமபன் கொடிச்சுறவுந்தேவி திருவருட்டுணையானிறைவன் திருமலைக்கொற்கமின்றிச் சேறலாயிற்றென்பதிதனானுணர்த்தப்பட்டவாறு. (அ)

பருவரை முதுபல வடியினி னெடுநில
 நெக்க குடக் கனியிற்
படுநறை படுநிறை கடமுடை படுவ
 கடுப்ப வுவட் டெழவும்
விரிதலை முதலொடு விளைபுல முலையவு
 மூக்கி யமுட்சு றவின்

விசையினின் வழிநறை மிடறொடி கமுகின்வி
ழுக்குலை நெக்கு கவும்
கரையெறி புணரியி னிருமடி பெருகுத
டத்து மடுத்த கடக்
களிறொடு பிளிறிட லிகலிய
முகிலினி ரட்டி யிரட்டியமும்
முரசதிர் கடிநகர் மதுரையில்
வளர்கிளி முத்த மளித்தருளே
முழுதல குடைய தொர் கவுரியர்
குலமணி முத்த மளித்தருளே.

(இ - ள்.) பருஅரை - பருமையாகிய அடியையுடைய, முதுபல - முதிர்ந்தபலாமரங்களின், அடியினில் - வேரில், நெடுநிலம் நெக்க - நெடியபூமியைப்போழ்ந்த, குடம் - குடம்போன்ற, கனியில் - கனிகளினின்றும், படும்நறை - உண்டாகின்றதேன், படுநிறை - மதுநிறைந்த, கடம் - குடங்கள், உடைபடுவகடுப்ப - உடைபடுவனபோல, உவட்டெழ - பெருக்கெடுக்கவும், விரிதலை - விரிந்த தலையும், முதலொடு - நெற்பயிரினடியோடு, விளைபுலம் - செய்கானிலத்தில், உலைய - சிதறும்படி, உழக்கிய - வெடித்தெழுந்த, முள்சுறவின் - முட்சுறுமீனின், விசையினின், வேகத்தால், வழிநறை - உடைந்துவழிகின்ற தேன்பெருக்கோடு, மிடறொடி - கழுத்தொடிந்த, கமுகின் - கமுகமரங்களினின்றும், விழுக்குலை - பழக்குலைகள், நெக்குஉகவும் - கட்டுக்குலைந்து சிந்தவும், கரையெறி - கரையை அலைகளாலெற்றுகின்ற, புணரியின் - கடலினும், இருமடி - இருமடங்காக, பெருகு - பெருகுகின்ற, தடத்து - தடாகங்களில், மடுத்த - குளிக்கவந்த, கடம்களிறொடு - மதயானைகளுடன், பிளிறிட - முழங்கும்வண்ணம், இகலிய - பகைத்த, முகிலின் - மேகத்தி

னும், இரட்டியிரட்டிய - இருமடங்காக முழங்குகின்ற, மும்முரசு - மூவகை முரசங்களும், அதிர் - குமுறுகின்ற, கடிநகர்மதுரையில் - காவலையுடைய நகரமாகிய மதுரைத்திருப்பதியில், வளர்கிளி - வளரா நின்ற கிள்ளையே, முத்தம் அளித்தருள் - முத்தந்தந்தருள்வாய், முழுது உலகுஉடையது - உலகமுழுமையுமதன்வயத்ததாகக்கொண்டதாகிய, ஓர்கவுரியர்குலம் - ஒப்பற்றகவுரியர் குலத்துதித்த, மணி - மாணிக்கமே, முத்தம் அளித்தருள் - முத்தந் தந்தருள்வாய்.

குடக்களியிற் படுநறை படுநிறை கடமுடைபடுவ கடுப்பவுவட்டெழவும், முட்சுறவின் விசையினின் வழிநறை மிடறுடிகமுகின் குலைநெக்குகவும், புணரியினிருமடிபெருகுதடத்து மடுத்தகடக்களிறுடு பிளிறிடவிகலிய முகிலினிரட்டியிரட்டிய மும்முரசதிர்கடிநகர் மதுரையில் வளர்கிளி முத்தமளித்தருள், கவுரியர்குலமணி முத்தமளித்தருள் என முடிக்க.

மூதுகனியென வியையும். வேகத்தோடு வழிநறைப்பெருக்கால் மிடறுடிகமுகின் குலையுகவெனினுமாம். ஆகவே ஒடியவும் உகவும் காரணம், வழிநறைப்பெருக்காம். மதமயக்கத்தான் மேகத்தை யொருவேற்றியானையாய்க் கருதிப்பிளிறியது என்றற்குக் கடக்களிறு என்றார். மும்முரசு - வெற்றிமுரசு, கொடைமுரசு, மங்கலமுரசு என்பன. வேர்ப்பலா என்பார் அடியினின் றெடுநிலநெக்க குடக்கனி யென்றார். படு - கள். விழுக்குலை - பெருங்குலையுமாம். இரட்டல் - ஒலித்தல். நகர்மதுரை இருபெயரொட்டு. கவுரியர் குலமணி யென்பதற்குக் கவுரியர் குலமாகிய கடலிற்பட்ட முத்தென்றுதல், கவுரியர்குலமாகிய மாநுடமரபில் உண்டாகிய ஒருமணியென்றுதல் உரைத்துக்கொள்க. மாணிக்கமே உன்னிடத்து முத்தத்தை யெமக்கருளுகவெனச் சொன்னயந் தோன்றுமாறுமறிக. முகிலேழாயினும் மும்முரசி னொலித்திலவென்பார் முகிலினிரட்டியிரட்டியமும் முரசு என்றார். அன்றியும் முகில்கார்ப்பருவமொன்

றின் முழங்குவன,• மும்முரசு எல்லாப்பருவத்து முழங்குவனவாத லான் முகிலினதிர்ச்சியினும் முரசினதிர்ச்சி பெரிதென்றது மாயி ற்று. "ஆறுபருவத்து மகலாதகிரும், வீறுமெழிலியுண்டெனினொ ருபுடையொப், பாமென வதிர்தருசேமமும் முரசான்" என்றார் பிற ரும். (கூ)

புதையிருள் கிழிதர வெழுதரு பரிதிவ
ளைத்த கடற்புவியிற்
பொதுவற வடிமைசெய் திடும்வழி யடியர்
பொருட்டலர் வட்டணையிற்
றதைமலர் பொதுளிய களியளி குமிறுகு
ழற்றிரு வைத்தவளச்
சததள முளரியின் வனிதையை யுதவுக
டைக்கண் மடப்பிடியே
பதுமமொ டொழுகொளி வளையுநி னளினமு
கத்து மிடற்றுமுறப்
பனிமதி யொடுசுவை யமுதமு நுதலொடு
சொற்குத லைக்கணிநீஇ
முதுதமி ழுததியில் வருமொரு திருமகண்
முத்தம ளித்தருளே
முழுதுல குடையதொர் கவுரியர் குலமணி
முத்த மளித்தருளே.

(இ - ள்.) புதை இருள் - செறிந்த இருட்டு, கிழிதர - பிளவு பட, எழு தரு - உதிக்கின்ற, பரிதி - சூரியன், வளைத்த - சுற்றிவரு கிற, கடல் புவியில் - கடல்சூழ்ந்த வுலகத்தில், பொது அற - பொ துத்தன்மை நீங்க, அடிமை செய்திடும் - தொண்டுசெய்துவருகிற,

வழியடியர் பொருட்டு - வழியடியார் நிமித்தமாக, அலர் - செந்தாமரைப்பூவாகிய, வட்டணையில் - வட்டத்தவிசில், ததை - நெருங்கின, மலர் - மலர்மாலையில், பொதுளிய - மொய்த்த, களி அளி - களிக்கின்ற வண்டுகள், குமிறு - பண்பாடுதற்கிடமாகிய, குழல்-கூந்தலையுடைய, திருவை - திருமகளையும், சததளம் - நூறிதழ்களையுடைய, முளரியில் - வெண்டாமரைப்பூவில், வனிதையை - நாமகளையும், உதவு - தந்தருளினை, கடைக்கண் - கடைக்கணோக்கத்தையுடைய, மடப்பிடியே - இளம்பிடியே, பதுமமொடு - தாமரைமலரும், ஒழுகு ஒளி - ததும்புகின்ற வொளியையுடைய, வளையும்-சங்கும், நின் நளிநமுகத்தும் மிடற்றும் - (முறையே) உன் புன்னகையோடுகூடின திருமுகத்திலும் திருக்கழுத்திலும், உற - நிலைபெற்றிருக்க, பனி மதியொடு - குளிர்ச்சியாகிய இளமதியையும், சுவையமுதமும் - இன்சுவையையுடைய அமிழ்தத்தையும், நுதலொடும - நெற்றியிலும், சொற்குதலைக்கண் - மழலைச்சொல்லிலும், நிறீஇ - (முறையே) நிறுத்தி, முது - பழமையாகிய, தமிழ் உததியில் - தமிழ்க்கடலில், வரும் - தோன்றின, ஒரு திருமகள் - ஒரு திருமகளே, முத்தம் அளித்தருள் - முத்தந் தந்தருள்வாய். எ - று.

வழியடியர்பொருட்டு அலர்வட்டணையிற் றிருவை சததளமுளரியின் வனிதையை யுதவுபிடியே, பதுமமொடு வளையும் நின் மூகத்து மிடற்றுமுற, மதியொடு சுவையமுதமும் நுதலொடு சொற்குதலைக்கணிறீஇத் தமிழுததியில் வருமொரு திருமகள், முத்தமளித்தருள் என முடிக்க.

நுதற்கணிறீஇ என்றமையான் பனி மதியை இளம்பனி மதியெனலாயிற்று. எழுதரல் கிழிதரல் என்பன ஒருசொல். தாமரைமலர்போலவும் சங்குபோலவும் உருவமைந்த நிதிகளிரண்டும் பதுமநிதி சங்கநிதி எனப்படும். வட்ட அணைவட்டணையெனத் தொகுத்தலாயிற்று. நளிநம் - புன்முறுவலோடு பேசுதல். வழியடியர் என்ப

தற்குப் பழவடியார்க்குரைத்ததுணர்க. திருமகள் பாலினனியன்ற இமிழார் கலியிற் பதுமநிதி முதலியவற்றோடுதித்தாற்போல, இறைவியும் தமிழார் சலியில் அப்பதுமாதிகளை நிகர்த்த திருவங்கங்களோடுதித்தமைதோன்ற விரித்துரைத்துக்கொள்க: பரிதி வளைத்த என்றது மாமேருவை வலம்வரல். "உலகமுவப்ப வலனேர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு" என்று பெரியோருங் கூறுதல் காண்க. பொதுவற அடிமைசெயதலாவது பிறதேவர்களை வழிபடாது இறைவியொருத்தியையே வழிபடுதல். மலர்மகளையும் கலைமகளையுந் தந்த பிடியென்றது கேட்போர் வியத்தக்கவாறாயிற்று. (௧௦)

---

## வருகைப்பருவம்.

அஞ்சிலம் போலிட வரிக்குரற் கிண்கிணி
யரற்றுசெஞ் சீறடி பெயர்த்
தடியிடுந் தொறுநின் னலத்தகச் சுவடுபட்
டம்புவி யரம்பை யர்கடம்
மஞ்சுதுஞ் சளகத் திளம்பிறையு மெந்தைமுடி
வளரிளம் பிறையு நாற
மணிநூ புரத்தவிழு மென்குரற் கோவசையு
மடநடைக் கோதொ டர்ந்துன்
செஞ்சிலம் படிபற்று தெய்வக்கு ழாத்திினொடு
சிறைமயா திமம்பின் செலச்
சிற்றிடைக் கொல்கிமணி மேகலை யிரங்கத்
திருக்கோயி லெனவெ ஷஞ்சக்

கஞ்சமுஞ் செஞ்சொற் றமிழ்க்கூட லுங்கொண்ட
காமர்பூங் கொடி வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்க ணாயகி வருகவே.

(இ - ள்.) அம் சிலம்பு - அழகாகிய சிலம்பு, ஒலிட-சத்திக்க, அரி - பருக்கைமணியாகிய, குரல் - குரலையுடைய, கிண்கிணி-பாதசரம், அரற்று - முழங்குகின்ற, செம் சீறடி - செம்மையாகிய சிற்றடிகளை, பெயர்த்து - தூக்கி, அடியிடுந்தொறும் - நடக்குந்தோறும், நின் - உனது, அலத்த கச்சுவடுபட்டு - (பாதத்தூட்டிய) செம்பஞ்சுச் சுவடுபடுதலால், அம்புவி - பூமியிலுள்ள, அரம்பையர்கள்-தெய்வப்பெண்களின், மஞ்சு துஞ்சு - மேகநிறந்தங்கிய, அளகத்து - கூந்தலினயலிலுள்ள, இளம்பிறையும் - இளம்பிறைபோன்ற நெற்றியும், எந்தை - எமது தந்தையாகிய சிவபெருமானது, முடி - சடாபாரத்தில், வளர் - வளர்கின்ற, இளம்பிறையும் - பாலசந்திரனும், நாற - மணக்க, மணி நூபுரத்து - இரத்திநங்களிழைத்த சிலம்பிலிருந்து, அவிழும் - வெளிப்படுகின்ற, மெல் குரற்கோ - மெல்லொலியின் பொருட்டோ, அசையும் - புடைபெயர்கின்ற, மட நடைக்கோ - மென்னடையின்பொருட்டோ, தொடர்ந்து - பின்றொடர்ந்து, உன் - உனது, செஞ்சிலம்பு - செம்மையாகிய சிலம்பணிந்த, அடி - திருவடியை, பற்று - பற்றுகின்ற, தெய்வக்குழாத்தினொடு - அரமங்கையர் கூட்டத்துடன், சிறை ஒதிமம் - சிறையழகையுடைய அன்னப்பறவைகள், பின் செல - பின்றொடர்ந்து போகாநிற்க, சிறு இடைக்கு - சிற்றிடையின்பொருட்டு, மணிமேகலை - அரதநக்கலாபம், ஒல்கி இரங்க - அசைந்து இரங்காநிற்க, என் நெஞ்சக்கஞ்சமும் - எனது இதயமாகிய தாமரைமலரையும், செந்தமிழ் - செந்தமிழ்ச்சொல் வழங்குகின்ற, கூடலும் - மதுரைத்

திருப்பதியையும், திருக்கோயில் என கொண்ட - திருக்கோயிலாக்கொண் டெழுந்தருளி யிருக்கிற, காமர் - அழகாகிய, பூங்கொடி - பூங்கொடிபோல்பவளே, வருக - வந்தருள்க, கற்பக அடவியின், கற்பகவனம்போல, கடம்ப அடவி - கடம்பவனத்தில் வீற்றிருக்கின்ற, கயற்கண் நாயகி - அங்கயற்கண்ணம்மையே, வருக - வந்தருள்க. எ-று.

அடியிடுந்தொறும் அலத்தகச் சுவடுபட்டு அரம்பையாளகத் திளம்பிறையும் எந்தைமுடி யிளம்பிறையும் நாற, நின் நூபுரக் குரற்கோ மடநடைக்கோ சிறையோதிமம் தெய்வக்குழாத்தினொடு பின்செல, மணிமேகலை சிற்றிடைக்கொல்கி யிரங்க, என்னெஞ்சக் கஞ்சமும் தமிழ்க்கூடலும் திருக்கோயிலெனக்கொண்ட காமர்பூங் கொடிவருக, கயற்கணாயகிவருக, என முடிக்க.

அடியிடல் ஒருசொல்லாய் நடத்தலென்னும் பொருள்பயந்து நின்றது. "ஆங்கத்திருந்திழையாடி வந்தாற்கண்டடிவருத்தே" எனத்திருவெண்காட்டடிகளும் நடத்தற்பொருளில் அடிவருத்தல் என்னுஞ்சொல்லைப் பிரயோகித்திருத்தலுங் காண்க. ஈண்டும் அடிவருத்தல் ஒருசொல்லாய்நடத்தற் பொருடந்தது. சிலம்பிற்கோசை அதனுட்பெய்த பருக்கைக்கற்களானுண்டாதலால் அவற்றைக் குரல் என்றார். சுவடுபட்டு நாறவென வியையும். பட்டு செயவெனெச்சத்திரிபு. அளகத்திளம்பிறை - அளகத்தணியு மிளம்பிறை போல்வதோ ராபரணவிசேடமெனினுமாம். தெய்வக்குழாம் என்பது சொல்லானஃறிணைபோல்வதேனும் பொருளானுயர்திணையாய் நுத்திணையிருபாற்கும் பொதுவாய் நின்றது. இடைவருந்தவேக்கி மேகலைவருந்துகின்றதென்பது தோன்ற, ஒலித்தல் வருந்தல் என்னு மிருபொருள்பயப்ப இரங்கவென்னுஞ் சொல்லாற் கூறினார். நாற, பின்செல, இரங்க, வருகவெனவியையும். அம்புவியரம்பையர் என்றது. தேவி தடாதகைப்பிராட்டியா யவதரித்த ஞான்று தாமும்

பரிசனங்களாய் வந்திருந்த தெய்வமாதரை. நெஞ்சக்கஞ்சமும் கூடலும் கோயிலெனக் கோடலாவது இவ்விரண்டிடத்து நீங்காதிருத்தல் "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்து மென்சிந்தையுளு முறைவான்" எனத்திருவாதவூரடிகள் அருளிச்செய்தமையுங் காண்க. இறைவற்குப்போலவே இறைவிக்கு மிப்பெருங்குணமமைதல்பற்றி வியக்கத்தக்கதாயிற்று. பெருங்குணமாவது - இறைவன் தில்லைச்சிற்றம்பலமாகிய நல்லவிடத்தும் தமது நெஞ்சமாகிய தீயவிடத்தும் ஒப்பத்தங்குதலும், இறைவி கூடலாகிய நல்லவிடத்தும் தமது நெஞ்சமாகிய தீயவிடத்தும் ஒப்பத்தங்குதலுமாம். உயர்ந்தவிடம் தாழ்ந்தவிடம் எனினுமமையும். குரற்கோ நடைக்கோ என்பவற்றினான்கனுருபுகள்பொருட்டுப்பொருள, ஓகாரங்கள் ஐயப்பொருளவென்றாதல் எண்ணுப்பொருளவென்றாதல்கொள்க. குரற்கோ நடைக்கோ என்பவற்றிற்கு முறையே குரல்கற்றற்பொருட்டோ நடைகற்றற்பொருட்டோ வென்றுரைக்க. தெய்வமாதர்வணங்குழியும் இறைவர் ஊடறணிப்புழியும் அலத்தகச்சுவடுபட்டு மணத்தலால், அரம்பையரளகப்பிறையு எந்தைமுடிப்பிறையுநாற என்றார். சிறையோதிமம் என்றது சிறையழகை யுயர்த்தற்பொருட்டு. கஞ்சம் நீரிற்பிறப்பது. தெய்வமாதர்வந்து தங்கி யிருத்தலால் கடம்பாடவி கற்பகாடவியிற்பொலி என்றார். பொலிகயற்கணாயகி - பொலிதற்குக் காரணமாகிய கயற்கணாயகியென்க.

குண்டுபடு பேரகழி வயிறுளைந் தீன்றபைங்
  கோதையும் மதுர மொழுகும்
கொழிதமிழ்ப் பனுவற் றுறைப்படியு மடநடைக்
  கூந்தலம் பிடியு மறுகால்
வண்டுபடு முண்டகமனைக்குடி புகச்சிவ
  மணங்கமழ் விண்ட தொண்டர்

மானதத தடமலர்ப் பொற்கோயில் குடிகொண்ட
மாணிக்க வல்லி வில்வே
டுண்டுபடு மதிநுதற் றேகையொடு மளவில்பல
தொல்லுரு வெடுத் தமர்செயுந்
தொடுசிலை யனைக்ககன முகடுமுட் டிப்பூந்
துணர்த்தலை வணங்கி நிற்குங்
கண்டுபடு கன்னல்பைங் காடுபடு கூடற்
கலாப மாமயில் வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்க ணாயகி வருகவே.

(இ - ள்.) குண்டுபடு - ஆழமாகிய, பேரகழி - பெரியபாற்க டலானது, வயிறு உளைந்துஈன்ற - வயிறுளைந்துபெற்ற, பைங்கோ யும் - ஈர்ங்கோதையாகிய திருமகளும், மதுரம் ஒழுகும் - மதுர ந்த, கொழி - தெளிக்கப்பட்ட, தமிழ்ப்பனுவல் - தமிழ்நூலா , துறை - வெள்ளத்தில், படியும் - மூழ்குகின்ற, மடநடை - இ நடையும், கூந்தல் - கூந்தலுமுள்ள, அம் - அழகாகிய, பிடியும் - பெண்யானைபோன்ற கலைமகளும், அறுகால் - ஆறுகால்களையுடை , வண்டு - வண்டுகள், படு - மொய்க்கின்ற, முண்டகம் - தாமரை லராகிய, மனை - வீட்டின்கண்ணே சென்று, குடிபுக - குடிகொண் ருக்க, சிவமணம் - சிவஞானமணமானது, கமழ - பரிமளிக்கும் டி, விண்ட - அலர்ந்த, தொண்டர் - அடியாரது, மானதம் - இருத மாகிய, தடமலர் - பெரியதாமரைமலரென்கிற, பொன்கோயில் - ழகியகோயிலில், குடிகொண்ட - குடிகொண்டிருக்கிற, மாணிக்க வல்லி - மாணிக்கவல்லியே, வில்வேள் - கருப்புவில்லையுடைய மன் மதன், துண்டுபடு-பிளவுபட்ட, மதி - சந்திரனைநிகர்த்த, நுதல் -

கீற்றியையுடைய, தோகையொடும் - இரதிதேவியுடன், அளவு இல் - அளவற்ற, பல - மிகப்பலவாகிய, தொல் உரு எடுத்து - பழமையாகிய உருவங்களைக்கொண்டு, அமர்செயும் - போர்செய்கிற, தொடு - கணைதொடுதற்குரிய, சிலைஎன - பற்பல விற்களென்னும்படி, ககநமுகடுமுட்டி - அண்டமுகட்டையளாவி, பூதுணர் - மலர்க்கொத்துள்ள, தலைவணங்கி - தலைவளைத்து, நிற்கும் - நிற்கின்ற, கண்டுபடு - கற்கண்டுண்டாதற்குக் காரணமாகிய, பைங்கன்னற்காடுபடு - பசுமையாகிய கருப்பஞ்சோலைகள் சூழ்ந்த, கூடல் - மதுரைத்திருப்பதியில் வாழ்கின்ற, மா - பெரிய, கலாபம் - கலாபத்தையுடைய, மயில் - மயில்போல்வாளே, வருக - வந்தருள்க, கற்பகாடவியின்—வருக. எ - று.

கோதையும் பிடியும் முண்டக மனைபுக, தொண்டர்மாநதகோயில் குடிகொண்ட மாணிக்கவல்லி, கன்னற்காடுபடுகூடற்கலாபமாமயில், வருகவெனமுடிக்க.

வயிறுளைந்தீன்ற பைங்கோதையென்ற குறிப்பாற் குண்டுபடுபேரகழிபாற் கடலையுணர்த்திற்று. உலகத்துக்கோரகழிபோறலிற் கடலை அகழியென்றார். குண்டு படுபேரகழிவயிறுளைந்தீன்றஎன்ற அடையால் பைங்கோதைதிருமகளையுணர்த்திற்று. பைங்கோதை இயற்கைநெய்ப்பானும் மயிர்ச்சார்தானுகிய செயற்கைநெய்ப்பானு முளதாகிய ஈர்மை. (குளிர்ச்சி) யமைந்தகூந்தலையுடையவள், பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணக்குறி. துறை - துறையையுடைய வெள்ளத்தையுணர்த்திநின்றது. நடை - திருந்தாநடை. கூந்தலம்பிடியென்பதில் அம்சாரியையும். தமிழ்ப்பனுவற்றுறைப்படியும் என்றவிசேடணத்தால் பிடி கலைமகளுக்காயிற்று. துறைப்படியும் என்றதற்கேற்பப்பிடியென்றார். சிரியர்தமிழறிஞராதலிற்றும் பயின்றதமிழ்ப்பனுவற்றுறை கூறிஞேனும்மறைமுதலியவடசொற்பனு வற்றுறைப்படியும் பிடியெனவு

மூரைத்துக்கொள்க. நீரிற்குளிக்கும் பெருவேட்கையானைக்கியற்கை யாதலானிங்ஙனங் கூறினரெனினுமாம். பிறர்விரும்புவதொன் றைத் தாமும்விரும்புதல் இளஞ்சிறார்க்கியற்கையாதல் காசினியிற்க ண்கூடாக்காண்டுமன்றே, அவ்வேதுவாற் றேவியுந்தம்மிளம் பருவ த்திற்கேற்பத்திருமகள்கலைமகள் என்னுமிருவரு மலரைக்கோயிலா க்கோடல் கண்ணுறுதலும் அன்பரது நெஞ்சக்கஞ்சத்திற்குடிகொண் டனளெனக்கொள்க. மாணிக்கவல்லியென்பதற்கு முன்னுரைத்தாங் குரைக்க. வேள்என்றகுறிப்பால்வில் கரும்புவில்லையும், தோகையிர தியையுங்குறித்தன. சுவைமிகுதிபற்றிக் கண்டுபடுகன்னலென்று ரோனுஞ் சருக்கரை முதலியவற்றிற்குங் காரணங்கன்னலேயென்று ராயிற்று. கலாபம் இறைவிக்கேற்ப மேகலையென்றும், மயிலுக்கேற் பத் தோகையென்றுங் கொள்க, "கலாபமயிலிருந்த பாகத்தார்" என்புழிப்போல. கன்னற்காடுபடு கூடல் என்றமையான் மருதநில மும், குறிஞ்சிநிலத்து மயில் ஈண்டுவந்துறைவதே யெனவியப்பும் தோன்றுதல்காண்க. இன்னும் மயில்வருகவென்னும் சொல்லாற்றல் நீயீண்டுறைதற்பாலையல்லை, யாம் உன்னை யுனக்குரியகுறிஞ்சிநிலத் துய்த்தும் என்றசதியாடுதலையும் புலப்படுத்தும். (குறிஞ்சிநிலம் - மலையாரயனிடம்.)

முயல்பாய் மதிக்குழவி தவழ்சூ லடிப்பலவின்
முட்பொதி குடக்க னியொடு
முடவுத் தடந்தாழை முப்புடைக் கனிசிந்த
மோதிநீ ருண்டி ருண்ட
புயல்பாய் படப்பைத் தடம்பொழில்க ளன்றிமேயற்
பொழிலையு மொருங்க லைத்துப்
புறமூடு மண்டச் சுவர்த்தலமிடித்துப்
புறக்கடன் மடுத் துழக்கிச்

௯ செயல்பாய் கடற்றானை செங்களங் கொளவம்மை
திக்குவிச யங்கொண் டநாள்
தெய்வக் கயற்கொடிக டிசைதிசை யெடுத்தெனத்
திக்கெட்டு முட்ட வெடிபோய்க்
கயல்பாய் குரம்பணை பெரும்பணைத் தமிழ்மதுரை
காவலன் மகள் வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்க ணாயகி வருகவே.

(இ - ள்) முயல் - முயற்கறை, பாய் - பரவிய, மதி - சந்திரனாகிய, குழவி - குழந்தை, தவழ் - தவழ்கின்ற, சூல்அடி - சூற்கொண்ட அடியையுடைய, பலவின் - பலாமரங்களின், முள்பொதி - முட்கள்நெருங்கிய, குடக்கனியொடு - குடம்போலும் கனிகளோடு, முடவு - வளைவாகிய, தடம்தாழை - பெருந்தெங்கின், முப்புடை - முப்புடையுள்ள, கனி - தெங்கம் பழங்களும், சிந்த - சிதறும்வண்ணம், மோதி - தாக்கி, நீர் உண்டு இருண்ட - நீருண்டுகறுத்த, புயல் - மேகமானது, பாய் - தவழ்கின்ற, படப்பை - மருதநிலத்தூர்களிலுள்ள, தடம்பொழில்கள் அன்றி - பெருஞ்சோலைகளையேயன்றி, ஏழ்பொழிலையும் - மேலேழுலகத்தையும், ஒருங்கு அலைத்து - ஒருமிக்கக்கலக்கி, புறம்மூடும் - அப்புறத்து மூடிய, அண்டச்சுவர்த்தலம் இடித்து - அண்டச்சுவராகிய சக்கிரவாளகிரியையும் தகர்த்து, அ - அந்த, புறக்கடல் - பெரும் புறக்கடலில், மடுத்து - வீழ்ந்து, உழக்கி - கலக்கி, செயல்பாய் - படைக்கலத்தேர்ச்சிமிக்க, கடல்தானை - கடல்போன்றசேனை, செங்களம்கொள்ள - போர்க்களங்கொள்ள, அம்மை - அம்மே, திக்குவிசயம்கொண்டநாள் - நீதிக்குவிசயஞ்செய்த காலத்தில், தெய்வம் - தெய்விகமான, கயல் கொடிகள் - மீனத்துவசங்களை, திசைதிசை - திசைகடோறும், எடுத்

தென - எடுத்தாற்போல, திக்கு எட்டும் - அஷ்டதிக்குக்களிலும், முட்ட - இடமின்மையாக, வெடிபோய் - துள்ளி, கயல்பாய் - கயல்மீன்கள்பாய்கின்ற, குரம்பு அணை - வரம்புக ளமைந்த, பெரும்பணை - பெரியவயல்கள்சூழ்ந்த, தமிழ் - தமிழ்பயிலாநின்ற, மதுரை காவலன் - மதுரைகாவலனாகிய மலயத்துவசபாண்டியனுக்கு, மகள் - திருமகளே, வருக - வந்தருள்க.

கயல், குடக்கனியொடு முப்புடைக்கனி சிந்தமோதி, படப்பைப் பொழிலன்றி யேழ்பொழிலையு மொருங்கலைத்து, அண்டச்சுவர்த்தலமிடித்து, புறக்கடலுழக்கி, திக்கு விசயங்கொண்ட நாள் கயற்கொடிக டிசைடிசை யெடுத்தெனத் திக்கெட்டுமுட்ட வெடிபோய்ப்பாய் பெரும்பணைத்தமிழ் மதுரைகாவலன்மகள் வருகவென முடிக்க.

முயல் - முயலுருக்கொண்ட களங்கம். இதனை முயற்கறையென்றும், மானுருவென்றும் கூறி, சசாங்கன் எணாங்கன் என்னும் பெயர்களையும் வழங்குவர் டைநூலார். "முயற்கறைகிழித்து". என்றும், "முயற்கூடழித்து" என்றும், "மானைப்புணர் மதிகீள்வேமகப்படின் மானுக்கென்னுஞ் சேனைக்குறவர்" என்றும் "கொல்லைக்குறவர் குளிர்மதிமானைக் ககநவில்லைக் குனித்தெய்யும்" என்றும் "என்கலைமதிக்கு ளிம்மான் குதிக்குமென்றே" என்றும் இவ்வாறு தமிழ் நூலாரும் வழங்குதல்காண்க. சூல் என்றது காய்களோடு கூடியிருத்தலை. முப்புடையை மும்மொத்தியெனவும் வழங்குவர். "தெங்கங்காய்போலத் திரண்டுருண்ட" என்பதிற்போலப் பலவிடங்களினும் காயெனவழங்கி வருவதும், "தெங்குநீண்டீற்றுயிர் மெய்கெடுங்காயுவரின்" என இலக்கணச் சூத்திரமமைந்திருப்பதும், உலகவழக்கிற் பயின்றுவருவதும் நோக்காது இவர் முப்புடைக்கனியென்றதென்னெனின். "தொங்கம்பழங்க முகின்குலைசாடி" எனத்திருவாதவூரடிகளும், பிறசான்றோரும் பலவிடங்களிற் கூறியிருப்பதை

மணங்கொண்டென்க. பொழிலிரண்டனுள் முன்னையது இவ்வுலகத்தையும் பின்னையது மேலுலகத்தையுங் குறித்தன வென்றலுமொன்று. அ என்றது பண்டறிசுட்டு, இதனைப்பலரறி சுட்டு என்றும் வழங்குப. அப்புறக்கடல் என வைத்து அப்பாற் பட்டகடல்கள் என்றுரைப்பினுமாம். செயல் - போர்த்தொழில் எனினுமாம். போர்க்களத்தைச் செங்களம் என்றார் மாய்ந்தாருடற் செந்நீராற் செவந்திருத்தலான். களம் - இடம். விசயம் - வெற்றி. குரம்பு - செய்கரையுமாம். இத்தன்மைத்தாய கயலுறைதற்ற குறிதோன்ற, "பெரும்பணை" என்றார்.

வடம்பட்ட நின்றுணைக் கொங்கைக் குடங்கொட்டு
மதுரவமு துண்டு கடைவாய்
வழியும்வெள் ளருவியென நிலவொழுகி யிம்பரி
மருப்பிற் பொருப்பி டித்துத்
தடம்பட்ட பொற்றூசிந் தூரங் கும்பத்
தலத்தணிவ தொப்ப வப்பிச்
சலராசி யேழுந் தடக்கையின் முகந்துபின்
றுணைநீ ராணி ரப்பி
முடம்பட்ட மதியங் குசப்படை யெனக்ககன
முகடுகை தடவியுடு மீன்
முத்தம் பதித்திட்ட முகபடா மெனவெழு
முகிற்படா நெற்றி சுற்றுங்
கடம்பட்ட சிறுகட் பெருங்கொலைய மழவிளங்
களிறீன்ற பிடி வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கணா யகி வருகவே.

(இ - ள்.) வடம்பட்ட - மணிவடம்பூண்ட, நின்துணைக் கொங்கைக்குடம் - உனது இருதனக்குடங்கள், கொட்டு - சொரிந்த, மதுரம் அமுதுஉண்டு - இனிமையுள்ளபாலையுண்டு, கடைவாய் வழியும் - கடைவாயில்வழிகின்ற, வெள் அருவிஎன - வெண்மையாகிய அருவியாறுபோல, நிலவுபொழி - நிலவைவீசுகின்ற,கிம்புரி- பூணணிந்த, மருப்பின் - கொம்பினால், பொருப்புஇடித்து - மலைகளைத்தகர்த்து, தடம்பட்ட-மிகுதியாகிய, பொன் - அழகிய, தாது- மகரந்தத்தை, கும்பத்தலத்து - மத்தகத்தில், சிந்துரம் அணிவது ஒப்ப - சிந்தூரப்பொடியை அணிவதுபோல,அப்பி-பூசிக்கொண்டு, சலராசியேழும் - எழுகடல்நீரையும், தடம் - நீளமாகிய, கையின் - துதிக்கையினால், முகந்து - மொண்டுவீசி, பின் - பின்பு. (அந்தக் குறைவை), தானம்நீரால்நிரப்பி - தனதுமதநீரால்நிறைத்து, முடம்பட்டமதி - வளைவாகிய பிறைச்சந்திரனை, அங்குசப்படையென - அங்குசாயுதமென்றெண்ணி, ககநமுகடு - அண்டமுகட்டை, கை தடவி - துதிக்கையினால் துழாவி, உடுமீன் - நக்ஷத்திரங்களாகிய, முத்தம்பதித்திட்ட - முத்துக்களைப்பதித்த, முகபடாம்என - தன் முகப்போர்வையென்றும்படி, எழு - எழுந்துதோன்றுகின்ற,முகில் படாம் - மேகமாகியபோர்வையை, நெற்றிசுற்றும் - தனதுநெற்றியில் சூழ்ந்துகொள்ளுகிற, கடம்பட்டசிறுகண் - குடம்போலாழ்ந்த சிறுகண்களையும், பெருங்கொலைய - பெரியகொலைத் தொழிலையுமுடைய, மழவிளங்களிறு - மிக்க இளங்களிற்றை, ஈன்ற - பெற்ற, பிடி - பெண்யானையே, வருக - வந்தருள்க. எ - று.

கொங்கைக்குடங்கொட்டுமதுரவமுதுண்டு, மருப்பிற்பொருப்பிடித்து, சிந்துரமொப்பப்பொற்றாது கும்பத்தலத்தப்பி, சலராசியேழுமுகந்துதான நீரானிரப்பி, மதியங்குசப்படையெனக்ககநமுகடுதடவி, உடுமீன்முகிற்படாம் முத்தம்பதித்திட்ட முகபடாமென நெற்றி சுற்றும், மழவிளங்களிறீன்றபிடிவருகவென முடிக்க.

¶ மருப்பின்என்பதில் இன் என்னும் ஐந்தனுருபு மூன்றாவதன் கருவிப்பொருட்டு. சலராசி - நீர்த்திரள். இது கருவியாகுபெயரா ய்க் கடலையுணர்த்திற்று. அங்குசம் - தோட்டி. உண்டு, இடித்து, அப்பி, முகந்து, நிரப்பி, தடவி, என்னும் வினையெச்சங்கள் சுற்றும் எ ன்னும் வினைகொண்டன. பொருப்பு என்றது அஷ்டகுலாசலங்களை. தடம்பட்டபொற்றூது என்பதற்கு அம்மலைகளிடத்துள்ள பொற் பொடிகளென்றுரைத்தலுமொன்று. கொலைக்களிறு என்பதில் கொலை சாதியடை, "கொல்களிறு" "அடுகளிறு" "கம்பத்தானை "வங்கக்கடல்" என்றற்றொடக்கத்தனவற்றிற்போல. சலராசி யேழு முகக்குந் தகுதிதோன்றத் தடக்கையென்றார். பதித்திட்ட என்பதற் குக் கோத்தவெனினுமாம். எழுமுகில் - சத்தமேகங்க ளெனினு மிழுக்காது. (௬)

தேனொழுகு கஞ்சப் பொலன்சீ றடிக்கூட்டு
செம்பஞ்சி யின்குழம்பால்
தெள்ளமு திறைக்கும் பசுங்குழவி வெண்டிங்கள்
செக்கர்மதி யாக்கனை பொரும்
வானொழுகு தூங்கத் தரங்கப் பெருங்கங்கை
வாணிநதி யாச்சி வபிரான்
மகுடகோ டீரத் தடிச்சுவ டழுத்தியிடு
மரகதக் கொம்பு கதிர்கால்
மீனொழுகு மாயிரு விசும்பிற் செலுங்கடவுள்
வேழத்தின் மத்த கத்து
விற்றிருக் குஞ்சே யிழைக்கும் பசுங்கமுகு
வெண்கவரி வீசும் வாசக்
காவொழுகு தடமலர்க் கடிபொழிற் கூடல்வளர்
கவுரியன் மகள் வருகவே

கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்க ணாயகி வருகவே.

(இ - ள்.) தேன்ஒழுகு - தேனொழுகுகின்ற, கஞ்சம் - தாம ரைமலர்போன்ற, பொலன் - அழகாகிய, சீறடிக்கு-சிற்றடிகளுக்கு, ஊட்டு - ஊட்டப்பட்ட, செம்பஞ்சியின் குழம்பால் - செம்பஞ்சிக் குழம்பினால், தெள்அமுது இறைக்கும் - தெள்ளிய அமுதத்தை யிறைக்கின்ற, பசு - பசுமையாகிய,வெள்குழவி திங்கள் - வெண்மை யாகிய இளம்பிறையானது, செக்கர்மதிஆ - செம்பிறையாகவும், க ரைபொரூஉ - கரையைமோதுகின்ற, வாஒழுகு - விண்ணுலகத் துள்ள, துங்கம் - பரிசுத்தமாகிய, தரங்கம் - அலைகளோடுகூடின, பெருகங்கை - பெரியகங்காநதியானது, வாணிநதிஆ - சரசுவதிநதி யாகவும், சிவபிரான் - சிவபிரானது, கோடீரமகுடத்து - சடாமகு டத்தில், அடிச்சுவடு-சீர்பாதச்சுவட்டை, அழுத்தியிடும்-பதிக்கின்ற, மரகதக்கொம்பு - மாகதமணிக்கொம்பே,கதிர்கால் - ஒளிவீசுகின்ற, மீன்ஒழுகு - தாரகணமியங்குகின்ற, மாயிருவிசும்பில் - மிகப்பெ ரியவிண்ணில், செலும் - செல்லுகின்ற, கடவுள்வேழத்தின்-தெய் வத்தன்மையமைந்த யானையின், மத்தகத்து - கும்பத்தலத்தின்மீது, வீற்றிருக்கும் - வீற்றிருக்கின்ற, சேயிழைக்கும் - இந்திராணிக்கும், பசுங்கமுகு - பசியகமுகமரங்கள், வெண்கவரிவீசும் - (பாளைகளா கிய) வெண்கவரி வீசுகின்ற, வாசம்கான்ஒழுகு - பரிமளமிகுதியுள் ·, தடம்கடி - பெருமையுங்காவலுமமைந்த, மலர்பொழில் - பூஞ் சாலைகள் சூழ்ந்த, கூடல் - மதுரைப்பதியில், வளர் - வளர்கின்ற, கவுரியன்மகள் - பாணடியன் புதல்வியே, வருக - வந்தருள்க.எ-று.

செம்பஞ்சியின் குழம்பால் வெண்டிங்கள் செக்கர்மதியா, கங் கைவாணிநதியா, சிவபிரான் மகுடகோடீரத்தடிச்சுவடழுத்தி யிடு மரகதக்கொம்பு, கடவுள் வேழத்தின் மத்தகத்துவீற்றிருக்குஞ்சேயி

மைழ்.கும் கமுகுகவரிவீசுகின்ற கடிபொழிற்கூடல்வளர் கவுரியன் மகள் வருகவென முடிக்க.

"ஆதிபகவன்றனதாடறணிப்பான்பணிய" என்றவாறே சிவபிரான் தேவியையூடறணிக்குங்காலப் பெருமான் சடாமகுடத் தணிந்த பிறைமதியுஞ் சுரநதியு மிறைவியின் சீர்பாதச்செம்பஞ்சிக் குழம்பு பட்டுச் சிவத்தலான், வெண்டிங்கள் செக்கர்மதியா, கங்கைவாணி நதியா என்றார். மகுடகோடீரம் என்பதனை முன்பின்னாகமாற்றிக் கோடீரமகுடமெனவைத்துச் சடாமகுடமெனப் பொருளுரைக்கப் பட்டதற்குக் காரணம், முடிச்சடை மகுடச்சடையென்றது சங்கட முடிசடாமகுடமென்பதே பெருவழக்காயிருத்தலெனக் கொள்க. பசுமை - ஈரமுமாம். துங்கம் - உயர்ச்சியெனினுமாம். சிவபிரான்- சீவகோடிகளுக்குச் சுபத்தைத் தருகிற உபகாரசீலன். ஐந்தருநீழலில் வீற்றிருத்தலேயன்றி யிந்திரனே டயிராவதத்தின் மத்தகத்தும் வீற்றிருத்தலேனக்கி 'வேழத்தின் மத்தகத்தும் வீற்றிருக் குஞ்சேயிழை" என்றார். இவ்வும்மைபிறந்தது தழீஇயது. கடவுள் வழத்து மத்தகத்து வீற்றிருக்கும் என்றவிசேடணத்தால் சேயிழை யிந்திராணியைக் குறித்தது. கடவுள் வேழத்தின் மத்தகத்து வீற்றிருக்குஞ் சேயிழைக்கும் பசுங்கமுகு வெண்கவரிவீசும் என்றமையால் கமுகஞ்சோலைகள் சுவர்க்கலோகத்தளவு முயர்ந்திருக்கின்றனவென்பது பெறப்படுகின்றது. கமுகம்பாளை வெண்ணிறமாதலால் வெண்கவரியென்றார். கவரி-சாமரம் இதனைச் சாமரையென்றும் வழங்குவர் இவ்வாறே பிறரும் "தண்கமுகின் பாளை தடங்கதிரின்செல்வனுக்கு வெண்கவரிபோலசையும் வேங்கடம்" எனக்கூறுதல்காண்க.

வடக்குங் குமக்குன் றிரண்டேந்தும் வண்டன்
மகளிர் சிறுமுற்றில்
வாரிக் குவித்த மணிக்குப்பை வாரு
றடைப்ப வழிபிழைத்து

நடக்குங் கதிர்பொற் பரிசிலா நகுவெண்
பிறைகைத் தோணியதா
நாண்மீன் பரப்புச் சிறுமிதப்பா நாப்பண்
மிதப்ப நாற்கோட்டுக்
கடக்குஞ் சரத்தின் மதநதியுங் கங்கா
நதியு மெதிர்கொள்ளக்,
ககன வெளியுங் கற்பகப்பூங் காடுங்
கடந்து கடல்சுருங்க
மடுக்குந் திரைத்தண் டுறைவையை வளநாட்
டரசே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு வாழ்வே
வருக வருகவே.

(இ - ள்.) வடம் - மணிவடமணிந்த, குங்குமம் - குங்குமக் ழம்பு பூசப்பட்ட, குன்று இரண்டு - இரண்டு மலைகளையும், ஏந் ம் - சுமவாநின்ற, வண்டல்மகளிர் - விளையாட்டுச் சிறுமியர், முற்றில் - சிறு முச்சிலால், வாரிக்குவித்த - வாரிக்குவை ய்த, மணிகுப்பை - மணிக்குவையானது, வான் ஆறு அடைப்ப - ாயமார்க்கத்தைத் தடுக்க, வழிபிழைத்து நடக்கும் - வழிதப்பி க்கின்ற, கதிர் - சூரியன், பொன்பரிசில் ஆ - பொற்பரிசிலாக ம், நகுவெண்பிறை - பிரகாசிக்கிற வெண்பிறையானது, கைத் தாணி ஆ - கைத்தோணியாகவும், நாள்மீன்பரப்பு - நக்ஷத்திரப் ரப்பு, சிறுமிதப்பா - சிறியமிதப்புக்களாகவும், நாப்பண்மிதப்ப - வேமிதக்கவும், நாற்கோடு - நான்குகொம்புள்ள, கடக்குஞ்சரத் ன் - மதயானையின், மதநதியும் - மதயாறும், கங்காநதியும் - ஆகா ங்கையாறும், (சேர்ந்து) எதிர்கொள்ள - எதிர்ந்துபெருகவும், கநவெளியும் - ஆகாய வெளியையும், பூ - அழகாகிய, கற்பகக்கா

டெயி - கற்பகக்காட்டையும், கடந்து - தாண்டி, கடல்சுருங்க - கடலும் சிறிதாக, மடுக்கும் - பெருகுகின்ற, திரை - அலைகளையுடைய, தண்துறை - குளிர்ந்ததுறைகளுள்ள, வையைவளநாடு - வையையாறுசூழ்ந்த பாண்டிவளநாட்டிற்கு, அரசே - பெண்ணரசியே, வருக - வந்தருள்க, மலயத்துவசன்பெற்ற - மலயத்துவச பாண்டியனீன்ற, பெருவாழ்வே - பெரியவாழ்வே, வருக - வந்தருள்க. எ-று.

வண்டன் மகளிர் குவித்தமணிக்குப்பை வானுறடைப்பவழி பிழைத்து நடக்குங்கதிர் பொன்பரிசிலா, வெண்பிறை கைத்தோணியா, நாண்மீன்பரப்புச் சிறுமிதப்பா நாப்பண் மிதப்ப, நாற்கோட்டுக்குஞ் சரத்தின்மதநதியுங் கங்காநதியு மெதிர்கொள்ள, ககனவெளியுங் கற்பகப்பூங்காடுங் கடந்துகடல் சுருங்கமடுக்குந் தண்டுறைவையை வளநாட்டரசேவருக, மலயத்துவசன்பெற்ற பெருவாழ்வேவருக எனமுடிக்க.

இரண்டென்பதனீற்றில் இனைத்தென வறிபொருளும்மை தொகுத்தலாயிற்று. வானுறடைப்ப என்பதற்கு ஆகாயகங்கை தூர்க்க என்று முரைப்ப. முத்தித்தலையாகிய திரோபவமெமாறு முன்னின்றருளும் பராசத்தியே தடாதகைப்பிராட்டியா தரித்தருளினமையானும், திரிபதார்த்த வுணர்வினர்க்கன்றி யேயர்க்கெளிதிற் பெறலரியளாதலானும், மலயத்துவசபாண்டியற் துணைப்பெரியளெளிதிற் கிடைத்தமையானும், மலயத்துவசன் ற்ற பெருவாழ்வு என்றார். வாழ்வு - செல்வம். வாழ்ச்சியைத் வது. இதுகருவியாகுபெயர். பரிசில் என்பதனைப் பரிசு என் கூறுப. இதுயாறு முதலியவற்றைக்கடந்து சேறற்பொருட்டு யின்வாரையாற் குடைபோல வட்டவுருவமாய்ச்செய்து புறத் தோலான் மூடப்பட்டிருப்பதாகிய ஓர்வகை யோடம். இது தெ ஞட்டியாறுகளிற் காணலாம், இது திசைச்சொல். குங்குமக்குன் உவமையாகுபெயர்.

(க

சுண்ணந் திமிர்ந்து தேனருவி துளைந்தா
டறுகாற் றும்பிபசுந்
தோட்டுக் கதவந் திறப்பமலர்த் தோகை
குடிபுக் கோகைசெயுந்
தண்ணங் கமலக் கோயில்பல சமைத்த
மருதத் தச்சன்முழுத்
தாற்றுக் கமுகு நாற்றியிடுங் கடங்கா
வணப்பந் தரில்வீக்கும்
விண்ணம் பொதிந்த மேகபடா மிசைத்தூக்
கியபன் மணிக்கொத்து
விரிந்தா லெனக்கா னிமிர்ந்துதலை விரியுங்
குலைநெற் கற்றைபல
வண்ணம் பொலியும் பண்ணைவயன் மதுரைக்
கரசே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு வாழ்வே
வருக வருகவே.

(இ - ள்.) சுண்ணம் - மகரந்தத்தை, திமிர்ந்து - பூசிக்கொ ாடு, தேன்அருவி - தேன்பெருக்கில், துளைந்து - மூழ்கி, ஆடு - விளையாடுகின்ற, அறுகால்தும்பி - ஆறுகால்களையுடைய வண்டுகள், சுந்தோடுகதவம்திறப்ப - பசிய இதழ்க்கதவுகளைத் திறத்தலால், லர்த்தோகை - செந்தாமரை மலரில் வாழ்கின்ற திருமகள், குடி க்கு-குடிபுகுந்து, ஓகைசெயும் - களிக்கின்ற, தண் அம் கமலக்கோ ில் - குளிர்ச்சியாகிய தாமரைமலராகிய கோயில்கள், பலசமைத்த- நேகத்தைச்செய்த, மருதம் - மருதநிலமாகிய, தச்சன் - தச்சனுனை ன், முழுதாறு - நெடியகுலைகளையுடைய, கமுகு - பாக்குமரங்களை,

நாற்றியிடும்-தோன்றவைத்த, தடம்காவணம்-பெரியசோலையாகிய, பந்தரில் - பந்தலில், விண்ணம்பொதிந்த - ஆகாயத்தைமூடின, மேகம்படாம்மிசை - மேகமாகிய வஸ்திரத்தில், தூக்கிய-தொங்கவிட்ட, பல்மணிகொத்து - பலவிதமணிக்கோவைகள், விரிந்தால்என-விரிந்தாற்போல, கால்நிமிர்ந்து - மேலோங்கி, தலைவிரியும் - தலைக்கண் விரிந்த, குலைநெல் - நெற்கதிர்களாகிய, கற்றை - கற்றைகள், பலவண்ணம் - பற்பலநிறங்களாய், பொலியும் - அழகுசெய்கின்ற, பண்ணைவயல் - செய்கானிலங்களுள்ள, மதுரைக்கு - திருமதுரைப்பதிக்கு, அரசே - அரசியே, வருக - வந்தருள்வாயாக. எ - று.

தும்பிகதவந்திறப்ப, மலர்த்தோகைகுடிபுக்கு ஓகைசெயுங்கமலக்கோயில் பலசமைத்த மருதத்தச்சன், விண்ணம்பொதிந்த மேகபடாமிசைத்தூக்கிய பன்மணிக்கொத்து விரிந்தாலென்ன, கமுகு நாற்றியிடுங்காவணப்பந்தரில், தலைவிரியுங் குலைநெற்கற்றைபலவண்ணம்பொலியும் பண்ணைவயன் மதுரைக்கரசேவருக எனமுடிக்க.

முழுத்தாறு - முதிர்ந்தகுலையெனினுமாம். திருமகள்வந்துறையுமாறு மருதத்தச்சன் பலதாமரைக்கோயில்களைச் சமைத்துக் கமுகுநாற்றியிடும் தடங்காவணப்பந்தரில், மேகபடாமிசைத்தூக்கிய பன்மணிக்கொத்து விரிந்தாலென்னத் தலைவிரியுங்குலைநெற்கற்றை பலவண்ணம் பொலியும் பண்ணைவயல் மதுரையென்றதனால் மருதத்திணைக்குரிய பொருள்கள் பலவற்றையு மொருங்கு கூறினாராயிற்று. மருதத்தச்சன் இயற்றியதென்றது இயற்றுதலொன்றை யியற்றுவதுபோலக் கூறுவதோர் மரபுவழுவமைதி. விண்ணம் எ பதில் அம்சாரியை. ஓகைசெய்தல் ஒருசொல். பன்மணிக்கொத்து விரிந்தாலென்ன என்றதற்கேற்ப, குலைநெற்கற்றை பலவண்ணம் பொலியும் என்றார்.

தகரக் குழலி னலையுநறை தருதீம்
புகையுந் திசைக் களிற்றின்

றடக்கை நாசிப் புழைமடுப்பத் தளருஞ்
சிறுநுண் மருங்குல் பெருஞ்
சிகரக் களபப் பொம்மன் முலைத்
தெய்வ மகளிர் புடையிரட்டுஞ்
செங்கைக் கவரி முகந் தெறியுஞ்
சிறுகாற் கொசிந்து குடிவாங்க
முகரக் களி ண் டைடைகிடக்கு முளரிக்
கொடிக்குங் கலைக் கொடிக்கு
முருந்து முறுவல் விருந்திடுபுன் மூர
னெடுவெண் ணில வெறிப்ப
மகரக் கருங்கட் செங்கனிவாய்
மடமான கன்று வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

(இ - ள்.) தகரம் - மயிர்ச்சாந்துபூசப்பெற்ற, குழலின் - கூந்தலினது, நறையும் - மணமும், நறைதரு - மணத்தைத்தருகின்ற, நீபுகையும் - இனிய (அகிலின்) புகையும், திசைக்களிற்றின் - திக்கயங்களுடைய, தடம் - பெரிய, கை - துதிக்கையின், நாசிப்புழை மடுப்ப - மூக்காகிய துளையில் பிரவேசிக்கவும், தளரும் - தளர்கின்ற, சிறுநுண் - மிகவும் நுட்பமாகிய, மருங்குல் - இடையானது, பெரு சிகரம் - பெரியமலைபோன்ற, களபம் - கலவைச்சாந்தணிந்த, பொம்மல் - பூரிப்பையுடைய, முலை - தனங்களையுடைய, தெய்வமகளிர் - தேவமாதர்கள், புடையிரட்டும் - பக்கத்தில்நின்று பணிமாறுகின்ற, செங்கைகவரி - செங்கையிலுள்ள சாமரைகள், முகந்து எறியும் - மொண்டு வீசுகின்ற, சிறுகாற்கு - இளங்காற்றுக்கு, ஒசிந்து

குடிவாங்க - தள்ளாடிப்பெயரவும், முகரம் - சங்கங்கள் தயிலப்பெற்ற, களிவண்டு அடைகிடக்கும் - களியளிகள் அடைகிடக்கின்ற, முளரி - செந்தாமரை மலரில்வாழ்கின்ற, கொடிக்கும் - பூங்கொடி போல்பவளாகிய திருமகளுக்கும், கலை - வேதமாகிய கலைகளில் வாழ்கின்ற, கொடிக்கும் - பூங்கொம்புபோல்பவளாகிய கலைமகளுக்கும், முருந்து - மயிலிறகினடிபோன்ற, முறுவல் - தந்தங்கள், விருந்திடு - விருந்துசெய்கின்ற, புன்மூரல் - சிறுநகை, நெடு - மிகுதியாகிய வெள்நிலவு எறிப்ப - வெள்ளியநிலாவொளியை வீசவும், மகரம் - மீன் போன்ற, கருகண் - கருங்கண்களையும், செங்கனிவாய் - செங்கனி போனற திருவதரத்தையும் உடைய, மடம்மான்கன்று - இளமான் கன்றுபோல்பவளே, வருக - வந்தருள்க. எ - று.

மடுப்ப, குடிவாங்க, நிலவெறிப்பவருகவென முடிக்க.

நறைதரு ஒருசொல்லெனக் கொண்டு மணக்கின்ற என்றுரைப்பினுமமையும். இதற்கு நறைதாபகுதி. நறை - கூந்தலினியற்கை மணமாகவும், நறைதருதீம்புகை அகிற்புகையாலாகிய செயற்கை மணமாகவும் கொள்க. குழலின் என்ற குறிப்பால் நறைதருதீம்புகை அகிற்புகையைக் குறித்தது. "அகிலின்புகை விம்மியாய் மலர்வேய்ந்து" என்றார் திருவாதவூரடிகளும். இவ்வாறன்றிக் குழலினியற்கை மணமும் மலர்முதலியவற்றா லுண்டாகுஞ் செயற்கைமணமும், மாடங்களில் நறுமணங்கமழப் புகைக்கப்படுகின்ற அகிற்புகையும் எனக்கூறலுமாம். நறைதரு தீம்புகையென்றார் கண்களுக்கு எரிச்சல் முதலியதீமை பயவாமையான். மருங்குல் குடிவாங்க எனவியையும். இறைவி தடாதகைப்பிராட்டியாய்த் திருவவதரித்த ஞான்று மலர்மகளும் கலைமகளும் தோழியராய்வந்திருந்தமைபற்றி முளரிக்கொடிக்கும் கலைக்கொடிக்கும், விருந்திடு புன்மூரல் என்று குடிவாங்கல் நீங்கலெனினுமாம். முகரமுளரியெனவும், களிவண்டடை கிடக்கும் முளரியெனவும் இயையும், "குடப்பானத்தரக்கர

விந்தத்தின் மேற்றுயில்பண்ணை மறைக்கானத்தர்" என்றும், "ஸ்ரீரி சப்பொருட்டினத்துக் குலந்தத்திமுத்தீனும்" என்றும் பிறருமிவ்வாறு கூறுதல்காண்க. அடைகிடத்தல் தங்குதல் எனினுமாம். மகரம் ஒலியென்றுங்கூறுப. மகரம் ஈண்டு மீன்பொதுவைக்குறியாது சேல்மீனைக்குறித்தது. மகரம் காமன்கொடியெனக்கொண்டு, அதுபோல யாவரையும் வசித்தற்குரிய என்று கண்ணுக்கு விசேடணமாக்கினுமாம். (அ)

தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகு நறுஞ்
சுவையே யகந்தைக் கிழங்கை யகழ்ந்
தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய
விமயப் பொருப்பில் விளையாடு
மிளமென் பிடியே யெறிதரங்கம்
உடுக்கும் புவனங் கடந்து நின்ற
வொருவன் றிருவுள் ளத்திலழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கு முயிரோ
வியமே மதுகரம் வாய்
மடுக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

(இ - ள்.) தொடுக்கும் - தொடுக்கப்பட்ட, கடவுள் - தெய்வத்தன்மையமைந்த, பழம்பாடல் - பழம்பாடலாகிய, தொடை - மாலையின், இன் - இனிதாகிய, பயனே - பேறே, நறைபழுத்த - தேன்

மிருந்த, துறை - பலதுறைகளையுடைய, தீந்தமிழின் - இனியதமிழா கிய கனியினின்று, ஒழுகும் - வழிகின்ற, நறுசுவையே - நற்சுவை யே, அகந்தைகிழங்கை - ஆணவமலமாகிய மூலத்தை, அகழ்ந்து எடுக்கும் - தோண்டியெடுக்கின்ற, தொழும்பர் - மெய்யடியாரது, உள்ளம் கோயிற்கு - மனமாகிய கோயிலுக்கு, ஏற்றும் - ஏற்றப்படு கிற, விளக்கே - தீபமே, வளர் - உயர்ந்த, சிமையம் - கொடுமுடி யையுடைய, இமையப்பொருப்பில் - இமயமலையில், விளையாடும் - விளையாடுகின்ற, மெல்இளம்பிடியே - மிகவும் இளமையாகியபெண் யானையே, எறி-கரையில் மோதுகின்ற, தரங்கம் உடுக்கும் - கடலா கிய ஆடையை யுடுத்த, புவனம் - எல்லாவுலகங்களையும், கடந்து நின்ற ஒருவன் - கடந்துநின்றவனாகிய ஒப்பற்றபரமசிவன், திருவுள் ளத்தில் - தனதுதிருவுளத்தில், அழகுஒழுக - அழகுபெருக,எழுதி- சித்திரித்து, பார்த்திருக்கும் - நோக்கிக்கொண்டேயிருக்கிற, உயிர் ஓவியமே - உயிரையுடைய சித்திரப்பாவையே, மதுகரம் - வண்டு கள், வாய்மடுக்கும் - வாய்வைத்துத்தேனுண்ணுதற்கிடமாகிய,சூழற் காடு - கூந்தற்காட்டை, ஏந்தும் - தாங்குகின்ற, இளவஞ்சிக்கொடி யே - இளமையாகிய வஞ்சிக்கொடிபோல் வாளே, வருக - வந் தருள்க. எ - று.

பயனே, சுவையே, விளக்கே, பிடியே, ஓவியமே, கொடியே, வருக எனமுடிக்க.

அகந்தை - ஆணவமலம். தொழும்பர் - சீவன்முத்தர். தரங்கம் சினையாகுபெயர். பழம்பாடல் என்றது வேதசிவாகமாதிகள். அன் றித் திருநெறித் தமிழ்வேதம் எனினுமாம். பிறவிக்குக் காரணமா யிருத்தலால், ஆணவத்தை, அகந்தைக்கிழங்கு என்றார். விளையாடு தற்குரிய பருவமிளமையும, பிடிவிளையாடுதற்குரியவிடம் மலையு ஆதலால், இளமென்பிடியே என்றும், இமயப்பொருப்பில் விளையா டும் என்றும்கூறினார். மதுகரம் - தேனையீட்டுவது என்னும் பொரு

டுருவதோர் வடமொழி. காடு கொடியை யேந்தலியல்பாயிருக்க, கொடிகாட்டையேந்தலோர் வியப்பாமென்றற்கு, குழற்காடேந்து மிளவஞ்சிக்கொடி என்றார்.

பெருந்தே னிறைக்கு நறைக்கூந்தற்
பிடியே வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறைமௌலிப்
பெம்மான் முக்கட் சுடர்க்கிடுநல்
விருந்தே வருக மும்முதற்கும்
வித்தே வருக வித்தின்றி
விளைக்கும் பரமா னந்தத்தின்
விளைவே வருக பழமறையின்
குருந்தே வருக வருள்பழுத்த
கொம்பே வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளங்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்
மருந்தே வருக பசுங்குதலை
மழலைக் கிளியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

(இ - ள்.) பெருந்தேன்இறைக்கும் - மிகுதியாகிய தேனை யெடுத்திறைக்கின்ற, நறை-மணமுள்ள, கூந்தல்-கூந்தலையுடைய, பிடியே - பெண்யானையே, வருக - வந்தருள்க, பிறைமவுலிபெம்மான் - பிறையையணிந்த சடாமகுடத்தையுடைய சிவபெருமானாகிய, முக்கண்சுடர்க்கு - முக்கண்களையுடைய சோதிசொரூபனுக்கு, இடு - அமைக்கப்பட்ட,நல்விருந்தே - சிறந்தவிருந்தே, வருக - வந்

தருள்வாயாக, மும்முதற்கும் - மூன்றாகிய முதற்பொருள்களுக்கும், வித்தே - பீஜமே, வருக - வந்தருள்வாயாக, வித்துஇன்றி-பீஜமில்லாமல், விளைக்கும் - விளைவிக்கப்படுகிற, பரமாநந்தம் - பேராநந்தமாகியபயிரின், விளைவே - பயனே, வருக - வந்தருள்க, பழமறையின் - பழமையாகிய வேதங்களின், குருந்தே - அங்குரமே, வருக - வந்தருள்க, அருள்பழுத்த - திருவருளாகிய கனிபழுத்த, கொம்பே- பூங்கொம்பே, வருக - வந்தருள்க, திருக்கடைக்கண் கொழித்த - திருக்கடைக்கண்கள்கொழித்த, கருணைப்பெருவெள்ளம் - கருணையாகியகடலில், குடைவார் - மூழ்குவோராகிய மெய்யடியாரது, பிறவிப்பெரும்பிணிக்கு - பிறவியாகிய பெரியபிணியினின்று நீக்குவதற்கு, ஓர்மருந்தே - ஒப்பற்ற ஔஷதமே, வருக - வந்தருள்க, பசுங்குதலைமழலைகிளியே, இளமையாகியமழலைச்சொல்லைத் தடுமாறிப்பேசுகின்ற கிள்ளையே, வருக - வந்தருள்க. எ - று.

கூந்தற்பிடியே———மழலைக்கிளியே வருகவென் முடிக்க.

இறைவன் இடையறாது கடைக்கண்சாத்திக் களிக்கத்தக்க கட்டழகியாதலான் இறைவியை முக்கட்சுடர்க்கிடு நல்விருந்து என்றார். மும்முதல் - மும்மூர்த்திகள், வித்து என்றது அம்மூவருக்குந் தாயகமாயிருத்தலை. பரமாநந்தத்தின்விளைவு - பேரின்பவுருவாகிய சிவபோகம். இது மெய்யன்பர் ஆணவக்காடற வெறிந்து, அகங்காரக்கல்லைப்போழ்ந்த கழந்துவீசி, நெஞ்சநிலங்காணத்திருத்தி, அந்நிலத்தில் மோநமாகிய வித்துப்பதித்து, அன்பென்னு நீர்பாய்ச்சி, அது முளைத்துப்பயிரா குங்காறும் மாயையாகியபறவை யணுகாவண்ணம் குறிக்கொண்டுகாத்து, அவ்வாறு விளைத்துத்துய்க்குஞ் சிவாநுபவம். "காராருமாணவக் காட்டைக் களைந்தறக்கண்ட கங்காரமென்னுங் கல்லைப்பிளந்து நெஞ்சகமான பூமிவெளிகாணத் திருத்திமேன்மேற், பாராதியறியாத மோனமாம்வித்தைப் பதித்தன்புநீராகவே, பாய்ச்சியது பயிராகுமட்டு மாமாயைவன்பறவை யணுகாதவண்



அம்புலிப்பருவம் குழந்தைவிளையாட தாய்தந்தை தோழி சந்திரனை அழைத்தல்.

னம், நேராகநின்று விளைபோகம் புசித்துண்ட நின்னன்பர்" என்
ருளினர் தாயுமானசுவாமிகள். மறையின்குருந்து - வேதாந்தம்,
இது உபநிடதம் எனப்படும். அருள்பழுத்தகொம்பு என்றார், இறை
க்குத் திருவருளே யுருவமாதலான். கருணைவெள்ளங்குடைவார்-
திருவருளைத்தரிசித்து அதுகளை கணைச்சிவத்தையுள்ளவா றுணர்
வர். பிறவிப்பிணியைப் பிழையாதகற்றலின் ஓர்மருந்து என்றார்.

---

## எ-வது, அம்புலிப்பருவம்.

ண்டுபடு குதலைப் பசுங்கிளி யிவட்கொரு
    கலாபேத மென்ன நின்னைக்
லைமன்றகண் முறையிடுவ கண்டோ வளைதொன்
    கலாநிதி யெனத் தெரிந்தோ
ண்டுபடு தெரியற் றிருத்தாதை யார்மரபின்
    வழிமுத லெனக்குறித்தோ
ளர்சடை முடிக்கொன்றை தண்ணாறுங் கன்னியா
    வைத்தது கடைப்பிடித்தோ
ண்டுபடு பாற்கடல் வருந்திருச்
    சேடியொடு கூடப் பிறந்த தோர்ந்தோ
காமாட்டி யிவணின்னை யெம்மெனக்
    கொம்மெனக் கூவிடப் பெற்றுயுனக்
ண்டுபடு சீரிதன் றுகலா விளைஞட
    னம்புலீ யாட வாவே
மணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
    னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) கண்டுபடு-கற்கண்டின் சுவையமைந்த, குதலை-மழலைச்சொல்லை மிழற்றுகின்ற, பசுங்கிளி-பச்சைக்கிளிபோன்ற, இவட்கு-இவ்விறைவிக்கு, ஒருகலாபேதம் என்ன - ஒருகூற்றின் வேறுபாடென்று, நின்னை - உன்னை, கலை - கலைகளும், மறைகள் - வேதங்களும், முறையிடுவகண்டோ - முறையிடாநின்றவற்றைத் திருவுளத்தடைத்தோ, அலாது - அன்றி, ஒள் - ஒள்ளிய, கலாநிதியெனத் தெரிந்தோ - கலாநிதியென்றறிந்தோ, வண்டுபடு - வண்டுகள் மொய்க்கின்ற, தெரியல் - பூமாலையையணிந்த, திருத்தாதையார் - திருத்தந்தையினது, மரபின்வழி - குலமரபின் சந்ததிக்கு, முதல்என - முதற்புருடனென்று, குறித்தோ - மதித்தோ,. எந்தை - எம்மிறைவர், வளர்சடைமுடிக்கு - (தமது) நீண்டசடாமகுடத்துக்கு, தண்நறுகண்ணி ஆ - குளிர்ந்தமணமாலையாக, வைத்தது - அமைத்துக்கொண்டதை, கடைப்பிடித்தோ - தேர்ந்தறிந்தோ, குண்டுபடு - ஆழமுள்ள, பாலகடல்வரும் - பாற்கடலிற்றோன்றின, திருசேடியொடு - திருமகளாகிய தோழியுடன், கூடப்பிறந்தது - ஒருங்கே நீ பிறந்ததை, ஓர்ந்தோ - உணர்ந்தோ, கோமாட்டியிவள் - பெண்ணரசியாகிய இவள், நின்னை - உன்னை, கொம்மெனவம்மென - விரைவாய்வரக்கடவையென்று, கூவிப்பெற்றாய் - அழைக்கப்பெற்றாய், இது - இவ்வாறிவளழைக்கப்பெற்றது, உனக்கு அண்டுபடுசீர்அன்று - உனக்குக் கிடைக்கத்தக்க சிறப்பன்று, ஆதலால் - ஆகையால், அம்புலீ - சந்திரனே, இவளுடன் - இவ்விறைவியோடு, ஆடவா - விளையாட நீ வருவாயாக, ஆணி - உரையாணியிட்ட, பொன் - பொன்னுலவியன்ற மேருமலையாகிய, வில்லி - வில்லையுடையவராகிய சிவபிரானை, புணர் - கலந்திருக்கிற, மாணிக்கவல்லியுடன் - மாணிக்கவல்லியோடு, ஆட - விளையாடும் பொருட்டு, அம்புலீவா - சந்திரனே நீ வருவாயாக. எ - று.

நின்னை இவட்கு ஒருகலாபேதமென்னக்கலை மறைகள் முறையிடுவகண்டோ, அலாது கலாநிதியெனத்தெரிந்தோ, திருத்தாதையார்

மரபின் வழிமுதலெனக்குறித்தோ, எந்தைசடை முடிக்குக்கண்ணி யாவைத்தது கடைப்பிடித்தோ, பாற்கடல் வருந்திருச் சேடியொடு கூடப் பிறந்ததோர்ந்தோ, கோயாட்டியிவள் வம்மெனக்கூவிடப் பெற்றாய். உனக்கண்டுபெடு சிரிதன்றாதலால், அம்புலீ, இவளுடன் ஆடவாவெனவும், பொன்வில்லிபுணர் மாணிக்கவல்லியுடன் ஆட வாவெனவும் முடிக்க. கடைப்பிடித்தல், உறுதியாகப்பற்றுதல் எனி னுமாம். அண்டுதல் - பொருந்துதல். கொம்மெனல் - விரைவுக் குறிப்பு. சந்திரன் இறைவியின் கலைகளிலொருகூறாய் நின்றி ருளை நீக்கியொளிபரப்பி உலகத்துள்ள சராசரவுயிர் கட்குத்தண் ணளிசெய்தலால் ஒருகலாபேதமென்னக் கலைமறைகள் முறையிடுவ என்றார். மூவேந்தரிற் சிறப்புடைமைநோக்கித் திருததாதையா என்றுயர்த்திக்கூறினர். கண்டு பொருளாகுபெயர். படுஉவமவு ருபெனினுமொக்கும். கோமாட்டிகோமான் என்பதன பெண்பாற் பெயர். ஆணி - மாறறுதிகருவியாகிய பொன்னாணி. கண்டோவென பவற்றீற்றோ காரங்கள் ஐயப்பொருள.

குலத்தோடு தெய்வக் குழாம்பிழிந் தூற்றிக்
 குடித்துச் சுவைத்து மிழ்ந்த
கோதென்று மழல்விடங் கொப்புளிக்
 கின்றவிரு கோளினுச் சிட்டமென்றும்
கலைத்தோடு மூடிக் களங்கம் பொதிந்திட்ட
 கயரோகி யென்று மொருநாள்
கண்கொண்டு பார்க்கவுங் கடவதன்றெனவிக்
 கடம்புலி யெடுத் திகழவிட்
புலத்தோடு முடிமீன் கணத்தோடு
 மோடுநின் போல்வார்க்கு மாபாதகம்
போக்குமித் தலமலது புகலிலலை
 காண்மிகைப் பொங்குபுனல் கறபகக்கா

டலைத்தோடு வையைத் துறைப்படி மடப்பிடியொ
டம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) தெய்வக்குழாம் - தேவர்கூட்டங்கள், குலத்தோடு - தத்தஞ்சுற்றத்தாருடனே, பிழிந்துஊற்றி - பிழிந்துவார்த்து, குடித்து - பருகி, சுவைத்து உமிழ்ந்த - சுவைத்து மிழ்ந்துவிட்ட, கோது என்றும் - சக்கையென்றும், அழல் - எரிகின்ற, விடம்-விடத்தை, கொப்புளிக்கின்ற - உமிழ்கின்ற, இருகோளின் - பெரிய இராகுவாகிய கிரகத்தின், உச்சிட்டம் என்றும் - எச்சிலென்றும், கலை - கலைகளாகிய, தோடு - போர்வையால், மூடி - மூடப்பட்டு, களங்கம் பொதிந்திட்ட-கறைபொருந்திய, கயரோகிஎன்றும் - க்ஷயரோகியென்றும், ஒருநாள் - ஒருபொழுதும், கண்கொண்டு-கண்களால், பார்க்கவும் - பார்ப்பதற்கும், கடவது அன்று என-தகுந்ததன்றென்று, இ - இந்த, கடல் - கடல்சூழ்ந்த, புவி - பூமியிலுள்ளார், எடுத்து இகழ - தெரிந்தெடுத்து நிந்திக்க, விண்புலத்துஓடும் - ஆகாயத்தில்இயங்குகின்ற, உடுமீன்கணத்தோடும் - நக்ஷத்திரங்களாகிய நாண்மீன்களுடன், ஓடும் - ஓடித்திரிகின்ற, நின்போல்வார்க்கும் - உன்போலிகளுக்கும், மாபாதகம்போக்கும் - பெரும்பாவத்தை நீக்குதற்குரிய, இத்தலம் அல்லது - இந்தத்திருப்பதியல்லாமல், புகல் இல்லை - வேறுபுகலிடமில்லை, (ஆதலால்) மிசை-மேலே, பொங்கு புனல் - பெருகுகின்ற வெள்ளமானது, கற்பகக்காடு அலைத்து ஓடு - கற்பகச் சோலையையலைத்துக்கொண்டு விரைந்து செல்லுகின்ற, வையைத்துறைபடி - வையையாற்றுத்துறையில் மூழ்குகின்ற, மடப்பிடியொடு - இளம்பிடியுடன், ஆட - விளையாடும்பொருட்டு, அம்புலீவா-சந்திரனேவருவாயாக, ஆணிப்பொன் வில்லி-ஆடவா, எ-று.

தெய்வக்குழாம்பிழிந்து சுவைத்துமிழ்ந்த கோதென்றும், இருகோளி னுச்சிட்டமென்றும், கயரோகியென்றும், கண்கொண்டு

பார்க்கவுங்கடவதின்றெனப் புலியெடுத்திகழ, விட்புலத்தோடும்மூடு மீன்கணத்தோடுமோடு நின்போல்வார்க்குமா பாதகம்போக்குமித் தலமலது புகலில்லை, வையைத்துறைப்படி மடப்பிடியொடாட அம்புலீவாவெனமுடிக்க.

காண் - முன்னிலை யசையிடைச்சொல், அன்றி, யாம்சொல்வ தனைநீயுமாராய்ந்துபார் எனினுமாம். இவ்வாறுகூறியதனால் இத்த லத்தெய்துதியாயின், இக்கடற்புலியாணிகழற்பாடொழிந்து நினக் குள்ள கயரோகமு நீங்கப்பெறுதியென்றுராயிற்று. அழல் - அழல்போலும் எனினுமாம். இருமை - பெருமை, இதனை இருங் கோளென்றுமை செயயுளின்ப நோக்கியென்க. இவ்வாறன்றி இரு கோள் என்பதற்கு இரணடு கிரகங்களென்றினம் பற்றிக கூறுதலு முண்டு. தோடு கூண்டுப் போாவைக்காயிற்று.

கயரோகம் - நாளுக்குநாள் உடம்புதேய்தற்கேதுவாகிய ஓர நோய். கண்கொண்டு என்பதில்கொண்டு மூன்றுவதன் சொலலு ருபு, புகல் - தஞ்சம். (கூ)

கீற்றுமதி யெனநிலவு மீதாற்றுபரு
வத்திலொளி கிளர் நுதற செவ்வி வவ்விக்
கெண்டைத் தடங்கணெ ரொருவிட் டிறைஞசக்
கிடந்தது முடைநத முதம்வின்
றேற்றுபுது வெண்கலை யுடுத்துமுழு மதியென
வுதித்தவமை யத்து மமமை
யொண்முகத் தொழுகுதிரு வழகைக் கவர்ந்து
கொண்டோடினது நிற்க மற்றை
மாற்றவ ளொடுங்கேள்வர் மௌலியி னுறைந்தது
மறந்தனை யன்றழுத்த பொழுதே
மற்றிவள் பெருங்கருணை சொற்றிடக் கடவதோ
வண்மழுங்கும் விசும்பு புயம்மைத்

தாற்றுமுடி யரசுதவு மரசிளங் குமரியுட
னம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) கீற்றுமதியென - பிறைமதியாக, நிலவுதோற்று பருவத்தில் - நிலாத்தோன்றுஞ் சமயத்தில், ஒளிகிளர் - ஒளிமிகுந்த, நுதல்செவ்வி - நெற்றியழகை, வவ்வி-கவர்ந்து, கெண்டை-கெண்டைமீன்போன்ற, தடம்கண்ணார் - பெருங்கண்களையுடைய மாதர், எருஇட்டு இறைஞ்ச - எருவிட்டுவணங்க, கிடந்ததும் - இருந்த நின்னொழுக்கமும், உடைந்துவிண்டு - உடைந்து வெளிப்பட்டு, அமுதம் - அமிர்தத்தை, ஊற்றும் - கொட்டுகின்ற - புது - புதிதாகிய, வெண்கலை உடுத்து - வெள்ளிய கலைகளைத்தரித்து, முழுமதியென - பூர்ணசந்திரனென்று உலகத்தார் சொல்லும்படி, உதித்த அமயத்தும் - தோன்றியகாலத்திலும், அம்மை - இறைவியின், ஒள்முகத்து ஒழுகும் - ஒட்பமாகிய திருமுகத்தினொழுகுகின்ற, திரு அழகை - பேரழகை, கவர்ந்துகொண்டு ஓடினதும் - வவ்விக்கொண்டோடினதும் ஆகிய இவை, நிற்க - நிற்க, மாற்றவளொடும் - மாற்றவளாகிய கங்கையுடன், கேள்வர் - தன்மணாளரது, மௌலியில் உறைந்ததும் - சடைமுடியில் வசிப்பதையும், மறந்து - மறந்துவிட்டு, உன்னை அழைத்தபொழுதே - உன்னையழைத்தபோதே, இவள் - இவளது, பெருகருணை - பேரருளானது, சொற்றிடக்கடவதோ - சொல்லுந் தகுதியுடைத்தோ, மண்முழுதும் - நிலவுலக முழுதும், விம்மு - பருத்த, புயம்வைத்து - தோளிலேற்று, ஆற்றும் - தாங்குகின்ற, முடி அரசு - முடிமன்னனாகியமலயத்துவச பாண்டியன், உதவும் - ஈன்ற, அரசு இளங்குமரியுடன் - இளமையாகிய ராஜகுமாரியோடு, ஆட - விளையாடும்பொருட்டு, அம்புலீ வா - சந்திரனேவருவாயாக, ஆணி———, ஆடவா. எ - று.

கீற்றுமதியெனத் தோற்றுபருவத்தில் நுதற்செவ்விவவ்வித்த டங்கணார் எருவிட்டிறைஞ்சக்கிடந்ததும், முழுமதியெனவுதித்த வமயத்து முகத்தழகைக் கவர்ந்துகொண்டோடினதும் நிற்க, மாற்றவளொடுங்கேள்வர் மௌலியிலுறைந்ததும் மறந்து, அம்மை உன்னை யழைத்தபொழுதே, இவளது பெருங்கருணை யிருந்தவாறு சொல்லற்பாற்றன்று, மண்முழுதும் புயம்வைத்தாற்று முடியரசுதவு மரசிளங்குமரியுடனம்புலீயாடவாவெனமுடிக்க.

கீற்றுமதியென்றது அட்டமிநாட்பிறையை யெனக்கொள்க, நுதற்செவ்விவவ்வி யென்றதனன். எரு விட்டிறைஞ்சல் - கன்னிப்பெண்கள் தமக்குவிரைவில் மணமுடியவேண்டுமென்னும் விருப்பத்தால், எருப்பிட்டிட்டுப்பிறை மதியைவணங்குதல்.

இவ்வாறு செய்தலேயன்றி முன்று[illegible] துலைப்பயித்திட்டிறைஞ்சலுமுண்டு. மாற்றவள் - மாற்றாட்[illegible] வழக்கில் சக்களத்தியென்பர். "ஏற்றவளைவரி சிலைக்கை [illegible] முன், சேற்றவளை தன் கணவனருகிருப்பச்சினைக்கின்றிலள், [illegible] வளை நீருழக்குந்துறை கெழுநல்வளநாடா, மாற்றவளைக் கண்ட காலமழலா தோமனமென்றாள்" என்றும், "ஆதிபகவன்றன தாடற ணிப்பான் பணியவவ்விறைவன், பாதமிறைஞ்சுமதற்கு நெற்றிப் பகையுமல் குற்பகையுமாஞ், சீதமதியுமரவும் விழுஞ்செயற்கு முவகைசெயாமலலை, மாதுபணியுமதற்குமன மகிழுமுமையை வணங்கல் செய்வாம்" என்றும் "பலவிடங்களிற் கூறப்பட்டிருக்கிறபடியே, மாற்றவள்மீது பொறாமைபாராட்டலை மறந்திருப்பதும் அலவேனாடிணைக்கமுள்ள உன் குற்றங்களைப் பாராட்டாமையும் உன் பெரும்பாக்கியமேயன்றி வேறன்றென்றற்கு இவ்வாறு கூறினார். மண்முழுதும் வைத்தாற்றுதற்குரிமைதோன்ற விம்முபுயம் என்றார்.

விண்டலம் பொலியப் பொலிந்திடுதி
யேனுனது வெம்பணிப் பகைவிழுங்கி

விக்கிடக் கக்கிடத் தொக்கிடர்ப் படுதிவெயில்
விரியுஞ் சுடர்ப் பரிதியின்
மண்டலம் புக்கனை யிருத்தியெனி னொள்ளொளி
மழுங்கிட வழுங்கிடுதிபொன்
வளர்சடைக் காட்டெந்தை வைத்திடப்
பெறுதியேன் மாசுணஞ் சுற்ற வச்சம்
கொண்டுகண் டுஞ்சா திருப்பது மருப்பொங்கு
கோதையிவள் சிறடி கணின்
குடர்குழம் பிடவே குமைப்பதும் பெறுதியெங்
கோமாட்டி பாலடைந்தால்
அண்டபகி ரண்டமு மகண்டமும்
பெறுதியா லம்புலீ யாட வாவே
ஆசிப்பெ ... ல்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) விண்தலம் - விண்ணிடமானது, பொலிய - இருணீங்கும்வண்ணம், பொலிந்திடுதியேல் - விளங்குவையாயின், உனது - உனக்கு, வெம்பகை - கடும்பகையாகிய, பணி - இராகுவென்னும்பாம்பானது, விழுங்கி - உன்னைவிழுங்கி, விக்கிட - விக்குதலாலும், கக்கிட - கக்குதலாலும், தொக்கு - (அந்தப்பாம்பின் கழுத்தில்) உடல்நெருங்கி, இடர்படுதி - துன்பப்படுகின்றாய், வெயில்விரியும் - கிரணங்கள் விரிகின்ற, சுடர் - முச்சுடருள் ஒன்றாகிய, பரிதியின்மண்டலம் - சூரியமண்டலத்தில், புக்கனை இருத்தியெனின் - புகுந்திருப்பாயாயின், ஒள்ளொளி மழுங்கிட - உனது ஒட்பமாகிய ஒளிமழுங்குதலால், அழுங்கிடுதி - வருந்துகிறாய், எந்தை - எமது தந்தையாகிய சிவபெருமான், பொன்வளர்சடைக்காட்டு - பொன்னிற

மாய் நீண்டசடைக்காட்டில், வைத்திடப்பெறுதியேல் - அணியப்பெறுவையாயின், மாசுணம்-அங்குள்ள பாம்பானது, சுற்ற-உன்னை வளைந்துகொள்ள, அச்சம்கொண்டு - அச்சமடைந்து, கண்துஞ்சாதிருப்பதும் - கண்ணுறங்காதிருத்தலையும், மருபொங்கு-மணமிகுந்த, கோதை - கூந்தலையுடைய, இவள் - இவ்விறைவியின், சீறடிகள் - சிற்றடிகள், நின்குடர்குழம்பிட - உன்குடல்கலங்கும்படி, குமைப்பதும் - குழைவித்தலையும், பெறுதி - அடைகிறாய், எம்கோமாட்டிபால் அடைந்தால் - எம்மிறைவிபக்கலடைவையாயின், அண்டபகிரண்டமும் - அண்டபகிரண்டங்களையும், அகண்டமும்-மற்றெல்லாவற்றையும், பெறுதி - பெறுவாய், ஆல் - ஆதலால், அம்புலீ - சந்திரனே, ஆடவா, ஆணி———,ஆடவா. எ - று.

விண்டலம் மண்டலம் என்பன விண்ணாகிய இடம் மண்ணாகிய இடம் எனவிரிதலால் இருபெயரொட்டு. ஏல் - செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம். உனதுஎன்னும் ஆறனுருபு கண்ணென்க னுருபின் பகைப்பொருளது. பாம்புறையுமுரிமைதோன்றச் சடைக்காடென்றார். மாசுணம் - பெரும்பாம்பு. கண்டுஞ்சல் - ஒருசொல். குமைத்தல் உதைத்தலெனினுமாம், இது அடித்தொழிலாதலான். அண்டம்-இவ்வுலகம். பகிரண்டம்-இதற்குப்புறத்தேயுள்ள வுலகங்கள். அகண்டம் - அவற்றிலுள்ள எல்லாப்பொருள்களும். (ச)

எண்ணில்பல புவனப் பெருந்தட்டை யூடுருவி
 யிவள்பெரும் புகழ்நெடு நிலா
எங்கணு நிறைந்திடுவ தங்கதனின் மெள்ளநீ
 யெள்ளளவு மொண்டு கொண்டு
வெண்ணிலவு பொழிவது கிடைத்தனை மடுத்திவள்
 விழிக்கடை கொழித்த கருணை
வெள்ளந் திளைத்தாடு பெற்றியாற் றண்ணளி
 விளைப்பதும் பெற்றனை கொலாம்

மண்ணினிடுமொண் பைங்கூழ் வளர்ப்பது னிடத்தம்மை
வைத்திடுஞ் சத்தி யேகாண்
மற்றொரு சுதந்தர நினக்கென விலைக்கலை
மதிக்கடவு ளீயு முணர்வாய்
அண்ணலங் களியானை யரசர்கோ
மகளுட னம்புலீயாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) இவள் - இவ்விறைவியின், பெரும்புகழ் - பெரும் புகழாகிய, நெடுநிலா - பெருநிலாப்பெருக்கானது, எண் இல் - அள விடற்கரிய, பலபுவனம் - அநேகபுவனங்களாகிய, பெருந்தட்டை - பெரிய அடுக்குக்களை, ஊடுருவி - ஊடுருவிப்போய், எங்கணும் நிறைந்திடுவது-எவ்விடத்தும் நிறையாநின்றது, அங்கு - அவ்விடத் தில், நீ - நீசென்று,அதனில் - அந்நிலாப்பெருக்கில்,மெள்ள-மெ பய எள்ளளவுமொண்டுகொண்டு - எள்ளளவு முகந்துகொண்டு, வெ நிலவுபொழிவது - வெண்ணிலாப்பொழியுந் தொழிலை,கிடைத்திருவை பெற்றாய், இவள் - இவளது, விழிக்கடை - கடைக்கண்கள், உ[illegible] ழித்த - வெளிப்படுத்தின, கருணைவெள்ளம் - கருணைப்பெருவ[illegible] மடுத்துதிளைத்தாடுபெற்றியால் - புகுந்து குடைந்தாடின தலா யால், தண்ணளிவிளைப்பதும் - யாவரிடத்தும் தண்ணளிசெய்தலை யும், பெற்றனை - பெற்றாய், மண்ணில் - பூமியிலுள்ள, ஒள்-ஒட்ட மாகிய, பைங்கூழ் - பயிர்களை, வளர்ப்பது - நீ வளர்ப்பது, அம்மை - எம்பிறைவி, உன்னிடத்து வைத்திடும்-உன்பால்வைத்த, சத்தியே - அருட்சத்தியின் காரியமேயாம், நினக்கென்- உனக்கென்று, மற் றொரு சுதந்தரம் - வேறொரு சுதந்தரமானகாரியம், இலை - இல்லை கலைமதிகடவுள் - கலைகளையுடைய சந்திரனாகிய தேவனே, நீயு

உணர்வாய் - இத்தனை நீயுமறிவாய், அண்ணல் - பெருமையுள்ள, அம் - அழகாகிய, களியானை - மதக்களிப்புள்ள யானைப்படையை யுடைய, அரசர்கோமகளுடன் - பாண்டிவேந்தர்திருமகளோடு, அம்புலீ ஆடவா, ஆணி———,ஆடவா. எ - று.

நிறைந்திடுவது - நிகழ்காலங்குறித்துவந்தது. அங்கதுஎன்பதை ஒருசொல்லாகக்கொண்டு அது எனப்பொருளுரைத்தலு மொன்று. மொண்டுகொண்டென்றதற்கேற்பப் புகழ் நெடுநிலாவெள்ளமென் றுரைக்கப்பட்டது. கொல்கொலாமென ஈறுதிரிந்த அசைச்சொல். கொல் ஆம்என இரண்டாகப்பிரித்து இரண்டுமசைச்சொற்களெனி னுமிழுக்காது. இதனை, "இறைவா தடவரைத்தோட்கென்கொலாம் புகுந்தெய்தியதே" என்னுந்திருக்கோவையார் - உ0-ம் செய்யுளுரை யிற்காண்க. கலைமதியென்பதற்கு, கலைகளைமதித்துணர்ந்த என்றும், கலையறிவுள்ள மனத்தினையுடைய என்றும், கலைமானைத்தாங்கிய சந்திரன் என்றும் பொருளுரைத்துக்கொள்க. கடவுள் அண்மை விளி. கலையாராய்ச்சி அறிதற்கருவியாதலால் கலைமதிக்கடவுள் நீயு முணர்வாய் என்றார். நீயும்என்றவும்மை யாமேயன்றி யெனப்பொ ருள்படலால் இறந்ததுதழீஇயது. களியானையரசர் களியானைபோ லும் அரசர் எனினுமாம். (ரு)

முன்பும்ப ரரசுசெய் பெரும்பாவ முங்கோப
மூரிமாத் தொடர்சாபமும்
மும்மைத் தமிழ்ச் செழியன் வெப்பொடு
கொடுங்கூனு மோசித்த வித்தலத்தின்
றன்பெருந் தன்மையை யுணர்ந்திலைகொல்
சிவராச தானியாய்ச் சிவன்முத்தித்
தலமுமாய்த் துவாதசாந் தத்தலமு
மானதித் தலமித் தலத்தடைதியேல்

மன்பெருங்குரவற் பிழைத்தபா வமுமற்றை
மாமடிக ளிடுசா பமும்
வளரிளம் பருவத்து நரைதிரையு முதிர்கூனு
மாற்றிடப் பெறுதி கண்டாய்
அன்பரென் புருகக் கசிந்திடு பசுந்தேனொ
டம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) முன்பு-முற்காலத்தில், உம்பர்அரசு-தேவராஜனாகிய இந்திரன், செய் - செய்த, பெரும்பாவமும்-மகாபாபத்தையும், கோபம்-கோவத்தையும், மூரி-வலியையுமுடைய, மா-யானையை, தொடர் - தொடர்ந்த, சாபமும் - சாபத்தையும், மும்மைத்தமிழ் - முத்தமிழையுமுடைய, செழியன் - பாண்டியனது, வெப்பொடு - சுரத்துடன், கொடுங்கூனும் - மிக்ககூனலையும், மோசித்த - விமோசனஞ்செய்த, இத்தலத்தின் - இந்தத்திருப்பதியின், பெருந்தன்மையை-பெருமைத்தன்மையை, உணர்ந்திலைகொல் - அறிந்தாயில்லையோ, இத்தலம் - இந்தத்திருப்பதியானது, சிவராசதானியாய் - சிவராஜதானியாகி, சீவன்முத்தித்தலமும் ஆய் - சீவன்முத்திஸ்தலமுமாகி, துவாதசாந்தத்தலமும் ஆனது - துவாதசாந்தத்தலமுமாயிராநின்றது, இத்தலத்து அடைதியேல்-இந்தத்திருப்பதியிற் சேர்வாயாயின், மன்பெருங்குரவன் - நிலைபெற்ற பெருமையையுடைய ஆசாரியனுக்கு, பிழைதத - குற்றஞ்செய்த, பாவமும் - பாவத்தையும், மற்றை-மேலும், மாமடிகள் - மாமனாகிய தக்கன், இடு - இட்ட, சாபமும் - சாபத்தையும், வளர் - வளர்கின்ற, இளம்பருவத்து - இளமைப் பருவத்தில் (உனக்கு நேரிட்டிருக்கிற), நரை திரையும் - நரைதிரைகளையும், முதிர்கூனும் - மிக்ககூனையும், மாற்றிடப்பெறுதி - நீக்கப்

பெறுவாய், அன்பர் - மெய்யன்பருடைய, என்பு - என்பும், உருக - உருகும்வண்ணம், கசிந்திடு - ஊறுகின்ற, பசுந்தேனொடு - பசுந்தேன்போல்பவளாகிய எம்மிறைவியோடு, அம்புலீ யாடவா, அணி———,ஆடவா. எ - று.

உம்பரரசுசெய்பெரும்பாவம் - விருத்திரனைக்கொன்ற பாவம், அன்றி, கௌதமபத்திநியை விரும்பின பாவம். மூரிமாதொடர் சாபம் - துருவாசரிட்ட சாபம். மன்பெரு - மிக்க பெருமையமைந்த எனினுமாம். குரவன் என்றது பிருகற்பதியை. பிழைத்தபாவம் - குருதற்பகம், அதாவது குருபத்நீகமநம். மாமடிகள் - மாமனாகிய அடிகள், இவன் தக்கன். வலிதாகிய என்புருகுதல் வியப்டாமென் பார் அன்பரென்புருக என்றார். இதனை "கூடம்பலங்கைத்தலத்தன்ப ரென்பூடுருகக்குனிக்கும்" என்னுந் திருக்கோவையார்-கக-ம் செய்யுளானுமுணர்க. இந்தத்திருப்பதி, முற்காலத்தில் இந்திரன் பாபத்தையும் வெள்ளையானையின் சாபத்தையும் பாண்டியன் சுரம்கூன் என்பவற்றையும் விமோசநம் செய்ததாதலால் இதை நீயுமடைந்தால், உன்பாபம், சாபம், நரை திரை கூன் என்பவைகள் நீங்கப் பெறுவாயென்பது கருத்து. (சு)

தும்பஞ் சுமந்தமத வெள்ளநீர் கொட்டுங்
கொடுங்களி றிடும்போர் வையான்
குடிலகோ டரத் திருந்துகொண் டநலார்
கொய்தளிர்க் கைவருடவுஞ்
செம்பஞ் சுறுத்தவும் பதைபதைத் தாரழற்
சிகையெனக் கொப்பு ளிக்குஞ்
சீறடிகள் கன்றிச் சிவந்திடச் செய்வதுந்
திருவுளத் தடையாது பொற்
றம்பஞ் சுமந்தீன்ற மாணிட விலங்கின்
றனிப்புதல்வ னுக்கு வட்டத்

தண்குடை நிழற்றுநினை வம்மென வழைத்தனள்
டழைத்திடு கழைக்கரும்பொன்
றம்பஞ் சுடன்கொண்ட மகரக் கொடிக்
கொடியொ டம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் வில்விபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) கும்பம்சுமந்த - கும்பத்தலத்தையேந்திய, மதநீர் வெள்ளம் - மதநீர்ப்பெருக்கை, கொட்டும் - கொட்டுகின்ற, கொடு களிறு - கொடுமையாகிய களிற்றினால், இடும் - தரப்பட்ட, போர் வையான் - போர்வையையுடையவனாகிய சிவபிரானது, குடிலம் கோடீரத்து இருந்துகொண்டு - வளைத்து வட்டவடிவாய்க் கட்டப் பட்டிருக்கிற சடாமகுடத்தில் தங்கியிருந்து, அந்நலார் - தெய்வமா தர்கள், கொய் - பறிக்கப்பட்ட, தளிர் - தளிர்போன்ற, கை - கைக ளால், வருடவும் - வருடுதலாலும், செம்பஞ்சு உறுத்தவும் - செம் பஞ்சுஉறுத்துதலாலும், பதைபதைத்து - துடிதுடித்து, ஆர் - நிறை ந்த, அழல்சிகையென - நெருப்புக்கொழுந்துபோல, கொப்புளிக் கும் - கொப்புளங்கொள்ளுகின்ற, சீறடிகள் - தன்சிற்றடிகள், கன் றிச்சிவந்திடச்செய்ததும் - கன்றிச்சிவக்கச்செய்ததையும், திருவு ளத்து அடையாது - தன்திருவுளத்திற்கொள்ளாமல், பொன்தம்பம் சுமந்துஈன்ற - பொற்கம்பம் சுமந்துபெற்ற, மானிடவிலங்கின் - நரசிங்கத்தின், தனிபுதல்வனுக்கு - ஒப்பற்ற புதல்வனாகிய மன்மத னுக்கு, வட்டம் - வட்டவுருவாகிய, தண்குடைநிழற்றும்-தண்ணிய குடைபோல நிழல்செய்கிற, நின்னை - உன்னை, வம்மென அழைத் தனள் - வருகவென்றழைத்தாள், (ஆதலால்) தழைத்திடு - செழித்த கழைக்கரும்புஒன்று - ஒருகரும்புவில்லை, அம்பு அஞ்சுடன் - பஞ்ச பாணங்களோடு, கொண்ட - ஏந்தின, மகரக்கொடி - மீனக்கொடி

னையுடைய, கொடியொடு - பூங்கொடிபோல்பவளாகிய எம்மையுறவ யுடன், அம்புலீ-சந்திரனே, ஆடவா, ஆணி————, ஆடவா. எ - று.

கும்பம் - குடம், இது குடம்போலுருவமைந்த யானைமத்தகத்தையுணர்த்தலால் உவமையாகுபெயர். இறைவன் யானையிருக்கக் கயாசுரன் தானே வலியவந்து தந்தமையான், களிறிடும் போர்வையான் என்றும், இவ்வசுரன் தானேசென்றுமடிதற்குக் காரணம்மதச் செருக்கென்பார்; கும்பஞ்சுமந்த மதவெள்ளநீர் கொட்டுங்கோடுங் களிறென்றுங்கூறினர். குடிலகோடீரத்திருத்தலாவது இறைவன் சடாபாரத்திலோர் பூமாலைபோல் வளைத்துக்கட்டப்பட்டிருத்தல். சேறடிகள் கன்றிச்சிவந்திடச்செய்தலாவது இறைவன் இறைவியூடறணிக்கப்புகுங்கா லூடறணியாளாய்ப் பாததாடகஞ்செய்யுழி, அச்சீர்பாதத்துப்பட்டுக் கன்றிச்சிவப்பித்தல். மன்மதனுக்குக்குடை சந்திரனென்றல், "மானிடவிலங்கின்றனிப்புதல்வனுக்கு வட்டத் தண்குடை நிழற்றுவினை" என்றார். உனக்கும் எம்மிறைவிக்குமொற் றுமையுண்டென்பார், கழைக்கரும்பொன்றம் பஞ்சுடன்கொண்ட மகரக்கொடிக்கொடியொடு அம்புலீயாடவாவென்றார், நீவாராயாயின், உனக்குப்போலவே மகரக்கொடி, பஞ்சபாணம், கரும்புவில் முதலியன எம்மிறைவிக்குமுண்மையான் அவைகொண்டுன்னைப் பொருது வெல்லுவளென்பதும், இறைவற்குப் பகைஞனான மன்மதனுக்கு நீ குடைநிழற்றுகின்றனையென்று உன்னைச் சினவாது அழைத்தமையான் இவளது பெருங்கருணை சொல்லவல்லுந ரில்லையென்பதும் இச்செய்யுளாற் கூறப்பட்டவாறாயிற்று. (எ)

துளிதூங்கு தெள்ளமுத வெள்ளருவி பொழியுநின்
றிருண்மரபு தமிழுய வந்து
தென்னவன் கௌரியர் குலக்கொழுந் தைக்கன்னி
யன்னவிழியு மனமு நின்று

களிதூங்க வளவளாய் வாழாம லுண்ணமுதுங்
　　கலையொடு மிழந்து வெறுமட்
கலத்திடு புதுக்கூழினுக்கிரவு பூண்டொரு
　　களங்கம்வைத் தாயிதுவலால்
ஒளிதூங்கு தெளிவிசும் பினினின்னொ டொத்தவ
　　னொருத்தன் சுரத்தின் வாரி
உண்டொதுக் கியபிச்சி னள்ளிருளி லள்ளியுண்
　　டோடுகின் றுயென் செய்தாய்
அளிதூங்கு ஞிமிறெழுந் தார்க்குங் குழற்றிருவொ
　　டம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
　　னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) துளிதூங்கு - துளித்தலைக்கொண்ட, தெள் - தெளிவாகிய, அமுதம் - அமிர்தத்தின், வெள்அருவி - வெண்மையாகிய அருவியை, பொழியும் - சொரிகின்ற, நின் - உனது, தொல்மரபு - பழமையாகிய மரபு, தழைய - செழிக்க, வந்துதோன்றிடும் - வந்தவதரித்தருளின, கவுரியர்குலக்கொழுந்தை - கவுரியர்குலமுதல்வியை, கண்டு - சேவித்து, துணைவிழியும் - இருகண்ணும், மனமும் - மனதும், நின்றுகளிதூங்க - நின்றுமிகுகளிப்படைய, அளவளாய் - கலந்து, வாழாமல் - வாழ்ந்திடாமல், உண் அமுது - உண்டற்குரிய அமிழ்தத்தை, கலையொடும் இழந்து - உன்கலைகளோடுமிழந்து, வெறுமட்கலத்து இடுபுதுக்கூழினுக்கு - வெறுமையான மட்கலத்திட்ட புதுக்கூழுக்காக, இரவுபூண்டு - யாசித்தலைமேற்கொண்டு, ஒருகளங்கம்வைத்தாய் - ஒருகளங்கத்தைநிலைபெறுத்தினாய், இது அல்லால் - இதுவேயுமன்றி, ஒளிதூங்கு - ஒளியுடைப்பொருள்கள் தங்குகின்ற, தெளிவிசும்பினில் - தெளிவாகிய ஆகாயத்தில், நின்

னொடொத்தவன் ஒருத்தன் - உனக்குச்சமானனான ஒருவன், கரத்தின்வாரி - கையாலள்ளி, உண்டு - புசித்து, ஒதுக்கிய - நீக்கின, மிச்சில் - சேடத்தை, நள் இருளில்-நடுயாமத்தில், அள்ளிஉண்டு - வாரியுண்டு. ஓடுகின்றாய் - ஓடாநின்றாய், என்செய்தாய் - என்ன காரியஞ்செய்தாய், அளிதூங்கு-கருணைதங்கப்பெற்ற,ஞிமிறெழுந்து ஆர்க்கும் - வண்டுகள் எழுந்தாரவாரித்தற்கிடனாகிய, குழல் - கூந்தலையுடைய, திருவொடு - எம்மிறைவியொடு, அம்புலீஆடவா, ஆணிப்பொன்——ஆடவா. எ - று.

சந்திரன் அமுதகிரணனாதலாலும், பாண்டியர் இவன்மரபினுதித்தோராதலாலும், இறைவி அப்பாண்டிவேந்தரு ளொருவனாகிய மலயத்துவசபாண்டியனுக்குத் திருமகளாய்த் தோன்றினமையாலும் நளிதூங்குநெள்ளமுதவெள்ளருவிபொழியு நின்னொன் மரபுதழையவந்து தோன்றிடுங் கௌரியர் குலக்கொழுந்தென்றார். விழுப்புமனமுங்களிதூங்கலாவது விழிகளாலேநோக்கியும் மனத்தானினைத்தும் இன்புறுதல். கண்டு என்பதனை மனதுக்குங்கூட்டி நினைத்தெனப்பொருள்கொள்க. அளவளாய் - கூடி. அமுதுகலையொடுமிழந்து என்றது அந்நவஸ்திரங்களை யிழந்து என்றபடி. புதுக்கூழ்-புதியவுணவு. மட்கலம் - மட்கலசம். மட்கலத்திடு புதுக்கூழென்றது; சிறுமியர் தூதையிட்டட்டுப்படைக்குஞ் சிறுசோற்றை. இதனை நிலாச்சோறு என்ப. இரவு - இரத்தல், இராத்திரி. களங்கம்-கறை, பழி. நின்னொடொத்தவனொருத்தன் என்றது - சூரியனை. கரத்தின் என்பதில் இன் ஐந்தாவதுமூன்றாவதன் கருவிப்பொருளில் வந்தது. மிச்சினள்ளிருள் - மிச்சிலாகிய நள்ளிருள் எனினுமாம். ஓடுகின்றாய் என்றார் ஓரிடத்து நில்லாமையான். அளிதூங்குதிருவொடு எனவியையும். இவ்வாறன்றி, அளிதூங்குஞிமிறுஎன்பதற்கு, தூங்குகிறகருவண்டுகளும் பொன்வண்டுகளும் என்றும், எழுந்து என்பதற்கு விழித்தெழுந்து, என்றும், கூறினுமாம். திரு இங்குக் கட்டழகி என்னும் பொருளது. ஒளி - நாண்மீன்முதலாயின. (௩)

மழைக்கொந் தளக்கோதை வம்மினென் றளவினீ
வந்திலை யெனக்க டுகலும்
வாண்முகச் செவ்விக் குடைந் தொதுங்கினவ
னெதிர் வரவொல் கியோப ணிகள்கோ
ளிழைக்குங்கொல் பின்றொடர்ந் தெனவஞ்சி யோதாழ்த்
திருந்தனன் போலு மெனயா
மித்துணையு மொருவாறு தப்புவித் தோம்வெகுளி
ளினியொரு பிழைப் பில்லைகாண்
டழைக்குந் துகிற்கொடி முகிற்கொடி திளைத்துமேற்
றலம்வளர் நகிற்கொடி கலைத்
தாழ்குழலு நீவிருதல் வெயர்வுக் குடைத்தம்மை
சமயமிது வென்ற லுவலிட்
டழைக்குந் தடம்புரிசை மதுரைத் துரைப்பெணுட
னம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் வில்லிபுனார் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) மழை - கருமுகில்போன்ற, கொந்தளம் - மயிர் குழற்சியுள்ள, கோதை - கூந்தலையுடைய எம்மிறைவி, வம்மின் என்றளவில் - வாருமென்றளவில், நீ வந்திலையென - நீ வந்திலை யென்று, கடுகலும் - (எம்மிறைவி) கோபித்தலும், வாண்முகச்செவ் விக்கு உடைந்து ஒதுங்கினவன் - ஒளியையுடைய உன் திருமுகத் தழகுக்குத் தோற்று ஒதுங்கிப்போனவன், எதிர்வர வொல்கியோ உன்னெதிரேவர நடுங்கியோ, பணிகள் - சர்ப்பங்கள், பின்தொடர்ந்து - பின்னே தொடர்ந்து, கோள் இழைக்குங் கொல் என அஞ்சி யோ - துன்பஞ்செய்யுமென்றஞ்சியோ, தாழ்த்திருந்தனன்போலும்

ாமதித்திருந்தான்போலும், என - என்று, இத்துணையும் - இவ்வள
ம், ஒருவாறு - ஒருவிதமாக, யாம் தப்புவித்தோம் - யாம் உன்னைப்
ழைப்பித்தோம், இனி வெகுளின் - இனிக் கோவிப்பாளாயின்.
ரு பிழைப்பு இல்லை - ஒரு தப்புவிக்கும் வழியில்லை, தழைக்கும் -
ழிக்கின்ற, துகில் கொடி - கொடியாடைகள், முகில் கொடி
ாத்து - மேகத்து மின்கொடிகளைத் திரையச்செய்து, மேல்
ம் வளர் - மேலுலகத்தில் வளர்கின்ற, நகில் கொடிகளை-கொங்
ககளைத்தாங்கிய கொடிபோலு மாதர்களது, தாழ் குழலும் நீவி -
ண்ட கூந்தலையும் கோதி, நுதல் வெயர்வும் துடைத்து - நெற்றி
ன வேர்வையையும் துடைத்து, அம்மை சமயம் இது என்று -
றைவியைச் சேவித்தற்குரிய சமயமிதுவென்று, அலுவலிட்டு
ழைக்கும் - சத்தித்தழைத்தற்கிடமாகிய, தடம் புரிசை - பெரிய
தில்சூழ்ந்த, மதுரைத்துறைப்பெண்ணுடன் - மதுரைக் காவலனு
மலயத்துவசபாண்டியன்றிருமகளோடு, அம்புலீயாடவா. எ-று

மழை கருமுகிலை யுணர்த்திற்றுக் கோதைக்குவமித்தலான். கடு
வினைதலெனினுமாம். ஒல்கல் அஞ்சுதலுமாம். பணிகள் இராகு
துக்கள். பிழைப்பு காரியவாகுபெயர். முகிற்கொடி - கொடிகள்
ாற் படர்ந்திருக்கிற முகிற்கூட்டம் எனினுமாம். திரைத்தல் ஒரு
கத்தொதுக்குதல். நகிற்கொடிகள் உவமையாகுபெயர். (கூ)

டகத் தெழுதாத வேதச் சிரத்தர
சிருக்கு மிளஞ் சிறடிகணின்
ிதயத் தடத்தும் பொலிந்ததவர் திருவுளத்
தெண்மணியன் றேக படமா
ட்கத் தைந்தொடி னடிக்கும் பிரான்
றெய்வ நதியொடு முடித்தல் பெற்றாய்
ுகைவிவ டிருவுள மகிழ்ச்சிபெறி லீதுபோலொர்
நற்றவப் பேறில்லை காண்

மாடகக் கடைதிரித் தின்னரம் பார்த்துகிர்
வடிம்புதை வருமங்கலார்
மகரயாழ் மழலைக்கு மரவங்க ணுண்டுகில்
வழங்கக் கொழுங்கோங் குதூங்
காடகப் பொற்கிழி யவிழ்க்குமது ரைத்திரு
வொடம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுட
னம்புலீ யாட வாவே.

(இ - ள்.) எடகத்தெழுதாத - ஏட்டிலெழுதப்படாத, வேதச் சிரத்து - வேதங்களின் உச்சியில், அரசு இருக்கும் - அரசு வீற்றிருக்கின்ற, இவள், சீறடிகள் - இவள் சிற்றடிகளாகிய தாமரைகள் ன் இதயத்தடத்தும் - உனது இருதயமாகிய தடத்தின்கண்ணும் பொலிந்தது - விளங்குதலை, அவர் திருவுளத்து எண்ணி அன்றே அவ்விறைவர் திருவுளத்தடைத்தல்லவா, மா - பெரிய, கபடநா கத்து - கபடநாடகத்தால், ஐந்தொழில் நடிக்கும் - பஞ்சகிருத்திய ங்களைச்செய்கின்ற, பிரான் - உபகாரசீலனை எம்பெருமானை தெய்வநதியொடு - சுரநதியுடன், முடித்தல் பெற்றாய் - முடித்து கொள்ளுதலைக் கிடைக்கப்பெற்றாய், நங்கை - குணபூர்ணையாக இவள் - இவளது, திருவுள்ளமகிழ்ச்சிபெறில் - திருவுளமகிழ்ச் சியைப் பெறுவையாயின், இதுபோல் - இதனை நிகர்த்த, ஓர் நற்ற பேறு - ஒரு நல்ல தவப்பயன், இல்லை - வேறொன்றுமில்லை,(ஆகை யால்) மாடகம் - முறுக்காணிகளின், கடை திரித்து - கடையை, திருகி, இன் நரம்பு ஆர்த்து - இன்னோசையுள்ள நரம்புகளை ஒலி பித்து, உகிர் வடிம்பு - நகவடிம்பினால், தை வரும் - வருகின்ற அங்கலார் - மாதர்களுடைய, மகரயாழ் மழலைக்கு - மகரயாழோசை யாகிய மழலைமொழிக்கு, மரவங்கள்-குங்குமமரங்கள், நுண் து

ங்க - நுண்ணிய ஆடையைக்கொடுக்க, கொழுங்கோங்கு-செழு யாகிய கோங்கமரங்கள், தூங்கு - தம்மிடத்துத் தொங்குகின்ற, கம் - சுவர்ணமயமாகிய, பொற்கிழி-பொற்பொதியை, அவிழ்க் - விரிக்கின்ற, மதுரை - மதுரைப்பதியிலுள்ள, திருவொடு - ல்வியுடன், அம்புலீயாடவா. எ - று.

வேதம் எழுதாக்கிளவியாதலால் ஏடகத்தெழுதாத வேதர் என் ர். வேதச்சிரம் - வேதாந்தம். இதயத்தடம் என்றதனால் சிறடி ர் கமலமாக்கி யுரைக்கப்பட்டது. இவ்வாறன்றி இதயதாமரையில் டித்தாமரைகள் பொலிந்ததெனினுமாம். ஐந்தொழில்களாவன - ருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன. கப ம் - இறைவியின் திருவடியைச் சிரங்கொளும் விருப்பம். இது றரறியாமைப்பொருட்டு மதியொடு தாங்குதலால் இதனைக் கபட மன்றார். நங்கை - மங்களகுண பரிபூர்ணையென்னும் பொருடருவ தார் பெண்பாற்பெயர். நம்பியென்பது இதனாண்பாற்பெயர். மர ங்கணுண் டுகில் வழங்கலாவது - செம்பட்டாடையைநிகர்த் ரியை வழங்கல். கோங்கு பொற்கிழியவிழ்த்தலாவது - பொன் ற வரும்பை மலர்த்தல். மகரயாழ் மழலைக்குவந்ததவு பரிசி ரவையென்க. இப்பருவத்தில் சதுருபாயங்களுங் கூறப்படுதல் மர பன்ப; அவை - சாமம், தானம், பேதம், தண்டம் என்பன. இவை றையே சமாதானத்தோடாயினும், பொருள்கொடுத்தாயினு வேறு பிரித்தாயினும், தண்டித்தாயினும் காரியங்கோடல். ச முதன் மூன்று செய்யுளால் சாமமும், இரண்டாவது மூன் புளால் தானமும், அதற்குமே லிரண்டு செய்யுளால் பே பதாவது பத்தாவது செய்யுட்களால் தண்டமும் டய்த்துணர்க.

---

## அ - வது. அம்மானைப்பருவம்.



கரைக்குங் கடாமிரு கவுட்குட முடைந்தூற்று
களிறுபெறு வயிறு தூர்ப்பக்
கவளந் திரட்டிக் கொடுப்பதென வுஞ்சூழ்ந்தொர்
கலைமதிக் கலச வமுதக்
கிரைக்கும் பெருந்தேவர் புன்கண் டுடைத்திட
கொடுத்தமுத கலசம் வெவ்வே
றேந்திடுவ தெனவுமுழு முத்திட் டிழைத்திட்ட
வெயிற்பந்தர் நிலா வென்னவும்
விரைக்குந் தளிர்க்கைக் கொழுந்தா மரைத்துஞ்சி
மீதெழுந் தார்த்த பிள்ளை
வெள்ளோதி மத்திரளி தெனவுங் கரும்பாறை
மீமிசைச் செஞ்சாந் துவைத்
துரைக்குந் திரைக்கைவெள் ளருவியை யைத்துறைவி
யம்மானை யாடி யருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடி யருளே.

(இ - ள்) இருகவுள்குடம் - இரண்டுகவுட்குடங்களும், உ
ரு - சிதைந்து, கரைக்கும் - சிந்தூரம்முதலியவற்றைக் கரைக்
ும் - மதநீரை, ஊற்று - கொட்டுகின்ற, களிறு - ஐரா
யானையின், பெருவயிறுதூர்ப்ப - பெரிதாகிய வயிற்
ம் - கவளத்தை, திரட்டி - உருட்டி, கொடுப்பதெ
ாலவும், ஓர்-ஒ



அம்மானைப்பர்வம் குழந்தை தோழிகளுடன் ஏழாங்காயாடுதல்.

- பூர்ணசந்திரனாகிய, கலசம் - கலசத்திலுள்ள, அமுதுக்கு-
மிர்தத்தின்பொருட்டு, சூழ்ந்து - வளைந்
மையாநின்ற, பெருந்தேவர் - பெரியதேவ
ன்பத்தை, துடைத்திட - நீக்கும்பொரு
லசம் எடுத்து - தனித்தனியே அமிர்த
டுவது எனவும் - கொடுப்பதுபோலவும்,
. - முழுமுத்துக்களாற் செய்யப்பட்
ந்தர்நிரை என்னவும் - பந்தலின் வரிசை
ணக்கின்ற, தளிர்கை - தளிர்போலுங்
ஞ்சி - செழுந்தாமரை மலரில் உறங்கி, மீது எழுந்து ஆர்த்த-மே
ல யெழுந்து ஆரவாரித்த, பிள்ளை - இளமையாகிய, வெள்ஓதிமத்
ரள் இது என்னவும் - வெண்மையாகிய அன்னத்தொகுதியிதுவெ
று சொல்லும்படியாகவும், கரும்பாறைமீமிசை - கரியபாறைக
ின்மீது, செஞ்சாந்துவைத்து அரைக்கும் - செஞ்சந்தனக்கட்டை
யவைத்தரைக்கின்ற, திரைகை - அலையாகிய கையினையும், வெள்
ருவி-வெண்மையாகிய அருவிகளையுமுடைய, வையைத்துறைவி-
வையைத்துறையையுடையவளே, அம்மானையாடியருள்-அம்மானை
டியருள்க, ஒருவர் - ஒப்பற்றவராகிய சிவபெருமானாரது, ஆகம்
லந்து - திருமேனியிற்கூடி, பாகம்பகிர்ந்த - ஒருபாகம்பகிர்ந்துகொ
ண்ட, பெண் - பெண்ணரசே, அம்மானையாடியருள் - அம்மானை
ாடியருள்க. எ - று.

கரும்பாறைமீமிசைச் செஞ்சா... த்தரைக்குந் திரைக்கை
வெள்ளருவிவையைத்துறைவி, ஆகங்கலந்தொருவர் பாகம்பகிர்ந்த
ண், கவளந்திரட்டிக்கொடுப்பதெனவும், அமுதகலசம் வெவ்வே
டுவதெனவும், எறிபந்தர்நிரையென்னவும், வெள்ளோதிமத்திர
தெனவும் அம்மானையாடியருள் எனமுடிக்க.

கவுட்குடமுடைந்து கடாலூற்றுங்களிறு எனவியையும். அம்மானையாடுந்தோறும் அக்காய்கள் மேனோக்கிச்செல்லுதலால் களிறு என்றது ஈண்டைராவதத்தை யுணர்த்திற்று. ஓர்மதிகலைமதியெனக் கூட்டுக. முழுமுத்துதொளைக்காதமுத்து. விளைக்கும் விளையென்னும் பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம். கவளம் என்றும், அமுத கலசம் என்றும், முத்துப்பந்தர்என்றும், வெள்ளோதிமத்திரள்என்றும் கூறியதனால், இது முத்தினானியன்ற அம்மனையென்பதுபெறப்பட்டது. கரும்பாறை, செஞ்சாந்து, என்றது முரண்தொடை. மதிக் கலசம்போலுங் கலசமெனினுமாம். துறைவிபெண் என்பன அண்மைவிளிகள். (௪)

திங்கட் கொழுந்தைக் கொழுந்துபடு படர்சடைச்
செருகுதிரு மணவா ளன்மேற்
செழுமணப் பந்தரி லெடுத்தெறியு மமுதவெண்
டிரளையிற் புரளு மறுகாற்
பைங்கட் சுரும்பென விசும்பிற் படர்ந்தெழும்
பனிமதி மிசைத்தா விடும்
பருவமட மானனைவெ னம்மனைநி னம்மனைப்
படைவிழிக் கயல்பாய்ந் தெழ
வெங்கட் கடுங்கொலைய வேழக்கு ழாமெனு
மேகக் குழாத்தை முட்டி
விளையாடு மழகளிறு கடைவாய் குதட்டுமுகை
விண்டவம் பைந்து கோத்த
அங்கட் கரும்பேந்து மயிலேக வல்லிதிரு
வம்மானை யாடி யருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடி யருளே.

(இ - ள்.) திங்கள்கொழுந்தை-பிறைச்சந்திரனை, கொழுந்து படு - கொழுந்துவிட்டோடுகின்ற, படர்சடை - விரிந்தசடாபாரத்தின்கண், செருகு - முடித்த, திருமணவாளன்மேல் - அழகியமணவாளன்மீது, செழுமணப்பந்தரில் - செழுமையாகியமணப்பந்தலில், எடுத்தெறியும் - நீயெடுத்தெறிந்த, வெள் - வெண்மையாகிய, அமுதம் திரளையின் - அமுதத்திரளைபோல், புரளும் - புரளாநின்ற, அறுகால் - ஆறுகால்களையும், பைகண - பசியகண்களையுமுடைய, சுரும்பு என - வண்டுபோலவும், விசும்பில் - ஆகாயத்தில், படர்ந்து எழு - பரந்தெழுகின்ற, பனிமதிமிசை - குளிர்ச்சியையுடைய சந்திரன்மீது, தாவிடும் - பாயாநின்ற, பருவம்மடம்மான்என இளம்பருவத்தையுடைய மான்போலவும், என் அம்மனை - என்தாயாகிய, நின் - உன்னுடைய, அம்மனைப்படை - அம்மானைத்திரளின், அயல் - பக்கத்தில், விழி - உன்கருங்கண்கள், பாய்ந்தெழ - தாவியெழாநிற்க, வெம்கண் - குரூரமாகிய கண்களோடு, கடுங்கொலைய-கடுங்கொலையையுமுடைய, வேழக்குழாம் இது என - யானைத்திரளிது வென்றுகருதி, மேகக்குழாத்தைமுட்டி - மேகத்தொகுதியைமுட்டி, விளையாடும் - விளையாடுகின்ற, மழகளிறு - இளங்களிறுகள், கடைவாய்குதட்ட - கடைவாயைமெல்ல, முகைவிண்ட - அரும்பவிழ்ந்த, அம்புஐந்துகோத்த - ஐந்தாகிய புஷ்பபாணங்களைத்தொடுத்த, அம்கண் கரும்பு - அழகியகணுக்களையுடைய கரும்புவில்லை, ஏந்தும் - ஏந்துகின்ற, அபிடேகவல்லி, திருவம்மானையாடியருள்; ஆகம்——அம்மானையாடியருள். எ - று.

மழகளிறுகடைவாய் குதட்டமுகைவிண்ட வம்பைந்துகோத்த வங்கட்கரும்பேந்து மபிடேகவல்லி, அமுதவெண்டிரளையிற்புரளு மறுகாற்பைங்கட்சுரும்பென, பனிமதிமிசைத்தாவிடும் பருவமடமானென, நின் அம்மனைத்திரளுக் கயலில்நின்விழிபாய்ந்தெழ, அம்மானையாடியருள் எனமுடிக்க.

'கொழுந்துபடுதல் இளைத்தல், செழித்தலெனினுமாம். அமுதத்திரளை - சோற்றுத்திரளை. மழகளிறு ஈண்டு மூத்தபிள்ளையாரைக் குறித்தது. இக்களிறு கடைவாய் குதட்டுதலெற்றுக்கெனின், அங்கட்கரும்பையை யம்போடு முறித்துண்ணற்கென்க. அம்மனைக்காய் மேனோக்கிச் செல்லுந்தோறும் இறைவியின் திருக்கண்களுந் தொடர்ந்து செல்லுதல், அமுதத்திரளையிற் சுரும்பு புரளுதலும், பனிமதி மிசை மடமான்றாவுதலும் போறலின், அமுதவெண்டிரளை யிற புரளு மறுகாற் பைங்கட் சுரும்பென, பனிமதி மிசைத்தாவிடு பருவமடமானென நின்னம்மனைப்படைவிழிக் கயல்பாய்ந்தெழ என்றார். இங்ஙனங்கூறலால் இச்செய்யுளிற் கூறப்பட்டதும் முத்திறனியன்றவம்மனையென்றுணர்க. (௨)

கள்ளூறு கஞ்சக் கரத்தூறு சேயொளி
கலப்பச் சிவப்பூறியும்
கருணைப் பெருக்கூற வமுதூறு பார்வைக்
கடைக்கட் கறுப்பூறியும்
நள்ளூறு மறுவூற கற்றமுத மதியில்வெண்
ணகையூறு நிலவூறியும்
பொற்றாள வம்மனையொர் முக்குணத் திணைமூன்று
நற்குணங் கதுவல் காட்ட
உள்ளூறு களிதுளும் பக்குரவ ரிருவிரு
முற்றிடு தவாத சாதகத்
தொருபெரு வெளிக்கே விழித்துறங் குந்தொண்ட
ருழுவலன் பென்புருகநெக்
கள்ளூற வுள்ளே கசிந்தூறு பைந்தேற
லம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடியருளே.

(இ - ள்.) உள் ஊறு - மனத்திற் சுரக்கின்ற, களி துளும்ப - மகிழ்ச்சி பொங்க, குரவர் இருவீரும் - குரவராகிய நீவிரிருவீரும், உற்றிடு - பொருந்துகின்ற, துவாதசாந்தத்து - துவாதசாந்தமாகிய, ஒரு - ஒப்பற்ற, பெருவெளிக்கே - பெருவெளியின்கண்ணே, விழித்து உறங்கும் - விழியாநின்றே யுறங்குகின்ற, தொண்டர் - தொழும்பர்கள், உழுவல் அன்பு - தமது உழுவலன்பினால், என்பு உருக - என்பு உருகும்படி, நெக்கு - மனநெகிழ்ந்து, அள்ளூற - வாயூற, உள்ளே - உள்ளத்தில், கசிந்து ஊறு - கசிந்து சுரக்கின்ற, பைந்தேறல் - பசுந்தேனை, கள் ஊறு - தேன் சுரக்கின்ற, கஞ்சம் - தாமரைமலர்போன்ற, கரத்து - திருக்கரத்தில், ஊறு - பரவின, சேயொளி - செவ்வொளியானது, கலப்ப - கலத்தலால், சிவப்பு ஊறியும் - செந்நிறத்தைப்பெற்றும், கருணைப்பெருக்கு ஊற - கருணைவெள்ளம் நிறைவாநிற்க, அமுது ஊறு - அமுதமூறுகின்ற, பார்வை - நோக்கத்தோடுகூடின, கடைக்கண் - கடைக்கடையின், கறுப்பு ஊறியும் - கருநிறத்தைப்பெற்றும், நள் ஊறும் - நடுவே யூறுகின்ற, மறு ஊறு - மறுவூறலை, அகற்றும் - நீக்கி விளங்குகின்ற, முகமதியில் - முகமாகிய சந்திரனிடத்திலுள்ள, வெள் நகை ஊறும் - வெள்ளொளி வீசுகின்ற, நிலவு ஊறியும் - நிலவைப்பெற்றும், நல் - அழகாகிய, தரளம் அம்மனை - முத்தினாலியன்ற அம்மனை, ஓர் சிற்குணத்தினை - ஒப்பற்ற ஞானத்தை, நல் மூன்று குணம் கதுவல் காட்ட - சிறந்த முக்குணங்களும் பற்றுந்தன்மையைக் காட்டாநிற்க, அம்மனை ஆடியருள்க, ஆகம் - ஆடியருள். எ - று.

தொண்டரென்புருக வள்ளூற வுள்ளே கசிந்தூறு பைந்தேறல், நற்றரளவம்மனை, சிவப்பூறியும், கறுப்பூறியும், நிலவூறியும், ஓர் சிற்குணத்தினை மூன்று நற்குணங் கதுவல் காட்ட அம்மானை யாடியருள்க என முடிக்க.

விழித்துறங்குதலாவது சாக்கிரத்திற் சுழுத்திநிலையை யடைந்திருத்தல். இது, "வினவிற் பரத்தையறிவுறுதற் கவத்தைபுல விளைமாறியே நனவிற் சுழுத்தி நிலைவரி னப்பொருட்டிசமூ நலகவே" என்றதற்றொடக்கத்தான் றேர்செய்யுட்களா லினிது விளங்கும். அன்பரது மனமுத வியவுருகுதலேயன்றி வலிய வெ மிறைவியி னெழிலெழிலா னுருகுமென்பார் தொண்டருழுவ பென்புருக நெக்கள் ளூறவுள்ளே கசிந்தூறு பைந்தேறல் என்று "கூம்பலங்கைத்தலத் தன்பரென்பூடுருகக் குனிக்கும் பாம்பலங் ரப்பரன்" என்றும், "ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கன்பி யென்புருகிப் பாடுகின்றிலை" என்றும், இவ்வாறு போதமேல் திருவாதவூராளியுங் கூறுதல்காண்க. சிற்குணம் - அறிவு. மூன் றற்குணம - சத்துவ ரஜஸ் தமோகுணங்கள். இவற்றுள் சத்துவ வெண்ணிறமென்றும், ராஜசம் செந்நிறமென்றும், தாமசம் கரு மென்றும் கூறுப.

குலைபட்ட காந்தட் டளிர்க்கையிற் செம்மணி
குயின்றவம் மனை நித்திலங்
கோத்தவம் மனைமுன் செலப்பின் செலுந்தன்மை
கோகனக மனையாட் டிபாற்
கலைபட்ட வெண்சுடர்க் கடவுடோய்ந் தேகவது
கண்டுகொண் டேபு முங்குங்
காய்கதிர்க் கடவுளும் பின்றொடர்வ தேய்ப்பக்
கறங்கருவி தூங்க வோங்கு
மலைபட்ட வாரமும் வயிரமும் பிறவுமா
மாமணித் திரளைவாரி
மறிதிரைக் கையா லெறித்தெறிய நாற்கோட்டு
மதகளிறு பிளிறி யோடும்

லைபட்ட வையைத் துறைச்சிறை யனப்பேடை
யம்மானை யாடி யருளே
கங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்ம...... ரடி யருளே.

(இ - ள்.) குலைபட்ட காந்தள் - குலையாகிய காந்தள் மலரினு மைந்த, தளிர் - தளிர்போன்ற, கையில் - திருக்கையிலுள்ள, சம்மணிகுயின்ற அம்மனை, செம்மணிகளிழைத் தியற்றப்பட்ட மனையானது, நித்திலம்கோத்த அம்மனை - முத்திழைணியன்ற ம்மனையானது, முன்செல-முன்னேபோக, பின்செல்லும் தன்னைய- ன்னேபோகும்விதமானது, கோகநகமனையாட்டியால் - தாமரை கிய தன்மனையாளிடத்து, கலைபட்ட - கலைகள்பொருந்திய, ண்சுடர்க்கடவுள்-வெண்சுடர்க்கடவுளாகிய சந்திரன், தோய்ந்து - வந்துபுணர்ந்துபோகாநிற்க, அதுகண்டுகொண்டு-அதனை யறி துகொண்டு, புழுங்கும்-மனம்புழுங்குகின்ற, காய்கதிர்க்கடவுளும்- ய்கதிர்க்கடவுளாகிய சூரியனும, பின்தொடர்வது ஏய்ப்ப - பின் டர்ந்துபோவதைநிகர்க்க, கறங்கு - ஒலிக்கின்ற, அருவி - அருவி றுகள், தூங்க-ஒழுகாநிற்க, ஓங்கும் - உயர்ந்திருக்கிற, மலைபட்ட- யிலுண்டான, ஆரமும் - முத்துக்களும், வயிரமும் - வச்சிரக் களும், பிறவும் ஆம்-பிறவுமாகிய, மா - அழகிய, மணித்திரளை - ணித்தொகுதியை, வாரி - அள்ளி, மறிதிரைக்கையால்-மறிகின்ற ரைக்கரத்தால், எடுத்துஎறிய - எடுத்துவீசுதலால், நாற்கோடு - ன்கு கொம்புகளையுடைய, மதகளிறு-மதயானையாகிய ஐராவதம், ரீஇ ஓடும்-சத்தித்துக்கொண்டோடுதற்கேதுவாகிய, அலைபட்ட - சையுமியல்புள்ள, வையை - வையைநதியின், துறை - துறையி ள, சிறை-சிறகுகளையுடைய, அன்னப்பேடை - பேட்டன்னம் ல்பவளே, அம்மானையாடியருள்——— ஆக். எ - று.

வையைத்துறைச்சிறையனப்பேடை, நித்திலங்கோத்தவம்மனை முன்செலச்செம்மணிகுயின்றவம்மனைபின் செலுந்தன் மைமேகாகம் மனையாட்டிபாற்கலைபட்டவெணசுடர்க்கடவுடேய்ந்தேகவது கண் கொணடே புழுங்குங்காய்கதிர்க்கடவுளும் பின்றொடர்வதேய் அம்மானையாடியருள் எனமுடிக்க

காந்தள் - மாதர்கைக்குவமிக்கப்படு பொருள்களுளொன்று செங்காந்தண்மலர். இதனைதோன்றியெனவுங் கார்த்திகைப்பூவெ வுங்கூறுப. செம்மணி - மாணிக்கம். இறைவியின் திருக்கரதன தாமரைமலருக்கும, அதினின்றெழுந்த ந்நிலவம்மனையைச் ச றுகக்கும், அதைத்தொடர்ந்துசெல்கின்ற செம்மணியம்மனை சூரியனுக்கும் உவமையாகக்கொள்க. மலைபட்ட வாரம் என்றது கில், யானைக்கோடு, எனக்கோடு, முதலியவற்றிலுண்டான முத் கள். நாற்கோட்டு மதகளிறு எனற தீண்சுடராவதத்தைக்கு தது. வையைத்துறையென்றதற்கேற்ப இறைவியைச் சிறைய பேடையென்றார்.

தமரான நின்றுணைச் சேடியரி லொருசிலர்
தடக்கையி னெடுத்தா டுநின்
றாளவம் மனைபிடித் தெதிர்வீசி வீசியிட
சாரிவல சாரி திரியா
நிமிராமு னம்மனையொ ராயிர மெடுத்தெறிய
நிரைநிரைய தாய்க் ககனமேல்
நிற்கின்ற தம்மைநீ பெறறவகி லாண்டமு
நிரைத்துவைத் ததுை கடுப்ப
இமிரா வரிச்சுரும் பார்த்தெழப் பொழு லூ
டெழுந்தபைந் தாதுல கெலாம்

இருள்செயச் செய்துநின் சேனுபரா கமெனு
மேக்கமள காபுரிக்கும்
மராவ திக்குஞ்செய் மதுராபு ரித்தலைவி
யம்மானை யாடி யருளே
கங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மனை யாடி யருளே.

(இ - ள்.) வரி சுரும்பு - இசைபாடு மியல்புள்ள வண்டுகள், பொழிலூடு - பூஞ்சோலைகளில், இமிரா - ஒலித்து, ஆர்த்து எழு - வாரித்தெழுதலால், எழுந்த-மலர்களினின்றெழுந்த, பைந்தாது - ய மகரந்தங்கள், உலகு எல்லாம் - உலகமுழுதும், இருள்செய செய்து - இருட்டு மூடச்செய்து, அளகாபுரிக்கும் - அளகை நகா அமராவதிக்கும் - அமராவதி நகர்க்கும், நின் சேநாபராகம் னும் - உன் படையெழுச்சியாலுண்டான தூளியென்கிற, ஏக்கு - கவலையை, செய் - உண்டாக்குதறகிடமாகிய, மதுராபுரித் தலைவி - மதுராபுரிக்கிறைவியே, தமா ஆன - இசைஞ்செய்வோரா ர், நின் துணை சேடியரில்-உனக்குச்சமானமான தோழியரில், ஒரு ர் - ஒரு சிலர், தடக்கையின் - பெருமையமைந்த நின் திருக்கரத் ல், எடுத்து ஆடும் - எடுத்து வீசி விளையாடுகின்ற, நின் தரள ம்மனை பிடித்து - உன் நித்திலவம்மனையைப்பற்றி, எதிர் வீசி ணி உனக்கெதிரில் வீசி வீசி, இடசாரி வலசாரி திரியா-இடசாரி சாரியாகத்திரிந்து, நிமிராமுன் - நிமிர்வதற்கு முன்பே, ஓர் ஆயி அம்மனை யெடுத்தெறிய - ஓராயிரம் அம்மனையை நீ யெடுத் ய, (அவை) நிரைநிரையதாய் - வரிசைவரிசையாய், ககநமேல ற்றது - ஆகாயத்தினிற்பது, அம்மை நீ - லோகமாதாவாகிய ற்ற - ஈன்ற, அகிலாண்டமும் - அகிலாண்டங்களும், நிரை வைத்தது கடுப்ப - நிரைத்துவைக்கப்பட்டதை நிகர்க்க, அம யாடியருள்———, ஆகும் - எ - று.

மதுராபுரித்தலைவி ; நின் சேடியரிற் சிலர், நின்றநரள வம்மனை பிடித்தெதிர் வீசி வீசி யிடசாரி வலசாரி திரியா நிமிராமுன் ஒராயிரமம்மனை யெடுத்தெறியக் கககமேனிரை நிரையதாய் நிற்கின்ற . நீ பெற்ற வகிலாண்டமு நிரைத்துவைத்தது கடுப்ப அம்மானை யாடியருள் என முடிக்க.

" தமர் - தம்மவர், அது இங்கு உறவினரைக்குறியாது ஆகிய பயில்வோரா யிதஞ்செய்வோரென்னும் பொருள்படவந்தது. சிலர் - சிற்சிலர். திரியா இமிரா என்பன செய்யாவென்னும் தத் பாடு வினையெச்சங்கள். நிரைத்துவைத்தல் - அடுக்கிவைத்தல் அரிச்சுரும்பு எனக்கொண்டு சிறகுக்களையுடைய வண்டென்றும் தலுமாம். அளகாபுரி - குபேரன் பட்டணம். அமராவதி இந்திர பட்டணம். இவைகளுக் கேக்கஞ்செய்தலாவது - இறைவி திக் விசயம் போந்தகாலத்தெழுந்த சேனாபராகம்போலத் தோன்றி அ பட்டணத்தார்க்கு மீட்டு மிறைவி யெழுந்தருளுகின்றனளோ வெ ன்று மெண்ணமுண்டாக்கிக் கவற்றல். (ரு

உயிரா யிருக்கின்ற சேடியரின் மலர்மீ
 துதித்தவ ளெதிர்த்து நின்றே
டொட்டியெட் டிப்பிடித் திட்டவம் மனைதேடி
 யோடியா டித்திரியநீ
பெயரா திருந்துவிளை யாடுவது கண்டெந்தை
 பிறைமுடி துளக்க முடிமேற்
பெருகுசுர கங்கைநுரை பொங்கலம் மானையப்
 பெண்கொடியு மாடன் மான
வெயரா மனம்புழுங் கிடும்மரர் தச்சனும்
 வியப்பச் செயுந்த வளமா

மேடையுந் தண்டரள மாடமுந் தெண்ணிலா
வீசத் திசைக்க ளிறெலாம்
ஈரா வதத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
யம்மானை யாடி யருளே
ங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடி யருளே.

(இ - ள்.) உயிராயிருக்கின்றசேடியரில் - உன்னுயிர்போலி
றதோழியர்களுக்குள்ளே, மலர்மீது உதித்தவள் - திருமகளா
ர், நின்னோடு எதிர்த்து - உன்னோடெதிரிட்டு, ஒட்டி - சபதஞ்
ய்து, எட்டிப்பிடித்திட்ட - எட்டிப்பிடித்த, அம்மனை - அம்
மானையானது, (கையினின்றும் நழுவிவிழுதலால்) தேடி - அதனைத்
தேடி, ஓடி - ஓடியும், ஆடி - விளையாடியும், திரிய - திரியாநிற்க, நீ
பெயராதிருந்து விளையாடுவது-நீயிடம்பெயராமலிருந்துகொண்டே
விளையாடுவதை, எந்தைகண்டு - எமதுதந்தையாகிய சிவபெருமான்
நோக்கி, பிறைமுடிதுளக்க - தமது பிறைமுடியையசைக்க, முடி
மேல் - அந்தமுடிமீது, பெருகு - பெருகாநின்ற, சுரகங்கை - தேவ
கையில், நுரைபொங்கல் - நுரைபொங்குதல், அப்பெண்கொடி
அந்தக்கங்காநதியாகிய பெண்கொடியும், அம்மானை ஆடல்
அம்மானை யாடுவதை நிகர்த்திருக்க, வெயரா-உடல்வியர்த்து,
புழுங்கிடும் - மனம்புழுங்குகின்ற, அமரர்தச்சனும் - தெய்வத்
னும், வியப்ப - அதிசயிக்கும்படி, செயும் - செய்யப்பட்ட, மா-
, தவளமேடையும் - வெள்ளிய மேடைகளும், தண்தரளமாட
குளிர்ந்தமுத்தினாலியற்றப்பட்ட மாடங்களும், தெள்நிலா
தெளிவாகிய நிலவைவீசுதலால், திசைக்களிறு எல்லாம் - திக்
களெல்லாம், அயிராவதத்தினை நிகர்க்கும் - ஐராவதமென்னும்
ளையானையைநிகர்த்திருத்தற்கேதுவாகிய, மதுரைத்தலைவி - மது
க்கரசியே, அம்மானையாடியருள் ———, ஆகம் எ - று.

மலர்மீதுதித்தவள் நின்னோடெதிர்த்தொட்டியெட்டிப் பிடித்திட்டவம்மனை தேடியோடியாடித்திரிய, நீ பெயராதிருந்து விளையாடுவது எந்தைகண்டு பிறைமுடிதுளக்க, முடிமேற்பெருகு சுரகங்கை நுரைபொங்கல், அப்பெண்கொடியும் அம்மானையாடல்மான, அமரர்தச்சனும் வியப்பச்செயும் தவளமாமேடையும் தரளமாடமும் நிலாவீசத் திசைக்களிறெலா ம் அயிராவதத்தினை நிகர்க்கு மதுரைத் தலைவி அம்மானை யாடியருள் எனமுடிக்க.

உயிராயிருக்கின்ற சேடியாரானார் - பூமகள்நாமகள் இந்திராணி முதலாயினோர். ஒட்டல் - சபதஞ்செய்தல், பெயராதிருத்தல்- நிலையை விடாதிருத்தல், இறைவன் முடி துளக்கற்கேது இ பெயராதிருந்து விளையாடுதல்கண்டுண்டாகிய பெருவியப்பு. க நுரை பொங்குதற்குக் காரணம்-இறைவன் முடி துளக்கல். ஒரு பெண்ணாகவும் அலைகள் அவள் கைகளாகவும் நுரை பெ தலாலுண்டாகுங் குமிழிகள் அம்மானைக்காய்களாகவும் கொ தெய்வதச்சன் முன்னர்ப் பொறாமையான் மனம் புழுங்கின னும், பின்னர் இம்மேடை முதலியவற்றின் நுண்டொழிலே பொறாமைபோக்கி வியந்தானென்றற்கு, "மனம் புழுங்கிடு தச்சனும் வியப்பச்செயுந் தவளமா மேடையுந் தண்டரள மும்" என்றார். தவளமா மேடையுந் தண்டரள மாடமுந் ணிலா வீசத் திசைக்களிறெலாம் அயிராவதத்தினை நிகர்க்கு தனால், மேடை முதலியவற்றின் வெள்ளொளிபட்டுத் திக் வெள்ளையானைகள்போலத் தோன்றினவென்றாராயிற்று. திசை றெலாம என்றாராயினும் கீட்டிசை யானையை யொழியக்

முத்த மழுத்திட வம்மனை கைம்மலர்
முளரிம ணங்கமழ
மொய்குழல் வண்டினின் மைவிழி வண்டினின்
முயங்கி மயங்கியிடக்

கொத்தூ மணித்திர ளிற்செயு மம்மனை
குயிலின் மிழற்றியநின்
குழலி னிசைக்குரு கிப்பனி தூங்கு
குறுந்துளி சிந்தியிட
வித்துரு மத்தி லிழைத்தவு நின்கை
விரற்பவ ளத்தளிரின்
விளைதரு மொள்ளொளி திருடப் போவது
மீள்வது மாய்த்திரிய
அத்தன் மனத்தெழு தியவுயி ரோவிய
மாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே.

(இ - ள்) முத்தம் அழுத்திய அம்மனே - முத்தம் பொதிந்த ானைக்காய்கள், நின் - உனது, கை - கைகளாகிய, முளரி மணம் கமழ - தாமரைமலரின் மணத்தை வீச, மொய் குழல் டு - நெருங்கிய கூந்தலின் மொய்த்த வண்டுகள், மைவிழி வண் முயங்கி மயங்கியிட - கருங்கண்களாகிய வண்டுகளோடுகூடி ்காநிற்க, கொத்து மணித்திரளின் செய்யும் அம்மனை - கொத் மணித்தொகுதியாற் செய்யப்பட்ட அம்மனைக்காய்கள், ன் மிழற்றிய - குயில்போலக் கொஞ்சிப்பேசுகிற, நின் - ், குழலின் இசைக்கு உருகி - குழலினிசைக்குருகி, பனி - குளிர்ச்சி தங்கிய, குறுந்துளி சிந்தியிட - சிறு துளிகளைச் ிற்க, வித்துருமத்தில் இழைத்தவும் - பவளத்தாற் செய்யப் ாவாகிய அம்மானைக்காய்களும், நின் கை விரல் - உன் கை ாகிய, பவளத்தளிரின் - பவளக்கொழுந்தில், விளை தரு - ம, ஒள் ஒளி - ஒட்பமாகிய ஒளியை, திருட - திருடும்

பொருட்டு, போவதும் மீள்வதும் ஆய் - போவதும் மீண்டுவருவது மாகி, திரிய - திரியாநிற்க, அத்தன் மனத்து எழுதிய - இறைவன் மனமாகிய சுவரின்மீதெழுதப்பட்ட, உயிர் ஓவியம் - உயிரோவிய மே, அம்மனை ஆடுக - அம்மானை யாடியருள்க, அழகு தழைந்த கல்யாண சவுந்தரி - அழகு மிகுந்த கல்யாண சுந்தரியே, அம்மனை யாடுக———, எ - று.

அத்தன் மனத்தெழுதிய வுயிரோவியம், கமழ, மயங்கியிட, சிந்தியிட, திரிய அம்மனை யாடுக என முடிக்க.

மை விழி - மையெழுதிய கண் எனினுமாம். பவளம் - ப்ரவா ளம் என்னும் வடசொற்சிதைவு. ஓவியமெழுதுவது சுவரிலாத லால், மனத்து என்பதற்கு மனமாகிய சுவரில் என்றுரை யுரைக்கப் பட்டது. (எ)

விளரி மிழற்றளி குமிறு குழற்கொடி
வீசிய வம்மனைபோய்
விண்ணி னிறைத்தெழு வதுகக னந்திரு
மேனிய தானவருங்
கிளநில வுமிழ்பரு முத்தின் கோவை
யெடுத்தவர் திருமார்புக்
கிடுவ கடுப்பவு மப்பரி சேபல
மணியினி யற்றியிடும்
வளரொளி விம்மிய வம்மனை செல்வது
வானவி லொத்திடவும்
மனனெக் குருகப் பரமா னந்த
மடுத்து திருத்தொண்டர்க்
களிகனி யத்திரு வருள்கனி யுங்கனி
யாடுக வம்மனையே

அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே.

(இ - ள்.) விளரி மிழற்று அளி - யாழ்போல மிழற்றுகின்ற டுகள், குமிற-முழங்குகின்ற, குழல் - கூந்தலையுடைய, கொடி-கொடிபோல்பவளே, வீசிய அம்மனை - நீ யெடுத்தெறிந்த அம் னக்காய்கள், போய் - சென்று, விண்ணில் - ஆகாயத்தில், நிரைத் ழுவது - வரிசையாயெழுந்து தோன்றுவது, ககனம் திருமேனி ஆனவருக்கு - ஆகாயமே திருமேனியாகப்பெற்றவராகிய சிவ மானுக்கென்றே, இள நில உமிழ் - இளநிலவை வீசுகின்ற த்தின் கோவை எடுத்து - பெரிய முத்துமாலையை யெடுத்து திருமார்புக்கு - அவ்விறைவரது திருமார்புக்கு, இடுவ கடுப்ப சாத்துவதை நிகர்த்திருக்கவும், அப்பரிசே - அத்தன்மையாக பல மணியின் இயற்றியிடும் - பலவகை மணிகளாற் செய்யப் வளர் ஒளி விம்மிய அம்மனை - மிகுந்த ஒளிதழைத்த அம்மா ய்களின் வரிசை, செல்வது - மேலேபோவது, வானவில் ஒத் இந்திரதநுசை நிகர்த்துத் தோன்றவும், மனன் நெக்கு - மனம் நெகிழ்ந்துருக, பரமானந்தம் மடுத்த - பேரின்பவெள் ல் மூழ்கின, திருத்தொண்டர்க்கு - மெய்யடியார்க்கு, அளி ய - அருள் முதிரும்படி, திருவருள் கனியும் - திருவருள் பழுத் டமாகிய, கனி - ராஜகுமாரியே, அம்மனை ஆடுக——— கு தழைந்த. எ - று.

கொடி, வீசிய வம்மனைபோய் விண்ணினிரைத்தெழுவது கக திருமேனியதானவருக்கு, முத்தின் கோவையெடுத்து அவர் மார்புக்கிடுவ கடுப்பவும், பல மணியினியற்றியிடும் அம்மனை ல்வது வானவில்லொத்திடவும், திருத்தொண்டர்க்கு அளி கனியத் வருள் கனியுங்கனி, அம்மனை யாடுக என முடிக்க.

கொடி - அண்மைவிளி. கடுத்தல் - நிகர்த்தல். வானவில் பல நிறமுடைத்தாதலால், பல மணியினியற்றியிடும் அம்மனை வானவி லொத்திடவும் என்றார். கன்னி - கனியெனத் தொகுத்தலாயிற்று. திருவருள் கனியுங் கனியென்பதற்கு, திருவருளுண்டாதற்காகரம் எனினுமிழுக்காது. (அ)

கைம்மல ரிற்பொலி கதிர்முத் தம்மனை
நகைமுத் தொளிதோயக்
கண்டவர் நிற்கப் பிறர்சிலர் செங்கைக்
கமலச் சுடர்கதுவச்
செம்மணி யிற்செய் திழைத்தன வெனவுஞ்
சிற்சிலர் கட்சடையின்
செவ்வியை வவ்விய பின்கரு மணியிற்
செய்தன கொல்லெனவும்
தம்மன மொப்ப வுரைப்பன மற்றைச்
சமயத் தமைவுபெறாத்
தத்தமி னின்று பிதற்றுவ பொருவத்
தனிமுதல் யாமென்பார்க்
கம்மனை யாயவர் தம்மனை யானவ
ளாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே.

(இ - ள்) கை மலரில் பொலி - கையாகிய தாமரைமலரில் விளங்குகிற, கதிர் முத்து அம்மனை - ஒளியுள்ள முத்தினாற் செய்யப்பட்ட அம்மானைக்காய்களின்மீது, நகை முத்து ஒளிதோய - திருநகையாகிய முத்தினொளிபட, கண்டவர் நிற்க-பார்த்தவரிருக்க,

பிறர் சிலர் - வேறு சிலர், செங்கை கமலச்சுடர் கதுவ - செகிந்த கையாகிய தாமரைமலரி ஞெளிபடுதலால், செம்மணியின் செய் திழைத்தன எனவும் - மாணிக்கங்களிழைத்துச் செய்யப்பட்டன வென்றும், சிற்சிலர் - வேறு சிற்சிலர், கட்கடையின் செவ்விய வவ்வியபின் - கடைக்கண்ணின் நிறத்தைக் கவர்ந்தபிறகு, கருமணி யின் செய்தன எனவும் - நீலமணியாற் செய்யப்பட்டனவென்றும், தம் மனம் ஒப்ப உரைப்பன - தமது மனதுக்கிசைந்தபடி சொல் லுஞ் சொற்கள், மற்றைச்சமயத்து - பிறசமய வழிகளிலிருந்து கொண்டு, அமைவு பெறூர் - மனவொடுக்கம் பெறாதவர்கள், தத்தமி னின்று பிதற்றுவ பொருவ - தத்தஞ் சமயநிலைகளினின்று பிதற் றுஞ் சொற்களை நிகர்த்திருக்க, தனி முதல் யாம் என்பார்க்கு - ஒப் பற்ற முதற்பொருள் யாமென்று சொல்லிச் செருக்குகிற பிறதேவர் களுக்கு, அம்மனை யாயவர்-தாயகமானவராகிய சிவபெருமானுக்கு, அன்னை யானவள் - தாயானவளே, அம்மனை யாடுக———, அழகு ஆடுக———, எ - று.

கதிர் முத்தம் மனைநகை முத்தொளி தோயக்கண்டவர் நிற்க, செங்கைக் கமலச் சுடர்கதுவ சிலர் செம்மணியிற் செய்தனகொல் லெனவும், கட்கடையின்செவ்விய வவ்வியபின் சிலர் கருமணியிற் செய்தனகொல்லெனவும் தம்மனமொப்ப வுரைப்பன, மற்றச் சம யத்தமைவு பெறூர் தத்தமினின்று பிதற்றுவ பொருவ, தனிமுதல் யாமென்பார்க் கம்மனையாயவர் தம்மனையானவள் அம்மனை யாடுக என முடிக்க.

மற்றைச்சமயம் என்றது சைவசமயமல்லாத வேறு சமயங்களை. தனிமுதல் யாமென்பார்க் கம்மனையாயவர் தம்மனையானவள் என்ப தற்கு, தனிமுதல் யாம் என்னும் இறைவர்க்குத்தாயாய் அவர் தமக்கு மனைவியானவள் என்றுரைத்தலுமாம். இறைவற்குத் தாயாதல் பரா சத்தியினின்றுஞ் சிவந்தோன்றும் என்னு முறைமையாலென்க. (௬)

ஒள்ளொளி மரகத மும்முழு நீலமு
மொண்டர ளத்திரளும்
ஒழுகொளி பொங்க விழைத்திடு மம்மனை
யொருமூன் றடைவிலெடாக்
கள்ளவிழ் கோதை விசும்புற வீசுவ
கண்ணுதல் பாற்செலநின்
கையில் வளர்த்த பசுங்கிளி யும்வளர்
காமர் கருங்குயிலும்
பிள்ளைமெ னோதிம மும்முறை முறையாற்
பெருகிய காதலைமற்
பேச விடுப்ப கடுப்ப வணைத்தொரு
பெடையோ டரசவனம்
அள்ளல் வயற்றுயின் மதுரைத் துறைமக
ளாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே.

(இ - ள்.) ஒள் ஒளி - ஒட்பமான ஒளியையுடைய, மரகதமும் - பச்சையும், முழு நீலமும் - முழு நீலரத்நமும், ஒள் தரளத்திரளும் - ஒள்ளிய முத்தின் தொகுதியும், ஒழுகு ஒளி பொங்க இழைத்திடும் - பெருகாநின்ற ஒளியை வீசும்படி பொதிந்திட்ட, அம்மனை ஒரு மூன்று - அம்மானைக்காய்கள் ஒருமூன்றை, அடைவில் எடா - முறையாயெடுத்து, கள் அவிழ் கோதை - தேன் ஒழுகாநின்ற பூமாலையையுடையவளே, விசும்பு உற வீசுவ - நீ ஆகாயத்தில் பொருந்த வீசுவன, கண்ணுதல்பால் செல - சிவபெருமானிடத்திற் போகும்படி, நின் கையில் வளர்த்த - உன் கையில



நீராடற்புறவம் குழந்தை தோழிகளுடன்வைகைநதியிறநீராடல்.

வைத்து வளர்த்த, பசுங்கிளியும் - பச்சைக்கிளியையும், வளர் காமா கருங்குயிலும் - வளராநின்ற அழகையுடைய கருமகுயிலையும், பிள்ளை வெள் ஓதிமமும் - இளமையாகிய வெள்ளை யன்னத்தையும், முறைமுறையால் - கிரமக்கிரமமாய், பெருகிய காதலை - அதிகரித்த அன்பை, மேல் பேசவிடுப்ப கடுப்ப - மேலே சென்று பேசும்படி விடுப்பனவற்றை நிகர்க்க, அரச அன்னம் - ராஜஹம்ஸமான பெடையோடு அணைத்து-ஒப்பற்ற பெட்டையன்னத்தை யணை அள்ளல் வயல் துயில் - சேற்றையுடைய வயலில் உறங்கு மதுரைத்துறைமகள் - மதுரைத்துறையாகிய பாண்டியன்ப அம்மனை யாடுக———, அழகு தழைந்த. எ - று.

மரகதத்தாற் செய்யப்பட்ட அம்மானைக்காய் கிள்ளைக்கு ரத்நத்தாற்செய்யப்பட்ட அம்மானைக்காய் குயிலுக்கும், மு செய்யப்பட்ட அம்மானைக்காய் அன்னத்துக்கும் உவமை கொள்க. விசுவ கடுப்பவென வினையும்

மதுரைத்துறை - மலயத்துவசபாண்டியன் (௪0,

---

## ௯ - வது. நீராடற்பருவம்.

வலையாடு வண்கைப் பொலன்சங் கொடும்
பொங்கு மழிதிரைச் சங்கோலிட
மதரரிக் கட்கயல் வரிக்கய லொடும்புரள
மகரந்த முண்டு வண்டின்
கிளையாடு நின்றிருக் கேசபா சத்திளொடு
கிளர்சை வலக்கொத் தெழக்

கிடையாத புதுவிருந் தெதிர்கொண்டு தத்தமிற்
  கேளிர்க டழீஇக் கொண்டெனத்
தலையாடு கறையடிச் சிறுகட் பெருங்கைத்
  தடக்களி றெடுத்து மற்றத்
தவளக் களிற்றினொடு முட்டவிட் டெட்டுமத
  தந்தியும் பந்தடித்து
விளையாடும் வையைத் தடந்துறை குடைந்து
  புதுவெள்ளநீ ராடி யருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
  வெள்ள நீராடி யருளே.

(இ - ள்.) வண்கை - வளவியகையினிடத்துள்ள, வளையாடு- வளைவுபொருந்திய பொன்-அழகாகிய, சங்கொடும்-சங்கவளையலோடும், பொங்கும் - பெருகுகின்ற, மறிதிரை-காற்றினால் மேலெழுந்து வீழ்கின்ற அலைகளிலுள்ள, சங்கு - சங்குகள், ஒலிட - சத்திக்கவும், மதர் - மதர்த்த, அரி - செவ்வரிபந்த, கயல்-கண்ணாகிய கயல்கள், வரிகயலொடும் - நீண்டகயல்மீன்களோடும், புரள - புரளவும், வண்டின்கிளை - வண்டின்கூட்டம், மகரந்தம்உண்டு - தேனையுண்டு, ஆடு - விளையாடுதற்கிடனாகிய, நின்-உனது, திரு-அழகாகிய, கேசபாசத்தினொடு - கேசபந்தத்துடன், கிளர் - விளங்குகின்ற, சைவலக்கொத்து - பாசிக்கொத்து, எழ-மேலெழவும், கிடையாத-கிடைத்தற்கரிதாகிய, புதுவிருந்து - புதியவிருந்தினரை, எதிர்கொண்டு - எதிர்கொண்டுசென்று, கேளிர்கள் தத்தமில் தழீஇக்கொண்டென - உறவினர் தத்தமக்குள்ளே ஒருவரையொருவர் தழுவிக்கொண்டாற் போல, தலைஆடு - தலையசைந்த, கறை அடி-உரல்போன்ற கால்களையும், சிறுகண் - சிறியகண்களையும், பெருங்கை - பெரியதுதிக்கையினையும் உடைய, தடம் களிறு - மலைபோலும் யானைகளை,

டுத்து - தூக்கி, அ - அந்த, தவளம்- வெண்மையாகிய, களிற்றி ெனாடும் - யானையாகிய ஐராவதத்துடன், முட்டவிட்டு - முட்டும்படியெறிந்து, எட்டுமதந்தியும்-எட்டுமதயானைகளையும், பந்தடித்து விளையாடும் - பந்தடித்துவிளையாடுகின்ற, தடம்-பெரிய, வையைத்துறை - வையைத்துறையில், குடைந்து - மூழ்கி, புதுவெள்ளம் - புதுப்பெருக்கில், நீராடியருள்-நீராடியருள்க, விடைக்கொடியவர்க்கு - இடபக்கொடியையுடையவராகிய சிவபிரானுக்கு, ஒரு - ஒப்பற்ற, கயற்கொடி-மீன்க்கொடியை, கொடுத்த - கொடுத்தருளின, கொடி-பூங்கொடிபோல்வாளே———, வெள்ளநீராடியருள். எ-று.

சங்குஒலிட,கயல்புரள,கைவலக்கொத்து எழ, கேளிர்கள் புதுவிருந்து எதிர்கொண்டு தழீஇக்கொண்டெனத் தடக்களிறெடுத்து, தவளக்களிற்றினொடு முட்டவிட்டு, எட்டுமதந்தியும் பந்தடித்து விளையாடும் வையைத்துறை குடைந்து புதுவெள்ள நீராடியருள் எனவும், விடைக்கொடியவர்க்குக் கயற்கொடிகொடுத்த கொடி வெள்ள நீராடி யருள்எனவும் முடிக்க.

வளை - முதனிலைத்தொழிற்பெயர். வண்மை-கொடைக்கையெனினுமாம். தளை - கால்விலங்கு (சங்கிலி), மற்றுஅசை - அபலாறிசுட்டு. விடைக்கொடியவர்க்குக் கயற்கொடிகொடுத்த என்றமையான், இறைவற்குத் தொன்றுதொட்டுள்ளது விடைக்கொடியென்பதும், தடாதகைப்பிராட்டியை மணக்கவந்துழிப்பெற்றது கயற்கொடியென்பதும் விளங்கும். (௧)

நிரைபொங் கிடுஞ்செங்கை வெள்வளை கலிப்பநகை
நிலவுவிரி பவளம் வெளிற
நீலக் கருங்குவளை செங்குவளை பூப்பவற
னெறிகுழற் கற்றை சரியத்
திரைபொங்கு தண்ணந் துறைக்குடைந் தாடுவ
செழுந்தரங் கக்கங் கைநுண்

சிறுதிவலை யாப்பொங்கு மானந்த மாக்கட
லிளைத்தாடு கின்ற தேய்ப்பக்
கரைபொங்கு மறிதிரைக் கையாற் றடம்பணைக்
கழனியிற் கன்னியர் முலைக்
களபக் குழம்பைக் கரைத்துவிட் டள்ளற்
கருஞ்சேறு செஞ்சே றதாய்
விரைபொங் கிடத்துங்க வேகவதி பொங்குபுது
வெள்ளநீ ராடி யருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடி யருளே.

(இ - ள்.) செங்கை - செங்கையிலணிந்த, நிரைபொங்கிடும்-வரிசையாய்விளங்குகிற, வெள்வளைகலிப்ப-வெள்ளிய சங்கவளையல் சத்திக்கவும், நகைநிலவுவிரி - நகையாகிய நிலாவிரிதற்கிடமாகிய, பவளம் - வாய்ப்பவளமானது, வெளிற - வெளுக்கவும், நீலக்கருங்குவளை - நீலநிறமாகிய கருங்குவளை மலர்கள், செங்குவளைபூப்ப - செங்குவளைமலர்கள் போலமலரவும், அறல் - கருமணல்போன்ற நெறி - நெறிப்பையுடைய, குழல் கற்றைசரிய - கூந்தற்கற்றையானது சரியவும், திரைபொங்கு-அலைகள் மிகுகின்ற, தண்-குளிர்ந்த, அம் - அழகாகிய, துறை - துறையில், குடைந்தாடு - படிந்துவிளையாடுவன, செழு தரங்கம் - செழுமையாகிய அலைகளையுடைய, கங்கை - கங்காநதியானது, நுண் சிறுதிவலையா - நுண்ணிய சிறு திவலையாம்படி, பொங்கும் - பெருகுகின்ற, ஆனந்தமாக்கடல் - இன்பப் பெருங்கடலில், திளைத்தாடுகின்றது எய்ப்ப-படிந்து விளையாடுவதை நிகர்க்க, கரைபொங்கும் - கரைமேற்பெருகுகின்ற, மறி - மறிந்து விழுகின்ற, திரைக்கையால் - அலைகளாகிய கைகளால், தடம் கழனியில் - பெரிய மருதநிலச்செய் காலில், கன்னியர் முலை - சிறு

பெண்களுடைய கொங்கைத்தடத்திற் பூசப்பட்ட,களபக்குழம்பை-கலவைச்சந்தனச் சேற்றை, கரைத்துவிட்டு - கரைத்துச்சேர்த்து, அள்ளல் - குழம்பாகிய, கருஞ்சேறு - கருஞ்சேறானது, செஞ்சேறதாய் - செஞ்சேறாகி, விரைபொங்கிட - வாசனை அதிகரிக்கும்படி, துங்கம் - பரிசுத்தமான, வேகவதி - வேகவதியாற்றில், பொங்கு - பெருகாநின்ற, புதுவெள்ளம்-புதுப்பெருக்கில், நீராடியருள்——, விடை————நீராடியருள். எ - று.

வளை கலிப்ப, பவளம் வெளிற, செங்குவளை பூப்ப, குழர்கற்றை சரிய, குடைந்தாடவெ, ஆனந்தமாக் கடறினைத்தாடுகின்ற சேய்ப்ப, திரைக்கையால், கன்னியர் முலைக்களபக்குழம்பைக் கரைத்து விட்டு, கருஞ்சேறு செஞ்சேறதாய் விரைபொங்கிட, வேகவதி பொங்கு புதுவெள்ள நீராடியருள் என முடிக்க.

நகைநிலவு - பல்லொளி. பவளம் - திருவாய். கருங்குவளை - கண். வேகவதி - வையையாறு. கழனியில் விட்டென வினையும். விட்டென்றும் வினையெச்சம் பொங்கும் என்னும் வினைகொண்டு முடிந்தது. (உ)

பண்ணுறு கிளிமொழிப் பாவைநின் றிருமேனி
பாசொளி விரிப்ப வந்தண்
பவளக் கொடிக்காமர் பச்சிளங் கொடியதாய்ப்
பருமுத்த மரக தமதாய்த்
தண்ணுறு மல்லற் றுறைச்சிறை யனங்களி
தழைக்குங் கலாமஞ் ஞையாய்ச்
சகலமுந் நின்றிருச் சொருபமென் றோதிடுஞ்
சதுமறைப் பொருள் வெளியிடக்
கண்ணுறு குழலியர் குடக்கொங்கை பொங்குசெங்
களபமுங் கத்தூரியும்

கர்ப்புரமு மொக்கக் கரைத்தோடி வாணியுங்
காளிந்தி யுங்கங் கையாம்
விண்ணூ றுமளவளாய் விளையாடு வைவையெனுத
வெள்ளநீ ராடி யருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடி யருளே.

(இ - ள்.) பண் நாறு - பண்கள் தோன்றுகின்ற, கிளிமொழி- கிளிமொழியையுடைய, பாவை - பாவைபோல்வாளே, நின் திரு மேனி - உன் திருமேனியானது, பாசொளி விரிப்ப - பச்சைநிறத்தை விரித்தலால், அம் தண் பவளக்கொடி - அழகும் குளிர்ச்சியுமுள்ள பவளக்கொடிகள், காமர் பச்சிளங்கொடியதாய் - அழகிய இளமையாகிய பச்சைக்கொடிகளாகியும், பரு முத்து - பெரிய முத்துக்கள், மரகதமதாய் - மரகதமாகியும், தண் நாறும் - குளிர்ச்சி பொருந்திய, மல்லல் - வளம்பொருந்திய, துறை - துறையிலுள்ள சிறை அன்னம் - சிறகையுடைய அன்னப்பறவைகள், களி தழைக்கும்-களிப்புப்பெருகுகின்ற, கலா மஞ்ஞையாய்-தோகையையுடைய மயில்களாகியும், சகலமும் - எல்லாப்பொருள்களும், நின் திருசொருபமென்று - திருவுருவமென்று, ஓலிடும் - முறையிடுகின்ற சதுமறைப்பொருள் - சதுர்வேத தாத்பர்யத்தை, வெளியிட - வெளிப்படுத்தும்வண்ணம், கள் நாறு குழலியர் - தேன்மணக்கின்ற கூந்தலையுடைய மாதரது, குடக்கொங்கை பொங்கு - குடம்போலுந் தனங்களில் மிகுதியா யணியப்பட்ட, செங்களபமும் - செம்மையாகிய கலவைச்சந்தநத்தையும், கத்தூரியுட் - கஸ்தூரியையும், கர்ப்புரமும் - கர்ப்பூரத்தையும்; ஒக்க - ஒருமிக்க, கரைத்தோடி-கரைத்துக்கொண்டு விரைந்து சென்று, வாணியும் - சரசுவதியாறும், காளிந்தியும் - யமுனையாறும், கங்கையாம் விண் ஆறும் - கங்கையாகிய

வீங்குபுனல் வையைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடி யருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடி யருளே.

(இ - ள்.) தூங்கு - அசைகின்ற, சிறை - சிறைகளையுடைய, அறுகால் - வண்டுகள், உறங்கு - துயிலாநின்ற, குழல் - கூந்தலை யுடையவளே, நின் - உனது, துணைத்தோழியர்கள் மேல் - சமானர் களான தோழியர்மீது, குங்குமந்தோயும் - குங்குமத்தோடுகலந்த, பனித்தவுறை - குளிர்ந்ததுளிகளைச்சிதறுகின்ற, சிவிறிவீசு - சிவிறி யால் தூவப்படுகிற, அ - அந்த, குறுந்துளி - சிறு துளிகள், எம் மருங்கும் ஓடி - எல்லாப்பக்கங்களிலுமோடி, வாங்கும் - வளைக்கப் பட்ட, மலை வில்லியார் - மலைவில்லையுடையவரது, விண் உரு நனை ந்து - ஆகாயவுரு நனைதலால், அவர் வனைந்திடு திகம்பரம் - அவர் அணிகின்ற திக்காடையானது, செவ்வண்ணமாச் செய்வது - செந்நிற மாகச்செய்வது, அ - அந்த, செவ்வான வண்ணமொடு - செவ்வான நிறத்தையுடையவரோடு, மஞ்சள் விளையாடல் ஒப்ப - மஞ்சள் விளையாடுவதை நிகர்த்திருக்க, தேங்கு மலை யருவி - நிறைந்த மலை யருவியின், நெடுநீத்தத்து - நீண்டவெள்ளத்தில், மாசுணத்திரள் பெரும்பாம்பின்றொகுதி, புறஞ்சுற்றியீர்ப்ப - புறத்தேசுற்றியிழுக்க சினவேழம் ஒன்று - கோபத்தையுடைய யானையொன்று, ஒரு சுழி சுழலல் - ஒருசுழியிலகப்பட்டுச் சுழல்வது, மந்தரம் - மந்தரமலை யனது, திரைகடல் மதித்தல் மானும் - நீர்திரையாநின்றகடலைக்கடை வதை நிகர்க்கின்ற, வீங்குபுனல் வையை - மிக்கநீரையுடைய வையை யாற்றின், தடந்துறை குடைந்து - பெருந்துறையிற் படிந்து, புது வெள்ளம் - புதுப்பெருக்கில், நீராடியருள். எ - று.

அறுகாலுறங்குகுழல், நின்சேடியர்கள்மேற் குங்குமச்சிவிறி வீசக் குறுந்துளியலைவில்லியார் விண்ணுருநனைந்தவர் வனைந்தி

திசம்பரஞ் செவ்வண்ணமாச்செய்வது, அச்செவ்வானவண்ணரோய் மஞ்சள்விளையாடலேய்ப்ப, மலையருவிநெடுநீத்தத்துயாசுணத்திரள் புறஞ்சுற்றியீர்ப்ப, வேழமொன்று ஒருசுழிச்சுழலல்மந்தரந் திரை கடன் மதித்தன்மானும் வையைத்துறைகுடைந்து புதுவெள்ளீரா டியருள் எனமுடிக்க.

அறுகால் - ஷட்பதம்என்னும் வடமொழிப்பொருள்கோள் தன் மொழித்தொகை. சிவிறி - நீர்தூவுந்துருத்தி. மலையுச்சியினின்று நிலந்தோயுமளவும் இடையறுவொழுக்காய் நீண்டுதோன்றுதலான், மலையருவிநெடுநீத்தம் என்றார். சுழிச்சுழல்வ என்றும்பாடம். சிலை வேழமொன்று என்பதற்சேறப்ச் சுழலவென்பதேயன்றிச் சுழல்வ வென்பது பொருந்தாமையான் அதுபாடமன்மையறிக. திரைகட... என்பதனைத் திரைக்கடல் எனப்பாடமோதுவாருமுளர். அதின் ... மைசயின் பங்கெடுதலினானும் பாடமன்மையறி (௯)

துளிக்கும் பணித்திவலை சிதறக் குடைந்தாடி
துறையிற் றுறைக்க மிழாடும்
தொன்மறை தெளிக்குங் கலைக்கொடி யெனுந்துறை
தோழிமுழ் கிப்பு னன்மடுத்
தொளிக்கும் பதத்துமற் றவளென வனப்பேடை
மீயாடிப் பிடிப்ப தன்மை
பொன்பரி புரத்தொனியு மடநடையும் வெளவின
துணர்ந்துபின் றொடர்வ தேய்ப்ப
நெளிக்குந் தரங்கத் தடங்கங்கை யுடனெட்டி
நித்திலப் பந்தாடவும்
திரைமணித் திரளின் கழுங்கா டவிர்ந்தன்
னெடுந்திரைக் கையெடுத்து

திவலைசிதறக்குடைந்தாடுதுறையில், தமிழொடுந் தொன்மறை தெளிக்குங்கலைக்கொடியெனுந்தோழி, புனன்மடுத்தொளிக்கும்பதத்து, அன்னப்பேடை அவளைஒடிப்பிடிப்பது, அம்மை, பரிபுரத்தொனியும் மடநடையும் வெளவினதுணர்ந்து பின்றொடர்வதேய்ப்ப, கங்கையுடனோட்டி நித்திலப்பந்தாடவும் மணித்திரளின் கழங்காடவும், தன் திரைக்கையெடுத்து விளிக்கும்வைகை நெடுவெள்ளநீராடியருள் எனமுடிக்க.

துறைத்தமிழ் - அகமும்புறமுமாகிய பொருட்கூற்றினையுடைய தமிழ். வடமொழி தென்மொழிமுதலிய எவ்வகைமொழிகட்கும் அதிதேவதையாதலின், சரசுவதியைத் துறைத் தமிழொடுந்தொன்மறை தெளிக்குங்கலைக்கொடி என்றார். அன்னப்பேடையை அவளெனக்கருதற்குக் காரணம் மென்னடையும் வெண்ணிறமுமென்க.

## வேறு.

துங்க முலைப்பொற் குடங் கொண்டு
 தூநீர் நீந்தி விளையாடுந்
துணைச்சே டியர்கண் மேற்பசும் பொற்
 சுண்ணமெறிய வறச்சேந்த
அங்கண் விசும்பி னின்குழற்காட்
 டறுகாற் சுரும்ப ரெழுந்தார்ப்ப
ஐயன் றிருமே னியிலம்மை
 யருட்கட் சுரும்பார்த் தெழும்மானச்
செங்க ணிளைஞர் களிக்காமத்
 தீமூண் டிடக்கண் டிளமகளிர்
செழுமென் குழற்கூட் டகிற்புகையாற்
 றிரள்காய்க் கதலி பழுத்துநறை
பொங்கு மதுரைப் பெருமாட்டி
 புதுநீ ராடி யருளுகவே

பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே.

(இ - ள்.) துங்கம் - உயர்வாகிய, முலை - தனங்களென்கிற பொன்குடங்கொண்டு - பொற்குடத்தைத் துணையாகக்கொண்டு தூநீர்நீந்திவிளையாடும் - பரிசுத்தமாகியநீரில் நீந்திவிளையாடுகின்ற துணைசேடியர்கள்மேல் - உனக்குச்சமானைகளான தோழியர்மீது பசும்பொற்சுண்ணம் எறிய - பசும்பொற்சுண்ணத்தை யெடுத்துவீச, (அதனால்) அறச்சேந்த - மிகச்சிவந்த, அம்கண்விசும்பில் - அழகியவிடத்தையுடைய ஆகாயத்தில், நின்குழல்காட்டு - உன்கூந்தற்காட்டிலுள்ள, அறுகால்சுரும்பர் - ஆறுகால்களையுடைய வண்டுகள் எழுந்துஆர்ப்பது - எழுந்துஆரவாரிப்பது, ஐயன்திருமேனியில் - இறைவனது திருமேனியின்மேல், அம்மை - அம்மே, அருட்கண்சுரும்பு - அருட்கண்ணாகியவண்டுகள், ஆர்த்தெழல்மான - ஆரவாரித்தெழுவதை நிகர்த்திருக்க, செங்கண் இளைஞர் - செவந்தகண்களையுடைய இளையோரது, களிக்காமத்தீமூண்டிட - களித்தற்குரிய காமத்தீமூளும்படி, கண்டு - பார்த்து, இளமகளிர் - சிறுபெண்கள். செழுமெல்குழற்கு - செழுமையாகிய மெல்லியகூந்தலுக்கு, ஊட்டு - ஊட்டுகின்ற, அகில்புகையால் - அகிற்புகையினுல், திரள்காய்கதலி பழுத்து - திரண்டகாய்களையுடைய வாழைகள் பழுத்து, நறைபெருகும் - தேன்பெருகுகின்ற, மதுரைப்பெருமாட்டி - மதுரைக்கிறைவியே, புதுநீராடி யருளுக———, பொருநைத்துறைவன் - தாமிரபர்ணியாற்றுத் துறையையுடையவனாகிய மலயத்துவசபாண்டியன் வளர்த்த, பொற்பாவாய் - பொற்பாவைபோல்பவளே, புதுநீராடியருளுக. எ - று.

முலைக்குடங்கொண்டு நீர்நீந்திவிளையாடுஞ் சேடியர்கள்மேல் அம்மை, சுண்ணமெறிய அறச்சேந்த விசும்பினின்குழற்காட்டுச்சுரும்பெழுந்தார்ப்பது, ஐயன்திருமேனியில் அருட்கட்சுரும்பார்த்தெ

டமான, இளைஞர் காமத்தீமூண்டிடக் கண்டிளமகளிர் குழற்கூட்
டகிற்புகையால் கதலிபழுத்து நறைபொங்கு மதுரைப்பெருமாட்டி
துநீராடியருளுக எனவும், பொருநைத்துறைவன் பொற்பாவாய்
துநீராடியருளுக எனவும் வினை முடிக்க.

மாதர்தம்முலைக்குடங்கொண்டு நீர்நீந்துதல் தென்னாட்டியாறு முதலியவற்றிற்கண்கூடாகக் காணலாமாதலால், துங்கமுலைப்பொற் குடங்கொண்டு தூநீர்நீந்திவிளையாடும் துறைச்சேடியர் என்றார்-சேடியரென்றது - பூமகள்நாமகள் முதலியோரை. சேந்த - செம்மைப் பண்படியாகப் பிறந்த பெயரெச்சம். புகையூட்டிமுதிர்காய்களைக் கனிவிப்பதோர் வழக்குண்மையான் அகிற்புகையாற்றிரள் காய்க்கதலிபழுத்து என்றார். (௬)

இழியும் புனற்றண் டுறைமுன்றி
 லிருந்தெழ் பெருமான் மணங்கமழ்ந்த
இடமென் றலர்வெண் கமலப்பெண்
 ணிசைப்பக் கசிந்துள் ளுருகியிரு
விழியுஞ் சிவப்ப வானந்த
 வெள்ளம் பொழிந்து நின்றனையால்
மீண்டும் பெருக விடுத்த வற்கோர்
 வேலையிடுகென் மிசையன்றே
பிழியு நறைக்கற் பகமலர்ந்த
 பிரச மலர்ப்பூந் துகண்முழுக்கும்
பிறைக்கோட் டயிரா வதங்கூந்தற்
 பிடியோ டாடத் தேனருவி
பொழியும் பொழிற்கூ டலிற்பொலிவாய்
 புதுநீ ராடி யருளுகவே

பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே.

(இ - ள்.) இழியும்புனல்-மலையினின்றிழிகின்றநீரையுடைய, தண்துறைமுன்றில் - குளிர்ந்ததுறைமுற்றமாகிய, இது - இது, எம்பெருமான் - எம்மிறைவன், மண்சுமந்தஇடம்என்று - மண்சுமந்தஇடமென்று, அலர்வெண்கமலப்பெண் - மலர்ந்தவெண்டாமரைமலரிலிருப்பவளாகிய சரசுவதி, இசைப்ப - சொல்ல, உள்கசிந்து உருகி - மனங்கசிந்துருகி, இரு விழியும் சிவப்ப - இருகண்ணுஞ் செவக்க, ஆநந்தவெள்ளம் பொழிந்து - ஆநந்தக்கண்ணீர் சொரிந்து. நின்றனையால் - நின்றாயாதலால், மீண்டும் பெருகவிடுத்து - மறுபடியும் பெருகவிட்டு, அவர்க்கு - அவ்விறைவருக்கு, ஓர் வேலையிடுதல் - ஒருவேலைவைத்தல், மிகை அன்றே - குற்றமல்லவா, பிழியும்நறை - சுரக்கின்ற மணமுள்ள, கற்பகம் மலர்ந்த - கற்பகமரம்பூத்த, பிரசமலர் - தேனோடுகூடினமலர்களின், பூதுகள் - அழகாகிய மகரந்தத்தில், மூழ்கும்-குளிக்கின்ற, பிறைகோடு-பிறைபோலுங்கொம்பினையுடைய, அயிராவதம் - அயிராவதமானது, கூந்தல் பிடியோடு ஆட - கூந்தலையுடைய பெண்யானையுடன் விளையாடும்படி, தேன்அருவிபொழியும்-தேனருவியைச்சொரிகின்ற, பொழில்-சோலைகள்சூழ்ந்த, கூடலில் - மதுரைப்பதியில், பொலிவாய்-விளங்குகிற எம்மிறைவியே, புதுநீராடியருளுக———, பொருநைத்துறைவன் பொற்பாவாய், புதுநீராடியருளுக. எ - று.

இழிதல் - தங்குதல், அன்றி ஆழ்தல் எனினுமாம். முன்னே செம்மனச்செல்வியின் பொருட்டு மண்சுமந்த இறைவர்க்கு நீயும் ஆநந்தக்கண்ணீரைப் பெருக்கி, அப்பெருக்கையடைக்க மண்சுமக்கும் வேலையிடல்மிகையாமென்பார், விழியுஞ் சிவப்ப வாநந்தவெள்ளம்பொழிந்து நின்றனையால் மீண்டும் பெருக விடுத்தவர்க்கோர் வேலையிடுதன் மிகையன்றே என்றார். அயிராவதம் மதச்செருக்காற்

கற்பக மலர்த்தூகளிற் றன்கோடுகுளிக்கக்குத்திவிளையாடுதலேன்ற, கற்பகமலர்ந்த பிரசமலர்ப்பூந்துகண் மூழ்கும் பிறைக்கோட்டயிராவதம் என்றார். கூந்தல் - பெண்மயிர், அது இவ்விடத்துப் பிடியின் பிடர்மயிருக்காயிற்று. (எ)

மறிக்குந் திரைத்தண் புனல்வையை
வண்ட லிடுமண் கூடைகட்டி
வாரிச் சுமந்தோர்க் கம்மைதுணை
மணிப்பொற் குடத்திற் கரைத்தூற் றும்
வெறிக்குங் குமச்சே றெக்கரிடும்
விரைப்பூந் துறைமண் போலொருத்தி
வெண்பிட் டிடவு மடித்தொருவன்
வேலை கொளவும் வேண்டுமெனக்
குறிக்கு மிடத்திற் றடந்தூநீர்
குடையப் பெறினைக் கங்கைதிருக்
கோடீரத்துக் குடியிருப்புங்
கூடாபோலும் பொலன் குவட்டுப்
பொறிக்குஞ் சுறவக் கொடியுயர்த்தாய்
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே.

(இ - ள்.) மறிக்குந்திரை - காற்றினால் மறிக்கப்படுகின்ற அலைகளையுடைய, தண்புனல் - குளிர்ந்தநீரோடு கூடிய, வையை - வையையாற்றின், வண்டலிடுமண் - வண்டலிட்ட மண்ணை, கூடை கட்டிவாரி - கூடைகட்டிவாரி, சுமந்தோர்க்கு - சுமந்தவராகிய சிவபெருமானுக்கு, அம்மை - அம்மையே, துணை - இரண்டாகிய

மணி - மணிமயமாகிய, பொற்குடத்தில் - பொற்குடத்தால், கரைத்து வார்க்கும் - கரைத்துவார்க்கின்ற, வெறி - மணமுள்ள, குங்குமச்சேறு - குங்குமக்குழம்பானது, எக்கரிடும் - மேலேறப்பண்ணுகின்ற, விரை - மணமிகுந்த, பூந்துறை - அழகிய துறையில், மண்போல் - மண்போல, ஒருத்தி வெண்பிட்டிடவும் - வெண்மையாகிய பிட்டிடவும், ஒருவன் அடித்து வேலைகொளவும் - ஒருவன் அடித்து வேலைவாங்கவும், வேண்டுமென - வேண்டுமென்று, குறிக்குமிடத்தில் - நினைக்குமிடத்தில், தடம் தூநீர் குடையப்பெறின் - பெரிய பரிசுத்தமாகிய நீரில் மூழ்கப்பெற்றால், அ - அந்த, கங்கை - கங்கையானவள், திருக்கோமரத்து - திருச்சடாமகுடத்தில், குடியிருப்பும் - குடியிருத்தலும், கூடாபோலும் - கூடாதுபோலும், பொலன்முகட்டு - பொன்மலைமேல், பொறிக்கும் - எழுதப்பட்ட, சுறவக்கொடி உயர்த்தாய் - மீனக்கொடியை உயர்த்தவளே, புதுநீராடியருளுக - பொருளை ——, எ - று.

வேறு.

பொற்கொடியோடு மலர்க்கொடி கொய்து
தொடுத்தவிளைத் தொடையும்
கத்தரி தீட்டிய சிந்தூர முமிரு
துங்கக் கொங்கைகளின்
விற்கொடி கோட்டிய குங்கும முங்குடை
வெள்ளங் கொள்ளைகொள
வெளிபெய கண்டுநின் வடிவழ கையன்
விழிக்கு விருந்துசெய
இற்கொடியோடு கயற்கொடி வீர
னெடுத்த கருப்புவி லும்
இந்திர தனுவும் வணங்க வணங்கு
மிணைப்புருவக்கொடிசேர்

பொற்கொடி யிமய மடக்கொடி வைகைப்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே.

(இ - ள்.) சொற்கொடியோடு - நாமகளோடு, மலர்க்கொடி - பூமகள், கொய்துதொடுத்த - பறித்துத்தொடுத்த, விரைத்தொடையும் - மணமாலையும், சுந்தரிதீட்டிய - இந்திராணியெழுதின, சிந்தூரமும் - சிந்தூரத்திலகமும், இரு - இரண்டாகிய, துங்கம் - உயர்ந்த, கொங்கைகளின் - தனங்களின்மேல், விற்கொடிகொட்டிய - விற்கொடியாகிய ரதிதேவி அப்பிய, குங்குமமும் - குங்குமமும், (இவையாவும்) குடை - மூழ்குகின்ற, வெள்ளம் - நீர்ப்பெருக்கானது, கொள்ளைகொள - கொள்ளைகொண்டுபோக, வெளியேகண்டு - புறத்தேநோக்கி, நின்வடிவழகு - உன்திருமேனியின் அழகானது, ஐயன் விழிக்கு - இறைவன்கண்களுக்கு, விருந்துசெய - விருந்திட, இற்கொடியோடு - தன்மனைவியாகிய இரதியோடுகூடி, கயற்கொடிவீரன் - மீனக்கொடியையுடையமகாவீரனாகிய மன்மதன், எடுத்த - தாங்கின, கருப்புவில்லும் - கரும்புவில்லும், இந்திரதநுவும் - இந்திரவில்லும், வணங்க - வணங்கும்படி, வணங்கும் - வளைந்த, இணை - இரண்டாகிய, புருவக்கொடிசேர் - புருவக்கொடிகளமைந்த, பொற்கொடி - பொற்கொடியே, மடம் இமயக்கொடி - இளமையாகிய இமயக்கொடியே, வைகைப் புதுநீராடுக———, பொருநைத்துறையொடு - பொருநைத்துறையுடன், குமரித்துறையவள் - குமரித்துறையையுமுடையவளே, புதுநீராடுக——— எ - று.

கொள்ளைவெள் ளருவி படிந்திடு மிமயக்
கூந்தன் மடப் பிடிபோல்
கொற்கைத் துறையிற் சிறைவிரி யப்புனல்
குடையு மனப்பெடைபோல்

தெள்ளமு தக்கட னடுவிற் றோன்று
செழுங்கம லக்குயில்போல்
தெய்வக் கங்கைத் திரையூ டெழுமொரு
செம்பவ ளக்கொடிபோல்
கள்ளவிழ் கோதையர் குழலிற் குழலிசை
கற்றுப் பொற்றருவிற்
களிநற வுண்ட மடப்பெடை யோடு
கலந்து முயங்கிவரிப்
புள்ளுறை பூம்பொழின் மதுரைத் துரைமகள்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே.

(இ - ள்.) கொள்ளை - மிகுதியாகிய, வெள்அருவிபடிந்திடும்-வெண்மையாகிய அருவியாற்றிற்படிகின்ற, கூந்தல் இமயமடப்பிடி போல் - கூந்தலையுடைய இமயமடப்பிடிபோலவும், கொற்கைத் துறையில் - கொற்கைத்துறையிலே, சிறைவிரிய - சிறைவிரியும்படி, புனல்குடையும் - நீராடுகின்ற, அன்னப்பெடைபோல் - பெட்டையன்னம்போலவும், தெள்அமுதக்கடல்நடுவில் தோன்று-தெளிவாகிய பாற்கடலினிடையே தோன்றின, செழுகமலக்குயில்போல் - செழியதாமரைக்குயில்போலவும், தெய்வம்-தெய்வத்தன்மையையுடைய, கங்கைத்திரையூடு - கங்காநதியின் அலையினிடையே,எழும்-எழுகின்ற, ஒருசெம்பவளக்கொடிபோல் - ஒருசெம்பவளக்கொடிபோலவும், கள்அவிழ்கோதையர் - தேனொடுவிரிகின்ற பூமாலையையணிந்த மாதருடைய, குழலில் - கூந்தலில், குழலிசைகற்று - குழலோசையைக்கற்று, பொற்றருவின்களிநறவுண்ட - பொன்னிறமாகிய கற்பகத்தருவின் களிப்பைத்தருகின்ற தேனையுண்ட, மடப்பெடை

யோடு - இளமபெடையுடன், கலந்துமுயங்கி - கூடிப்புணர்ந்து, வரி புள்உறை - வரிவண்டுகள் வாழ்கின்ற, பூம்பொழில் - பூஞ்சோலைகள்சூழ்ந்த, மதுரைத்துறைமகள் - மதுரைத்துறைமகளே, புதுநீராடுக———, பொருநை எ - று.

கொற்கை மதுரையைச்சார்ந்த ஓரூர். கமலக்குயில்-திருமகள். பொற்றரு - பொன்மயமாகிய பஞ்சதருச்சோலையெனினுமாம். வரி- இரேகை. (கூ)

---

## க0 - வது. ஊசற்பருவம்.

ஒள்ளொளிய பவளக் கொழுங்கான் மிசைப்பொங்கு
மொழுகொளிய வயிர விட்டத்
தூற்றுஞ் செழுந்தண் ணிலாக்கால் விழுந்தனைய
வொண்டரள வடம்வீக் கியே
அள்ளிட வழிந்துசெந் தேறல்துளும் பும்பிணா
வருணரத் தப்ப லகைபூக்
காடுகின் றேற்றமப் பரிதிமண் டலம்வளை
தரும்பெருங் கடவை யெய்ப்பத்
தெள்ளுசுவை யமுதங் கனிந்தவா னத்தத்
திரைக்கடன் மடுத்துமுக் குஞ்
செல்வச் செருக்கர்கண் மனக்கமல மொத்தமுது
சேக்கையிற் பழைய பாடற்
புள்ளொலி யெழக்குடி புகுந்தசங் கரவல்லி
பொன்னூச லாடியருளே
புழுதிநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே.

(இ - ள்.) ஒள்ஒளிய - ஒட்பமாகியவொளியையுடைய, கொழு - செழுமையாகிய, பவளக்கால்மிசை - பவளக்கால்களின்மேல், பொங்கும் - மிகுந்த, ஒழுகுஒளிய - வழிகின்ற ஒளியையுடைய, வயிரவிட்டத்து - வயிரவிட்டத்தில், ஊற்றும் - பொழிகின்ற, செழு - செழுமையாகிய, தண் - குளிர்ச்சியுள்ள, நிலாக்கால் விழுந்தனைய - நிலாவின்கால்விழுந்தாற்போன்ற, ஒள் - ஒள்ளிய, தரளவடம்வீக்கி - முத்துவடத்தைக்கட்டி, அள்ளிட - அள்ளிக்கொள்ளும்படி, வழிந்து செறிந்து - வழிந்து செறிந்து, ஒளிதுளும்பும் - ஒளிததும்புகின்ற, கிரணம் - கதிர்களையுடைய, அருணரத்நப்பலகைபுக்கு - மாணிக்கப்பலகையின்மேலேறி, ஆடும் - ஆடுகின்ற, நின்தோற்றம் - உன்காட்சியானது, அ - அந்த, பரிதிமண்டலம்வளர் - சூரியமண்டலத்தில் வளர்கின்ற, அரும்பெருஞ்சுடரை எய்ப்ப - அரிய பெரியசூரியனை நிகர்க்க. தெள்ளு - தெளிந்த, சுவைஅமுதம்கனிந்த - சுவையோடுகூடிய அமிர்தத்தின்றன்மை முதிர்ந்த, திரை - அலைகளையுடைய, ஆநந்தக்கடல் மடுத்து - இன்பக்கடலிற் படிந்து, உழக்கும் - கலக்குகிற, செல்வம் - சிவாநந்தச்செல்வத்தாலுண்டாகிய, செருக்கர்கள் - செருக்கினையுடையவர்களாகிய அடியார்களுடைய, நெக்க மனக்கமலம் - விரிந்த மனத்தாமரையாகிய, பூஞ்சேக்கையில் - அழகாகிய படுக்கையில், பழைய பாடல் - பழம்பாடலாகிய, புள் ஒலி எழ - வண்டோசையுண்டாக, குடி புகுந்த - குடி புக்க, சுந்தரவல்லி - சுந்தரவல்லியே, பொன்னூசலாடி யருள் - பொன்னூசலாடி யருள்க, புழுகு நெய் - புழுகுநெய்யாடிய, சொக்கர் - சொக்கநாதரது, திரு அழகினுக்கு - சிறந்த அழகுக்கு, ஒத்த - இணங்கின, கொடி - பூங்கொடிபோல்வாளே, பொன் ஊசல் ஆடி யருள் - பொன்னூசலாடி யருள்க. எ - று.

கால் விழுதல் - காலூன்றுதல். அள்ளிட என்றது ஒளி மிகுதியுஞ் செறிவுந் தோன்றற்கென்க. அருணரத்நம் - பதுமராகம் எனி

னுமாம். யானெனதென்னுஞ் செருக்கறுத்த மெய்யடியார்க்குச் செருக்கெய்தலுண்டாயிற்றெனின், அவரெய்திய தொட்டற்ற சிவா னந்தப் பெருஞ்செல்வமாதலி னுண்டாமென்க. "இறுமாந் திருப் பன்கொலோ, ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டு, சிறுமா னேந்தி தன் சேவடிக் கீழ்ச்சென்றங் கிறுமாந் திருப்பன்கொலோ" என்றார் வாகீசர். பழைய பாடல் - வேதம். அதனிற் பழையதொன்றின் மையான் அதனைப் பழைய பாடல் என்றார். (௧௦)

விற்பொலிய நிலவுபொழி வெண்ணித் திலம்பூண்டு
        விழுதுபட மழுகதிர்விடும்
வெண்டரள வூசலின் மிசைப்பொலிக பண்டரிக
        விட்டுப் பொலிந்து மதுரச்
சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின் றவளுக்கொர்
        சொருபமென் பதுமிவனிலாத்
தோற்றுமதி மண்டலத் தமுதமா யம்மைந்
        தோன்றுகின் றதும்விரிப்ப
எற்பொலிய வொழுகுமுழு மாணிக்க மணிமுகப்
        பேழைமழை முகிறவழ் வதங்
வெயிற்சுடர்க் கடவுடிரு மடியிலன் மடமக
        ளிருந்துவிளை யாடலேய்க்கும்
பொற்புரிசை மதுரா புரிப்பொலி திருப்பாவை
        பொன்னூச லாடி யருளே
புழுகுநெய்ச் சொக்கர் திருவழகினுக் கொத்தகொடி
        பொன்னூச லாடி யருளே.

(இ - ள்.) வில்பொலிய - ஒளிமிகும்படி, நிலவு பொழி - நிலவைச்சொரிகின்ற, வெள் - வெண்மையாகிய, நித்திலம் பூண்டு -

முத்துவடமணிந்து, விழுது பட - விழுது விழ, மழ கதிர் விடும் - இளங்கதிரெறிக்கின்ற, வெள் தரள ஊசலின் மிசை - வெள்ளிய முத்தூசலின்மேல், பொலிதல் - நீ மிக்கு விளங்குவது, புண்டரிக வீட்டில் - வெண்டாமரை மலராகிய வீட்டில், பொலிந்து - மிக்கு விளங்கி, மதுரச்சொல் பொலி : மதுரமொழிகளோடு கூடிப்பொலி கின்ற, பழம் பாடல் - வேதத்தை, சொல்லுகின்றவளும் - சொல்லு கின்றவளாகிய சரசுவதியும், நின் சொரூபம் என்பதும் - உன் சொ ரூபமென்பதையும், இள நிலா தூற்றும் - இளஞ்சந்திரிகையை வீசு கிற, மதி மண்டலத்து - சந்திரமண்டலத்தில், அமுதமாய் - அமிர்த ரூபமாய், அம்மை - அம்மே, நீ தோன்றுகின்றதும் - நீ காணப்படு வதையும், விரிப்ப - விரித்துணர்த்த, எல் பொலிய ஒழுகும் - ஒளி மிக் கொழுகுகின்ற, மழு மாணிக்கம் - மழு மாணிக்கங்களிழைத்த, மணி - அழகாகிய, முகப்பு - முகப்பில், மழை முகில் - குளிர்ந்த மேகங்கள், எறி தவழ்தரு - எறிந்தவழ்தல், அ - அந்த, எறி சுடர் கடவுள் - ஒளியை வீசுகின்ற சூரியதேவனது, திருமடியில் - அழகிய மடித்தலத்தில், அவன் - அந்தச் சூரியதேவனது, மடமகள் - இளஞ் சிறுமியானவள், இருந்து விளையாடல் - தங்கியிருந்து விளையாடு வதை, ஏய்க்கும் - நிகர்க்கிற, பொற் புரிசை - பொன்மதில் சூழ்ந்த, மதுராபுரி - மதுரைப்பதியில், பொலி - விளங்குகின்ற, திருப்பா வை - அழகிய பிரதிமைபோல்வாளே, பொன்னூசலாடியருள்——, பழகு——ஆடியருள். எ - று.

புண்டரிகம் - வெண்டாமரை. முகப்பு - தலைப்பு. சுடர்க்கட வுள் மகள் - காளிந்தி. (உ)

உருகிய பசும்பொன் னசும்பவெயில் வீசுபொன்
னூசலை யுதைந் தாடலும்
ஒண்டளி ரடிச்சுவ டுறப்பெறு மசோகநற
வொழுகு மலர் பூத்துதிர் வதுன்

பொன் செய் குன்று - பொன்னானியன்ற செய்குன்றுகள், மழ கதிர் எறிப்ப - இளங்கதிரை வீச, எழு - உண்டாகின்ற, செஞ் சோதி யூடு - செவ்வொளியினிடையே, இளமதி இமைப்பது - இளஞ்சந்திரன் விளங்குவது, உன் திருமுகச்செவ்வி வேட்டு - உன் சிறந்த முகத்தழகைப்பெற விரும்பி, அவன் - அந்தச் சந்திரன், எழு நாத்தலை-நெருப்பிடை நின்று, தவம் புரிவது கடுக்கும் தவஞ்செய் தலை நிகர்க்கின்ற, மதுராபுரி - மதுராபுரியில் வாழ்கின்ற, மடக் கிள்ளை - இளங்கிளிபோல்வாளே, பொன்னூசலாடி யருள்———, புழுகு———ஆடியருள், எ - று.

"சுவடு - தழும்பு. எந்தையார் நிற்பது தெரிந்து என்றமையால் செஞ்சிலைக்கள்வன் என்பது மன்மதனுக்காயிற்று. எழு நா - எழு நாக்களையுடைய திக்கடவுள். தலை - எழனுருபு. (௧)

கங்கைமுடி மகிழ்நர் திருவுளமசைந் தாடக்
 கலந்தாடு பொன்னூசலக்
கடவுரு நோக்கத்து நெக்குருகி யிடநின்
 கடைக்கணுக் கத்து மற்றச்
செங்கன்விடை யவர்மனமு மொக்கக் கரைந்துருகு
 செய்கையவர் சித்த மேபொற்
றிருவூச லாவிருந் தாடுகின் றமெனுஞ்
 செய்தியை யெடுத் துரைப்ப
அங்கணெடு நிலம்விடர் படக்கிழித் தோடுவே
 ரடியிற் பழுத்த பலவின்
அளிபொற் சுளைக்குடக் கனியுடைந் தூற்றுதே
 னருவியில மேழூ முட்டிப்
பொங்கிவழி பொழின்மதுர மதுரைநா யகிதிருப்
 பொன்னூச லாடி யருளே

புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடி யருளே.

(இ - ள்.) கங்கை - கங்கையை, முடி-திருமுடியிலேயுடைய, மகிழ்நர் - உன் கொழுநரது, திருவுளம் - திருவுள்ளமானது, அசைந் தாட - அசைந்தாடும்படி, கலந்து ஆடு - நீ பொருந்தியாடுகின்ற, பொன்னூசல் - பொன்னூசலானது, அக்கடவுள் திருநோக்கத்து - அந்த இறைவரது திருக்கண்ணோக்கால், நெக்கு உருகியிட-நெகிழ்ந் துருகாநிற்க, நின் கடைக்கண் நோக்கத்து - உன் கடைக்கண்ணோக் கால், அ - அந்த, செங்கண் விடையவர் மனமும் - செவந்த கண் களையுடைய இடபத்தை வாஹநமாகவுடைய சிவபெருமானது திரு வுள்ளமும், ஒக்கக் கரைந்துருகு செய்கை - கூடக் கரைந்துருகா நின்ற செய்கையானது, அவர் சித்தமே - அவரது மனத்தையே, பொன் திருவூசலா விருந்து - பொன்னனியன்ற அழகிய வூசலாகக் கொண்டிருந்து, ஆடுகின்றாய் என்னும் - ஆடுகிறாயென்கிற, செய் தியை - செய்கையை, எடுத்துரைக்க - எடுத்துச்சொல்லாநிற்க, அம் கண் - அழகிய இடத்தையுடைய, நெடு நிலம் - பெரிய நிலமானது, விடர்பட - வெடிக்கும்படி, கிழித்து ஓடு - பிளந்தோடுகின்ற, வேர் அடியில் - வேரினடியில், பழுத்த - கனிந்த, பலவின் - பலாமரத் தின், அளி - அளிந்த, பொன் - பொன்னிறமான, சுளை - சுளைகளை யுடைய, குடக்கனி - குடம்போற்பருத்த கனிகள், உடைந்து - சிதைந்து, ஊற்று - கொட்டுகின்ற, தேன் அருவி - தேனருவிகள், பிலம் ஏழும்முட்டி - பாதாள லோகங்களேழினும் சென்றுதாக்கி, பொங்கிவழி - பொங்கி வழிதற்கிடமாகிய, பொழில் - சோலைகள் சூழ்ந்த, மதுரம் - இனிமையைத் தருவதாகிய, மதுராநாயகி - மதுராபுரிக் கிறைவியே, திருப்பொன்னூசலாடியருள்——புழுகு—— அருள். எ - று.

கடவுள் திருநோக்கம் நெருப்பாதலால், பொன்னூசலக் கடவுட்கு நோக்கத்து நெக்குருகியிட,—என்றார். (௪)

சேர்க்குஞ் சுவைப்பாட லமுதொழுக வொழுகுபொற்
றிருவூசல் பாடி யாடச்
சிவபிரான் றிருமுடி யசைப்பமுடி மேற்பொங்கு
செங்கணர வரசி னம்மைத்
தார்க்கும் பணாடவி யசைப்பச் சராசரமு
மசைகின்ற தம்மனை யசைந்
தாடலா லண்டமு மகண்டபகி ரண்டமு
மசைந்தாடு கின்ற தெய்வக்
கார்க்கொந் தளக்கோதை மடவியர் குழற்கூட்டு
கமழ்நறும் புகைவின் மிசைக்
கைபரந் தெழுவதரு மாமிரவி மண்டலங்
கைக்கொள விருட்படலம் வான்
போர்க்கின்ற தொக்குமது ராபுரி மடக்கிள்ளை
பொன்னூச லாடி யருளே
பழுதுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடி யருளே.

(இ - ள்.) சேர்க்கும் - சேர்க்கப்பட்ட, சுவை - சுவையுள்ள, பாடல் - பாடல்களாகிய, அமுது ஒழுக - அமிர்தம் ஒழுகாநிற்க, ஒழுகு - அழகொழுகாநின்ற, திரு - சிறந்த, பொன்னூசல் - பொன்னூசலின் சிறப்பை, பாடியாட - பாடியாடவும், சிவபிரான் - சிவபெருமானானவர், திருமுடி அசைப்ப - திருமுடியை அசையாநிற்கவும், முடிமேல் - அவரது திருமுடிமேல், பொங்கு - விளங்குகின்ற, செங்கண் - செவந்த கண்களையுடைய, அரவரசு - அரவரசனாகிய

ஆதிசேடன், அகிலம்வைத்து ஆர்க்கும் - உலகமுழுதும் வைத்துச் சுமக்கின்ற, பணாடவி - பணக்காட்டை, அசைப்ப - அசையா நிற்கவும், சராசரமும் அசைகின்றது - சராசரப் பொருள்களெல்லாம் அசைதல், அம்மனை - தாயானவள், அசைந்தாடலால் - அசைந்தாடுதலால், அண்டமும் - இந்த லோகங்களும், அகண்ட பகிரண்டமும் - அகண்டமாகிய பகிரண்டங்களும், அசைந்தாடுகின்றது எய்ப்ப - அசைந்தாடுவதை நிகர்த்திருக்க, கார் - மேகம்போன்ற, கொந்தளக் கோதை - குழலிற் பூமாலையை யணிந்த, மடவியர் - இளமாதரது, குழற்கு ஊட்டு - கூந்தலுக்கு ஊட்டுகின்ற, கமழ் - பரிமளிக்கிற, நறும்புகை - நறிய மணமுள்ள புகையானது, விண்மிசை - ஆகாயத்தின் மீது, கைபரந்து எழுவது - ஒழுங்காகப் பரவி யெழுவது, உருமாறு - உருவமாறின, இரவி மண்டலம் - சூரிய மண்டலத்தைக் கைக்கொள - கைக்கொள்ளுதலால், இருட்படலம் - இருட்டொகுதியானது, வான் - ஆகாயத்தை, போர்க்கின்றது ஒக்கும் - மறைப்பதை நிகர்த்தற்கிடமாகிய, மதுராபுரி - மதுரா நகரத்தில் வாழ்கின்ற, மடக்கிள்ளை - இளங்கிளி போல்வாளை, பொன்னூசலாயருள்———புழுகுநெய் - பொன்னூசலாடியருள்———, எ-று.

தேர்க்கோல மொடுநின் றிருக்கோல முங்கண்டு
    சிந்தனை புழுங்கு கோபத்
தீபவிய மூண்டெழுங் காமா னலங்கான்ற
    சிகையென வெழுந்து பொங்குங்
கார்க்கோல வேணியர்த முள்ளமென வேபொற்
    றடஞ்சிலை யுமுருகி யோடத்
தண்மதி முடித்ததும் வெள்விடைக் கொண்மணி
    தரித்ததும் விருத்த மாகக்
கார்க்கோல நீலக் கருங்களத் தேரொருவர்
    செங்களத் தேற்ற லயாக்

கட்கணை தூரக்குங் கரும்புருவ வில்லொடொரு
கைவிற் குனித்து நின்ற
போர்க்கோல மேதிரு மணக்கோல மானபெண்
பொன்னூச லாடி யருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடி யருளே.

(இ - ள்.) தேர்க்கோலமொடு - தேரழகோடு, நின் - உனது. திருக்கோலமும் - திருக்கோலத்தையும், கண்டு - நோக்கி, சிந்தனை புழுங்கு - மனம்புழுங்குகின்ற, கோபத்தீ அவிய - கோபாக்கினி அவியும்படி, மூண்டு எழும் - மூண்டெழுகின்ற, காமா நலம் - விரகாக்கினியானது, கான்ற - உமிழ்ந்த, சிகையென-கொழுந்துபோல, எழுந்து பொங்கும் - எழுந்து விளங்குகின்ற, தார்க்கோல வேணியர் - கொன்றைப்பூமாலையி னழகமைந்த சடாமகுடத்தை யுடையவராகிய சிவபெருமானது, உள்ளம் எனவே - மனமென்றே சொல்லும்படி, பொன் தடம் சிலையும் - பொன்மலையாகிய வில்லும், உருகி ஓட - உருகியோடாநிற்க, தண்மதி முடித்ததும் - குளிர்ந்த பிறைமதியை முடித்துக்கொண்டதும், வெள் விடைக்கு - வெண்மையாகிய இடபத்துக்கு, ஒள் மணி தரித்ததும் - ஒட்பமாகிய மணியைத் தரித்ததும், விருத்தமாக - வீணாக, கார்க்கோலம் - மேகத்தினழகமைந்த, நீலம் - நீலநிறங்கலந்த, கருங்களத்தோடு-கருமிடற்றோடு, ஒருவர் - ஒப்பற்றவராகிய சிவபெருமான், செங்களத்து ஏற்று-போர்க்களத்தி லெதிர்த்து, அலமர - (வெற்றியடையாமையால்) மனமயங்காநிற்க, கண் கணை தூரக்கும் - கண்ணாகிய பாணங்களைப் பிரயோகிக்கிற, கரும்புருவ வில்லொடு - கரிய புருவமாகிய வில்லுடனே, ஒரு - ஒப்பற்ற, கைவில் குனித்து நின்ற - கைவில்லை வளைத்து நின்ற, போர்க்கோலமே - போர்க்கோலந்தானே, திருமணக்கோல

மான பெண் - திருமணக்கோலமாகப்பெற்ற பெண்ணே, பொன்னூசலாடி யருள்———, புழுகு நெய்———, ஆடியருள். எ - று.

இச்செய்யுட் செய்தி அம்மை திக்குவிசயஞ் செய்தகாலத்து நிகழ்ந்ததென்றுணர்க. (௯)

குழியும் பசுங்கண் முசுக்கலை வெரீஇச்சிறு
  குறும்பலவி னெடிய பாரக்
கொம்பொடி படத்தூங்கு முட்புறக் கனியின்
  குடங்கொண்டு நீந்தன் மடைவாய்
வழியுங் கொழுந்தே னுவட்டெழு நடங்காவின்
  வள்ளுகிர்க் கருவி ரற்கூன்
மந்திக ளிரிந்தேகும் விசையினில் விசைந்தெழு
  மரக்கோடு பாய வாசிறு
கிழியுங் கலைத்திங்க ளமுதருவி தூங்குவ
  கிளைத்துவண் டுழைபந் தாமாய்க்
கேசவன் கால்வீச வண்டகோ ளகைமுகடு
  கீண்டுவெள் ளருவி பொங்கிப்
பொழியுந் திறத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
  பொன்னூச லாடி யருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
  பொன்னூச லாடி யருளே.

(இ - ள்.) குழியும் - குழிந்த, பசுங்கண் - பசிய கண்களையுடைய, முசுக்கலை - ஆண் குரங்குகள், வெரீஇ - பயந்து, சிறு - சிறிய, குறும்பலவின் - குள்ளமாகிய பலாமரத்தின், நெடிய பாரம் - பெரும் பாரத்தையுடைய, கொம்பு ஒடிபட - கிளைகள் ஒடியும்படி,

தூங்கும் - தொங்குகின்ற, முட்புறக்கனியின் - பலாப்பழமாகிய, குடம் கொண்டு - குடத்தைக்கொண்டு, நீந்த - நீந்திச்செல்லும்படி, மடைவாய் - மடையினிடத்து, வழியும் கொழுந்தேன் - ஒழுகு கின்ற செழுந்தேனனது, உவட்டெழு - பெருகிப்பாய்கின்ற, தடம் காவின் - பெரிய சோலைகளில், வள் உகிர் - கூர்மையாகிய நகங்க ளோடுகூடிய, கரு விரல் - கருமையாகிய விரல்களையுடைய, கூன் மந்திகள் - கூனற் குரங்குகள், இருந்து ஏகும் விசையினில் - தங்கி யிருந்து வேறிடத்துக்குக் குதித்துச்செல்லுகின்ற வேகத்தால், விசைந்து எழு - விசைகொண்டெழுகின்ற, மரக்கோடு பாய - மரக் கிளைகள் பாய்தலால், வயிறு கிழியும் - வயிறு பிளக்கின்ற, கலைத் திங்கள் - கலைகளையுடைய சந்திரனிடத்து நின்றும், அமுது - அமிர்த மானது, அருவி தூங்குவ - அருவிபோலத் தாழ்ந்திழிவன, வண்டு - வண்டுகள், கிளைத்து - தமது சுற்றத்தோடுகூடி, உழு - உழுகின்ற, பை துழாய் - பசிய துளவமாலையை யணிந்த, கேசவன் - திரிவிக் கிரமன், கால் வீச - காலினால் தாக்குதலும், அண்டகோளகை - அண் டகோளத்தின், முகடு கீண்டு - முகடு கிழிந்து, வெள் அருவி பொங் கிப் பொழியும் திறத்தினை நிகர்க்கும் - வெண்மையாகிய ஆகாயகங் கையின் அருவி பொங்கிப் பொழியுந் தன்மையை நிகர்த்தற்கிடமா கிய, மதுரைத்தலைவி - மதுரைக்கரசியே, பொன்னூசலாடி யருள் ———, எ - று.

பசுங்கண் என்பதில் பசுமை மஞ்சணிறத்தின் மேற்று.

உவட்டெழல் ஒருசொல். வள் உகிர் - வாள்போலும் நகம் எனினுமாம். கூன் மந்தி என்புழிற் கூன் சாதியடை. இரிந்தேகும் என்றும் பாடம். இரிதல் - அஞ்சுதல். வயிறு - நடுவிடம். கலைத் திங்கள் - முழுமதி. கிளைத்து என்பதற்குக் கிண்டியென்றுரைத் தலுமொன்று. முகடு - உச்சி. (எ)

ஒல்குங் கொடிச்சிறு மருங்கிற் கிரங்கிமெல்
லோதிவண் டார்த் தெழப்பொன்
னூசலை யுதைந்தாடு மளவின்மலர் மகளம்மை
யுள்ளடிக் கூன்பிறை தழீஇ
மல்குஞ் சுவட்டினை வலம்புரிக் கீற்றிதுகொல்
வாணியென் றசதி யாடி
மணிமுறுவல் கோட்டநின் வணங்கா முடிக்கொரு
வணக்கநெடு நாண்வ ழங்கப்
பில்குங் குறும்பனிக் கூதிர்க் குடைந்தெனப்
பிரசநா றைம்பாற் கிளம்
பேதையர்க ளேட்டின் கொழும்புகை மடுத்துமென்
பெடையொடு வரிச்சுரும்பர்
புல்குங் கடம்பணை யுடுத்தமது ரைத்தலைவி
பொன்னூச லாடி யருளே
புழுகுநெய்ச் செக்கர்திரு வழகினுங் கொத்தகொடி
பொன்னூச லாடி யருளே.

(இ - ள்.) ஒல்கும் - துவள்கின்ற, கொடி-பூங்கொடிபோன்ற, சிறுமருங்கிற்கு - சிற்றிடைக்கு, மெல்ஓதிவண்டு - மெல்லியகூந்தலிலுள்ள வண்டுகள், இரங்கி - இரக்கமுற்று, ஆர்த்துஎழ - ஆரவாரித்தெழும்படி, பொன்னூசலை உதைந்தாடுமளவில் - பொன்னூசலை உந்தியாடும்போது, மலர்மகள் - திருமகளானவள், அம்மை-அம்மே, உள்ளடி - உள்ளடியில், கூன்பிறைதழீஇ,-வளைவாகியபிறைபட்டு, மல்கும் - (அதனால்) உண்டாகித்தோன்றுகின்ற, சுவட்டினை-தழும்பை, இதுவலம்புரிகீற்றுகொல் - இதுவலம்புரிச்சங்கரேகையோ வாணியென்று - சரசுவதியேயென்று, அசதியாடி - பரிஹசித்து

மணிமுறுவல்கோட்ட - நகைக்க, நெடுநாண் - (உனக்குண்டாகின்ற பெருநாணமானது, நின்வணங்காமுடிக்கு-உன்வணங்காதமுடிக்கு, ஒருவணக்கம்வழங்க - ஒருவணக்கத்தைக்கொடுக்க, பில்கும் - சிந்துகின்ற, குறும்பனி - சிறுபனித்திவலையோடுகூடின, கதிர்க்கு-பனிக்காற்றுக்கு, உடைந்தென - தோல்வியடைந்தாற்போல, பிரசம்நாறு-பூந்தேன்மணக்கின்ற, ஐம்பாற்கு-கூந்தலுக்கு, இளம்பேடைதயர்கள்-இளம்பெண்கள், ஊட்டும் - ஊட்டுகின்ற, கொழும்புகைமடுத்து,-செழும்புகையையுட்கொண்டு, மெல்பெடையொடு-மெல்லியபெட்டையோடு, வரிசுரும்பர் - இரேகைகளையுடையவண்டுகள், புல்கும்-கூடுகின்ற, தடம்பணை உடுத்த - பெரிய வயல்கள் சூழ்ந்த, மதுரைத்தலைவி———, பொன்னூசலாடியருள் எ - று.

மருங்கிற் கிரங்கல் - மருங்கிறு மென்றிரங்கல். அம்மையுள்ளடிக் கூன்பிறைச்சுவடி யாதெனின், இறைவியூட றணிப்புழி இறைவன் திருமுடிப் பிறைபட்ட சுவடென்க. வணங்காமுடி - வளையாதமுடி. ஐம்பால் - ஐந்துபகுப்பினையுடையதாகிய கூந்தல். ஐந்து பகுப்பாவன - முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என்பன. இவற்றுள், முடியாவது மயிரையுச்சியிற் சேர்த்து முடிப்பது, கொண்டையாவது பக்கத்திற்சேர்த்து முடிப்பது, சுருளாவது பின்னே செருகுவது, குழலாவது சுருட்டி முடிப்பது, பனிச்சையாவது பின்னி விடுவது. வரிச்சுரும்பர்-பண்பாடுஞ் சுரும்பர் எனினுமாம். (அ)

பொன்செய்த செழுமணித் திருவூச லரமகளிர்
கொண்டாட வாடுந் தொறுங்
குறுமுறுவ னெடுநில வருந்துஞ் சகோரமாய்க்
கூந்தலங் கற்றை சுற்றுந்
தென்செய்த மழலைச் சுரும்பராய் மங்கைநின்
செங்கைப் பசுங்கிளையாய்த்

தேவதேவன் பொலிவ தெவ்வுருவு மாமவன்
திருவுருவின் முறைதெரிப்ப
மின்செய்த சாயலவர் மேற்றலத் தாடிய
விரைப்புனலி னருவி குடையும்
வெள்ளானை குங்குமச் செஞ்சேறு நாறமட
மென்பிடியை யஞ்சி நிற்கும்
பொன்செய்த மாடமலி கூடற் பெருஞ்செல்வி
பொன்னூச லாடி யருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடி யருளே.

(இ - ள்.) கொன்செய்த - பெருமை யமைந்த, செழுமணி - செழிய மணிகளானியன்ற, திருவூசல்-திருவூசலில், அரமகளிர் கொண்டாட - தெய்வமாதர்கள் கொண்டாடும்படி, ஆடுந்தொறும் - நீயிருந்தாடுந்தோறும், குறுமுறுவல் நெடுநிலவு அருந்தும் - புன்னகையாகிய பெருநிலவை யுண்கின்ற, சகோரமாய் - சகோரப்புள்ளாகியும், கூந்தல் அம்கற்றை சுற்றும் - அழகியகூந்தற் கற்றையைச் சூழ்ந்த, தேன்செய்த-அழகுள்ள, மழலைச்சுரும்பராய்-இளவண்டாகியும், மங்கை - மங்கையே, நின்செங்கை-உன் செவந்த கையிலுள்ள, பசுங்கிள்ளையாய் - பச்சைக்கிளியாகியும், தேவ தேவன் பொலிவது - தேவதேவனாகிய சிவபெருமான் விளங்குவது, எவ்வுருவும் ஆம்-எல்லாவுருவங்களுமாகின்ற, அவன் - அவனது, திருவுருவின் முறை - திருவுருவின் முறைமையை, தெரிப்ப-அறிவியா நிற்க, மின்செய்த-மின்கொடிபோன்ற, சாயலவர் - சாயலையுடையவராகிய மாதர், மேல்தலத்து ஆடிய - மேனிலத்தாடின, விரைப்புனலின் அருவி - மணநீரா லுண்டாகிய அருவியில், குடையும் - மூழ்குகின்ற; வெள் ஆனை - வெள்ளை யானையானது, குங்குமச் செஞ்சேறு நாற - செவ

ந்த குங்குமக் குழம்பு தன்மீது மணத்தலால், மடமென்பிடியை - இளமையும் மென்மையுமுள்ள பெண் யானைக்கு, அஞ்சி நிற்கும் - பயந்து நிற்கின்ற, பொன்செய்த மாடம்மலி - பொன்னினாற் செய்யப்பட்ட மாளிகைகள் நிறைந்த, கூடல் - மதுரைப்பதியில் வாழ்கின்ற, பெருஞ்செல்வி - மஹதை சுவர்யத்தை யுடையவளே, பொன்னூசலாடியருள்———, எ - று.

வெள்ளானை குங்குமச் செஞ்சேறு நாறமடமென் பிடியையஞ்சி நிற்கும் என்றது குங்குமச்சேறு நாறலானிது வேறோர் பிடியைத் தோய்ந்துவந்ததெனப் பிடியூடு மென்றஞ்சி நிற்றலை. (௯)

இருப்தமு மென்குரற் கிண்கிணியு முறையிட்
டிரைத்திடு மரிச்சி லம்பும்
இறுமிறு மருங்கெனு யிரங்குமே கலையும்பொ
னெழுதுசெம் பட்டு வீக்குந்
திருவிடையு முடைதார முமமொட் டியாணமுஞ்
செங்கைப் பசுங்கிள் ளையுந்
திருமுலைத் தரளவுத் தரியமும் மங்கலத்
திருநாணு மழுகொ ழுகநின்
றருள்பொழியு மதிமுகமு முகமதியி னெடுநில
வரும்புகுறு நகையு ஞான
ஆனந்த மாக்கடல் குடைந்துதுழை மகரத்தொ
டமராடு மோட ரிக்கட்
பொருகயலும் வடிவழகு பூத்ததசுந் தூவல்லி
பொன்னூச லாடி யருளே
புழுதுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடி யருளே.

(இ - ள்.) இருபதமும்-இரண்டு சீர்பாதங்களும், மெல்குரல்-மெல்லோசையையுடை, கிண்கிணியும் - கிங்கிணியும், முறையிட்டு இரைத்திடும் - முறையிட் டொலிக்கின்ற, அரிச்சிலம்பும் - பருக்கைபெய்த சிலம்பும், மருங்குஇறும் இறும்என்று - இடைமுறியும் முறியும்என்று, இரங்கும் - ஒலிக்கின்ற, மேகலையும் - மேகலாபரணமும், பொன் எழுது-பொன்வேலை முற்றின, செம்பட்டு வீக்கும் - செம்பட்டாடை கட்டின, திருவிடையும்-அழகிய இடையும், உடைதாரமும் - உடைதாரமும், ஒட்டியாணமும் - ஒட்டியாணமும், செங்கை - செவந்தகையிலுள்ள, பசுங்கிளையும் - பச்சைக்கிளியும், திருமுலை - திருத்தனத்தின் மீதணிந்த, தரள உத்தரியமும் - முத்துத்தரீயமும், திருமங்கலநாணும் - திருமங்கல சூத்திரமும், அழகு ஒழுகநின்று - அழகொழுகும்படி நின்று, அருள்பொழியும்-கருணைபொழிகின்ற, மதிமுகமும் - முழுமதிபோன்ற திருமுகமும், முகமதியில் - அந்த முகமதியில், நெடுநிலவு அரும்பு-பெரிய சந்திரிகையை விரிக்கின்ற, குறுநகையும்-புன்னகையும், ஞானஆனந்தமா கடல்குடைந்து - ஞானானந்தமாகிய பெருங்கடலிற் குளித்து, குழைமகரத்தொடு - மகரக்குழையோடு, அமராடும் - போர்புரிகின்ற, ஒடு அரி - செவ்வரியோடின, கண் - கண்களாகிய, பொருகயலும் - போர்க்கெண்டைகளும், வடிவு - உன் திருமேனியில், அழகுபூத்த - அழகாகப் பொலியப்பெற்ற, சுந்தரவல்லி - அழகிய பூங்கொடிபோல்வாளே, ———, பொன்னூசலாடியருள்—எ - று.

அரி, பொன்னுதலால் அரிச்சிலம்பு என்பதற்குப் பொற்சிலம்பு என்றுரைத்தலுமாம். உடைதாரம் - ஒருடை விசேடம். ஒட்டியாணம் - மாதரிடையணி. தரளவுத்தரியம் - ஓரத்தில் முத்துக்கோர்த்த உத்தரியம். ஆனந்தமாக் கடலென்றது சிவபெருமானை. குடைதலாவது அவனது திருமேனி யழகிற்படிதல். குழைமகரத்தொடமராடலாவது காதளவுமோடிக் குழையைத் தொட்டுமீட்டல். சிவ

பெருமானை ஆனந்தமாக்கடல் என்றது அவனுக்கின்பமே யுருவாத லானென்க. இது "ஆனந்தமாக்கடலாடு சிற்றம்பலம்" என்னும் திருக்கோவையார் - கஅஎ - வது செய்யுளானுமினிது விளங்கும்.

ஆ. பருவம் - க0 - க்குத் திருவிருத்தம் - உ0க.

மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ்

முற்றிற்று.

---

உ

கணபதி துணை.

மதுரை

# அங்கயற்கண்ணம்மை

அல்லது

# மீநாக்ஷியம்மை குறம்

## மூலமும் உரையும்.



## காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கார்கொண்ட பொழின்மதுரைக் கர்ப்பூர வல்லிமணங்
        கமழுந் தெய்வத்
தார்கொண்ட கருங்குழலங் கயற்கணா யகிகுறஞ்செந்
        தமிழாற் பாட
வார்கொண்ட புகர்முகத்தைங் கரத்தொருகோட் டிருசெ
        மதத்து நல்வாய்ப் [விழும்
போர்கொண்ட கவுட்சிறுகட் சித்திவிநா யகன்றுணைத்தா
        போற்று வாமே. [ள்

(இ - ள்.) கார்கொண்ட - மேகத்தைத் தன்னிடத்தே தவழப்பெற்ற, மதுரை - மதுராபுரியில் வாழ்கின்ற, கற்பூரவல்லி - கற்பூரவல்லி, மணம் கமழும் - வாசனை வீசுகின்ற, தெய்வம் - தெய்

வத தன்மை யமைந்த, தார்கொண்ட - பூமாலையை யணிந்த, கருங் குழல் - கரிய கூந்தலையும், அம் கயல் கண் - அழகிய கயற்கண் ணையுமுடைய, நாயகி - எம்மிறைவியின், குறம் - குறம் என்னும் பிரபந்தத்தை, செந்தமிழாற் பாட - செந்தமிழ் மொழியாற் பாடு தற்கு, வார்கொண்ட - நீட்சியைக்கொண்ட, புகர் முகத்து - புள் ளிகளோடுகூடிய முகத்தையும், ஐங்கரத்து - ஐந்து திருக்கரங்களை யும், ஒரு கோடு - ஒற்றைக்கொம்பையும், இரு செவி - இரண்டு செவியையும், மும்மதத்து - மூன்று மதங்களையும், நால்வாய் - தொங்குகின்ற வாயையும், போர்கொண்ட-போர்த்தொழிலைக்கொண்ட, கவுள் - கதுப்பையும், சிறு கண் - சிறு கண்களையுமுடைய, சித்தி விநாயகன் - சித்திவிநாயகராது, துணைத்தாள் - திருவடி யிணையை, போற்றுவாம் - முக்கரணங்களாலும் வழிபடுவோம். எ - று.

கார் என முதற்கண்ணெடுத்தது மங்கலமரபு. கற்பூரவல்லி - பச்சைக்கற்பூரத்தா னபிஷேகஞ் செய்யப்பட்ட வல்லி. கொடுந் தமிழை விலக்குதற்குச் செந்தமிழென்றார். சித்திவிநாயகன் - மது ரைப்பதியி லெழுந்தருளியிருக்கும் விநாயகன் சிறப்புத்திருநாமம். போற்றுவாம் என்னும் பயனிலைக்கு யாம் என்னும் தோன்றா வெழு வாய் வருவித்துரைக்கப்பட்டது. (க)

சிந்து.

பூமருவிய பொழிறிகழ்மதுரா
புரிமருவிய வங்கயற்கணம்மை
தேமருவிய மதிதவழ்குடுமித்
தென்பொதியக் குறத்திநானம்மே.

(இ - ள்.) அம்மே - தாயே, நான் - யான், பூ மருவிய - மலர் கள் பொருந்திய, பொழில் திகழ்-சோலைகள் சூழ்ந்து விளங்குகின்ற, மதுராபுரி மருவிய - மதுரைத் திருப்பதியி லெழுந்தருளியிருக்கிற-

அம் - அழகிய, கயற்கண் அம்மை - மீநாக்ஷியம்மையின், தே மருவிய - அழகு பொருந்திய, மதி தவழ் - சந்திரன் தவழ்கின்ற, குடுமி - சிகரத்தையுடைய, தென் பொதியக் குறத்தி - தென் பொதியக் குறத்தியென் றறிவாயாக. எ - று.

பூ மருவிய பொழில் - பூஞ்சோலை. அங்கயற்கண்ணம்மை தென் பொதியம் என வியையும். (க)

செந்நென்முத்துங் கன்னன்முத்துமொளி
திகழ்மதுரை யங்கயற்கணம்மை
பொன்னுமுத்துஞ் சொரியும்வெள்ளருவிப்
பொதியமலைக் குறத்திநானம்மே.

(இ - ள்.) அம்மே - அம்மா, நான் - யான், செந்நெல் முத்தும் - செந்நெற் கதிர் முத்தும், கன்னல் முத்தும் - கருப்பு முத்தும், ஒளி திகழ் - ஒளியால் மிக்கு விளங்குகிற, மதுரை - மதுரைப் பதியிலெழுந்தருளிய, அங்கயற்கணம்மை - அங்கயற்கண்ணம்மையின், பொன்னும் முத்தும் சொரியும் - பொன்னையும் முத்தையும் சொரிகின்ற, வெள் அருவி - வெண்மையாகிய அருவியாறுகளையுடைய, பொதிய மலை - பொதிகைமலையிலுள்ள, குறத்தி - குறப்பெண். எ - று.

அங்கயற்கணம்மை பொதியமலையென்றியையும். (உ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செண்டிருக்கும் வடவரையிற் சேலிருக்கு மாசிருக்குத்
 தென்னரீன்ற
கண்டிருக்கு மதுரமொழிக் கனியிருக்குந் துவரிதழங்
 கயற்கட் பாவை
வண்டிருக்கு நறைக்கமல மலரிருக்கும் பரிபுரத்தாண்
 மனத்துள் வைத்துக்

கொண்டிருக்குந் தமிழ்முனிவன் குடியிருக்கும் பொதியம
குறத்தி நானே. [லைக்

(இ - ள்.) நான் - யான், செண்டிருக்கும்வடவரையில்-செண்டாலெறியப்பட்டிருக்கின்ற வடமேருமலையில், சேல்இருக்கும்-மீனக்கொடியிருக்கின்ற, அரசுஇருக்கும் - ராஜரிகத்தை வகிந்த, தென்னர்கல் ற - பாண்டியர் பெற்றெடுத்த, கண்டு இருக்கும் - கற்கண்டின்சுவையமைந்த, மதுரமொழி - இன்சொல்லின், கனிவு இருக்கும் - முதிர்ச்சிதங்கிய, துவர் இதழ் - பவளம்போலுந் திருவதரத்தையுடைய, அங்கயற்கண்பாவை - அழகிய கயற்கண்ணேயுடைய பாவைபோல்வாளது, வண்டு இருக்கும் - வண்டுகள் தங்கிய, நறைமண முள்ள, கமலமலர்இருக்கும் - தாமரைமலர்போலிருக்கின்ற, பரிபுரத்தாள் - சிலம்பணிந்த சீர்பாதங்களை,மனத்துள்வைத்துக்கொண்டிருக்கும் - மனத்திலவைத்துத் தியாநித்துக்கொண்டிருக்கிற, தமிழ்முனிவன் - அகத்தியன், குடியிருக்கும் - குடியிருக்கிற, பொதியமலைக்குறத்தி - பொதியமலையில் வாழ்கின்ற குறப்பெண். எ - று.

செண்டு-செண்டாயுதம், இது உக்ரகுமாரனெலெறியப்பட்டது. துவர் - பவளம், இதுபண்பாகுபெயர். (௯)

## சிந்து.

மங்கைகுங்குமக் கொங்கைபங்கயச்
செங்கையங்கயற் கண்ணினள் மலறபண்ணினள்
பங்கணக்கழு லங்கணேச்சொக்க
லிங்கனைக்கூடி மேவுவாய் கொல்லிப்பாவையே.

(இ - ள்.) கொல்லிப்பாவையே - கொல்லி மலைப்பெண்ணே, மங்கை - மங்கைப்பருவமுள்ளவளும், குங்குமக்கொங்கை - குங்குமக்குழம்பணிந்த தனங்களையும், பங்கயச்செங்கை-தாமரைமலர்போ

னுஞ் செவந்தகைகளையும், அங்கயற்கண்ணினாள் - அங்கயற்கண்ணை யுடையவளும், மறைபண்ணினாள் - வேதப்பண்ணையுடையவளுமாகிய உமாதேவியின், பங்கனை - பாகத்தையுடையவனை, கழல்அங்கனை-கழலாநின்ற எலும்புமாலையையுடையவனை, சொக்கலிங்கனை - சொக்கலிங்கசுவாமியை, கூடிமேவுவாய் - சேர்ந்தணைவாய், எ - று.

மேற்படி-வேறு.

வஞ்சியேயப ரஞ்சியேமட மயிலேவரிக் குயிலே
கொஞ்சியேபழி யஞ்சியாருனைக் கூடுவாரினி யம்மே.

(இ - ள்.) வஞ்சியே - வஞ்சிக்கொடிபோல்வாளே, அபரஞ்சியே - பசும்பொன்னே, மடமயிலே - இளமயிலே, வரிக்குயிலே - பண்பாடுகின்ற குயிலே, பழிஅஞ்சியார் - பழியஞ்சினவராகிய சிவபெருமானவர், அம்மே - தாயே, இனி உன்னைக் கொஞ்சிக் கூடுவார் - இனிஉன்னைக்கொஞ்சிச்சேர்வார். எ - று.

வஞ்சி - ஒருவகைக்கொடி. வஞ்சியென்பது கொடிக்குப் பரியாயமாகவுங் கொள்ளலாம். (ரு)

மேற்படி-வேறு.

புழுகாலே தரைமெழுகு பிள்ளையார்வை
பொற்கோல மிட்டுநிறை நாழிவையாய்.

(இ - ள்) புழுகாலே தரைமெழுகு-புனுகைக்கொண்டுதரையை மெழுகு, பிள்ளையார்வை-பிள்ளையார்பிடித்துவை, பொற்கோலமிட்டு - அழகிய கோலமிட்டு, நிறைநாழிவையாய் - நிறைபடியை வைப்பாயாக; எ - று. (சு)

மேற்படி-வேறு.

ஆழிகைதா வழகாருமங் கயற்கண்ணம்மை பங்கர்
அழகியசொக்க ரருள்புரிவருன் பான்மருவி யம்மே.

(இ - ள்.) அம்மே - அம்மா, ஆழிகைதா - மோதிரமணிந்த கையைக்கொடு, அங்கயற்கண் அம்மைபங்கர் - மீனாக்ஷியம்மையைப் பாகத்திலேயுடையவராகிய, அழகியசொக்கர் - அழகிய சொக்கேசர், உன்பால்மருவி - உன்னிடத்தில் வந்து, அருள்புரிவர்-கிருபைசெய்வார். எ - று. (எ)

மேற்படி-வேறு.

பேசுமென்குறி மோசமென்றிடில்
ஆர்சொலும்பரி யாசமே
வாசமென்குழ லாய்சவுந்தர
மாறர்வந்தணை வாரம்மே.

(இ - ள்.) பேசும் - சொல்லுகிற, என் குறி - என் குறியானது, மோசம் என்றிடில் - மோசமென்றால், ஆர் சொலும் - வேறு யாவர் சொல்லுஞ் சொல்லும், பரியாசமே - பரிகாசமாகவே முடியும், (ஆகையால் அப்படி பொய்யென்று நினைக்கவேண்டாம்) வாசம் மெல் குழலாய் - பரிமளமும் மென்மையுமுள்ள கூந்தலையுடையவளே, சவுந்தர மாறர் - சவுந்தர பாண்டியர், வந்து - உன்னிடத்துக்கு வந்து, அணைவார்-உன்னைத் தழுவுவார், அம்மே-தாயே. எ-று.

மேற்படி-வேறு.

நங்கைநீகரு துங்குறிசொல்லவுன்
செங்கைதனைக்கொடு வாவெங்கள்
அங்கயற்கண்ணி பங்கரருட்சொக்க
லிங்கரினியணை வாரம்மே.

(இ - ள்.) அம்மை - தாயே, நங்கை நீ - சுகுண பரிபூர்ணையான நீ, கருதும் குறி - நினைக்கின்ற குறியை, சொல்ல - நான் சொல்வதற்கு,உன் செங்கைதனை கொடுவா-உன் செம்மையாகிய

கையைக் கொண்டுவந்து காட்டுவாயாக, (கைக்குறி பார்த்ததில் எனக்குத் தோன்றினதைச் சொல்லுகிறேன் கேள்) இனி - இனி, எங்கள் அங்கயற்கண்ணி பங்கர் - எங்கள் மீநாகூியம்மையை யிடப் பாகத்திலுடையவரும், அருள் சொக்கலிங்கர் - க்ருபாமூர்த்தியாகிய சொக்கேசுவரரும் ஆகிய இறைவர், அணைவார் - வந்து உன்னைத் தழுவுவார். எ - று. (கூ)

மேற்படி-வேறு.

தூசுமொரு காசும்வையுன் னேசம்வரவே சொல்லநான்
ஈசர்கயி லாசர்மது ரேசருனைச்சேர் வாரம்மே.

(இ - ள்.) அம்மே - தாயே, உன் நேசம் வர - உனக்கென்மீ தன்புண்டாகும்படி, நான் சொல்ல - நான் குறிசொல்வதற்குப் பரிசிலாக, தூசும் - ஆடையும், ஒரு காசும் - ஒரு காசும், வை - வைக்கக் கடவாய், ஈசர் - சர்வேசுவரரும், கயிலாசர் - கைலாசவாசியும், மதுரேசர் - மதுராபுரித்தலைவருமாகிய இறைவர், உன்னைச்சேர்வார் - வந்து உன்னைத் தழுவுவார். எ - று. (சo)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கைக்குறியின் முகக்குறிநன் றீட்டெழுந்த கவுளிநன்று கன்னி மார்வந்
திக்குறிநன் றென்கின்ற ரிடக்கண்ணுந் துடிக்கின்ற திதன்மே லுண்டோ
பொய்க்குறிய சிறுமருங்குற் பூங்கொடிநீ யங்கயற்கட் பூவை மாதின்
மெய்க்குறியும் விளக்குறியு முலைக்குறியு மணிந்தவர்தோ ணேமேவு வாயே.

(இ - ள்.) கைக்குறியின் - உன் கைக்குறியிலும், முகக்குறி - முகக்குறியானது, நன்று - நன்மையாய்க் காணப்படுகின்றது, இட

த்து எழுந்த - இடப்பக்கத்திலுண்டான, கவுளி நன்று - பல்லிச் சொல்லும் நன்மையாய்க் காணப்படுகின்றது, கன்னிமார் வந்து - கன்னிப்பெண்கள் வந்து, இக்குறி நன்று என்கின்றார் - இந்தக் குறி நன்றென்கிறார்கள், இடக்கண்ணும் துடிக்கின்றது - இடது கண்ணும் துடியாநின்றது, இதன்மேல் உண்டோ - இதற்குமேல் உனக்கு வேறு நன்மையுண்டோ (இல்லை), பொய் - பொய்போன்ற, குறிய சிறு மருங்குல் - அற்சிறு மருங்குலையுடைய, பூங்கொடி நீ, பூங்கொடிபோல்பவளாகிய நீ, அங்கயற்கண் பூவைமாதின்-மீநாக்ஷியம்மையின், மெய்க்குறியும் - திருமேனிக்குறியையும், வளைக்குறியும் - வளைத்தழும்பையும், முலைக்குறியும் - முலைத்தழும்பையும், அணிந்தவர்-அணிந்தவராகிய இறைவரது, தோள் - திருப்புயத்தை, மேவுவாய் - அணைவாய். எ - று.

கைக்குறியின் என்பதற்குக் கைக்குறிபோல என்றும் பொருள் கூறலாம். (கக)

சிந்து.

கடமலைக்கும் வெம்மலையாங் கைம்மலையு மாயிரவாய்ப்
படமலைக்கு மரவரசும் பதித்தருளும் பார்மடந்தை
குடமலைக்குங் கடமுலையாங் குலமலைக ளிரண்டெனவே
வடமலைக்குந் தென்பொதிய மலயமலை யென்மலையே.

(இ - ள்.) கடம்அலைக்கும் - மதஜலத்தாலலைக்கப்பெற்ற, வெம்மலைஆம்-வெவ்வியமலைபோன்ற, கைம்மலையும் - திக்குயானைகளும், ஆயிரவாய் - ஆயிரந்தலைகளோடுகூடிய, படம் அலைக்கும்-படங்களாலலைக்கப்பெற்ற, அரவு அரசும், ஆதிசேடனும், பதித்தருளும்-தாங்கப்பெற்ற, பார்மடந்தை - பூமிதேவியின், குடம் அலைக்கும்-கும்பங்களை வருத்துகின்ற, தடமுலையாம்-பெரியதனங்களாகிய, குலமலைகள் இரண்டெனு - உயர்ந்தமலைகளிரண்டென்று சொல்லும்படி,

வடமலைக்கும்தென்-வடமலையினும் அழகாகிய, மலயம்-தென்றலுண் டாதற்கிடமாகிய, பொதியமலை-பொதியமலையானது, என்மலை-என் மலையாகும். எ - று.

'வடமலைக்கும் என்பதற்கு முச்துவடத்தானலைக்கப்படுகிற என் றும் பொருள்கூறலாம். (௧௨)

திங்கள்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை
தங்குமுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழுமலை
அங்கயற்கண் ணம்மைதிரு வருள்சுரந்து பொழிவதுபோற்
பொங்கருவி தூங்குமலை பொதியமலை யென்மலையே.

(இ - ள்.) திங்கள்முடிசூடும்மலை-சந்திரனைத் தன்னுச்சியில் தரிக்கின்ற மலையும், தென்றல்விளையாடும்மலை-தென்றல்உலாவுகின் ற மலையும், தங்கும்முயல்சூழும்மலை-தங்கியிருக்கின்ற முயல்கள்நெ ருங்கினமலையும், தமிழ்முனிவன்வாழும்மலை-அகத்தியன் வாழ்கின் றமலையும், அங்கயற்கண் அம்மை-மீநாகூழியம்மை, திருவருள்சுரந்து பொழிவதுபோல - திருவருள்சுரந்து பொழிவதுபோல, பொங்கு அருவி தூங்கும்மலை-மிக்கஅருவியாறுகள் இழிந்தோடுகின்ற மலையும் ஆகிய, பொதியமலை - பொதியமலையானது, என்மலை - என்மலையா கும். எ - று. (௧௩)

கன்னமதஞ்சாய்த் துறங்குகொலைக் களிறுகிடந்து பிளிறுமலை, தென்னந்தமிழும் பசுங்குழவித் தென்றற் கொழுந்துந் திளைக்குமலை, அன்னம்பயிலும் பொழிற்கூட லாலங்கூந்தற் பிடியாண்ட, பொன்னங்குடுமித் தடஞ்சா ரற் பொதியமலையென் மலையம்மே.

(இ - ள்.) அம்மே - தாயே, கன்னமதம் சாய்த்து - கன்னமத த்தைக் கவிழ்த்து, உறங்கும் - தூங்குகின்ற, கொலை - கொல்லுந்தொ

ழிலையுடைய, களிறு - யானைகள், கிடந்துபிளிறும் - கிடந்தொலிக்கின்ற, மலை - மலையும், தென்னம் தமிழும் - தென்றிசையில் வழங்குகின்ற இனியதமிழும், பசுங்குழவி தென்றல்கொழுந்தும்-மிகவும் மென்மையாகிய தென்றற்கொழுந்தும், திளைக்கும் - நிறைந்திருக்கின்ற, மலை - மலையுமாகிய, அன்னம்பயிலும்-அன்னங்கள் சஞ்சரிக்கிற, பொழில் - சோலைசூழ்ந்த, கூடல் - மதுரைப்பதியில்வாழ்கின்ற, அறல்அம்கூந்தல் - கருமணல்போன்ற அழகிய கூந்தலையுடைய, பிடி - பெண்யானைபோல் பவனமாகிய மீநாக்ஷியம்மை, ஆண்ட-அரசுசெய்த, பொன்அம்குமி - பொன்மயமாய் அழகாயிருக்கிற உச்சியையும், தடம்சாரல் - பெரியசாரலையுமுடைய, பொதியமலை-பொதியமலையானது, என்மலை - என்மலையாகும். எ - று. (௪௪)

மந்தமா ருதம்வளரு மலையெங்கள் மலையே
வடகலைதென் கலைபயிலு மலையெங்கள் மலையே
கந்தவேள் விளையாடு மலையெங்கள் மலையே
கனகநவ மணிவிளையு மலையெங்கள் மலையே
இந்தமா நிலம்புரக்கு மங்கயற்கண் ணம்மை
இன்பமுறுந் தென்பொதிய மலையெங்கண் மலையே.

(இ - ள்.) மந்தமாருதம் - தென்றற்காற்றானது, வளரும்மலை-வளராநின்றமலை, எங்கள்மலை-எங்கள்மலையாகும், வடகலைதென்கலை பயிலும்மலை - வடமொழி தென்மொழிகள்பயில்கின்றமலை, எங்கள் மலை-எங்கள்மலையாகும், கந்தவேள்விளையாடும்மலை - முருகக்கடவுள் விளையாடுகின்றமலை, எங்கள்மலை-எங்கள்மலையாகும், கனகம் நவமணிவிளையும்மலை - பொன்னும்மணிகளும் உற்பத்தியாகிறமலை, எங்கள் மலை -எங்கள்மலையாகும், இந்த மாநிலம் புரக்கும் - இந்தப்பெரிய நிலவுலகத்தைக் காக்கின்ற, அங்கயற்கண் அம்மை - மீநாக்ஷியம்மை, இன்பமுறும் - இன்புறுகின்ற, தென் பொதியமலை - தென்பொதியமலையானது, எங்கள் மலை-எங்கள் மலையாகும். எ - று.(௪௫)

சிங்கமும்வெங் களிறுமுடன் விளையாடு மொருபால்
　சினப்புலியு மடப்பிணையுந் திளைத்திடுமங் கொருபால்
வெங்கரடி மரையினொடும் விளையாடு மொருபால்
　விடவரவு மடமயிலும் விருந்தயரு மொருபால்
அங்கண்மா நிலங்கவிக்கும் வெங்கவிகை நிழற்கீழ்
　அம்பொன்முடி சூடுமெங்க ளபிடேக வல்லி
செங்கமலப் பதம்பரவுங் கும்பமுனி பயிலுந்
　தென்பொதிய மலைகாண்மற் றெங்கண்மலை யம்மே.

(இ - ள்.) அம்மே - தாயே, சிங்கமும் வெம் களிறும் உடன் - சிங்கங்களும் கொடிய யானைகளும்கூட, விளையாடும் - விளையாடுகின்ற, ஒருபால் - ஒருபக்கத்தையும், சினப்புலியும் மடப்பிணையும் - கோபத்தையுடைய புலிகளும் இளமையாகிய பெண்மான்களும், திளைத்திடும் - நிறைந்திருக்கின்ற, ஒருபால் - ஒருபக்கத்தையும், வெம் கரடி - கொடிய கரடிகள், மரையினொடும் - மரைகளோடும் கூடி, விளையாடும் - விளையாடுகின்ற, ஒருபால் - ஒருபக்கத்தையும், விட அரவும் மயிலும் - விஷத்தையுடைய பாம்பும் மயிலும், விருந்து அயரும் - ஒன்றற்கொன்று விருந்துசெய்கின்ற, ஒருபால் - ஒருபக்கத்தையும் உடையதாய், அம் கண் அமர் - அழகிய இடமமைந்த மா நிலம் கவிக்கும் - நிலவுலகத்தை நிழற்றுகின்ற, வெம் கவிகை நிழற்கீழ் - யாவரும் விரும்புதற்குரிய குடைநிழலின்கீழ், அம் - அழகாகிய, பொன் முடி சூடும் - பொன் மகுடத்தைத்தரித்து வாழ்கின்ற, எங்கள் அபிடேகவல்லி - எங்கள் மீநாக்ஷியம்மையின், செங்கமல பதம் பரவும் - செந்தாமரைமலர்போன்ற திருவடியை வழிபடுகின்ற, கும்பமுனி பயிலும் - அகத்தியன் வாழ்கின்ற, தென் பொதியமலை - தென் பொதியமலை, எங்கள் மலை - எங்கள் மலையாகும். எ - று. ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கச்சைப் பொருது மதர்த்தெழுந்து கதிர்த்துப் பணைத்த
மணிக்கொங்கைப்
பச்சைப் பசுங்கொம் பங்கயற்கட் பாவை பயந்த
வாறிருதோட்
செச்சைப் படலை நறுங்குஞ்சிச் சிறுவன் றனக்குப்
பெருந்தடங்கட்
கொச்சைச் சிறுமிதனைக் கொடுத்த குறவர்
குலமெங்குல மம்மே.

(இ-ள்.) அம்மை - தாயே, கச்சைப்பொருது - கச்சோடு போரிட்டு, மதர்த்து எழுந்து - மதர்த்து மேனோக்கி, கதிர்த்து பணைத்த - ஒளியுடையதாய்ப் பருத்த, மணி - அழகாகிய, கொங்கை-தனத்தையுடைய, பச்சைப் பசுங்கொம்பு - பச்சைப் பசுங்கொம்பு போல்பவளாகிய, அங்கயற் கண்பாவை - மீநாக்ஷியம்மை, பயந்த - ஈன்ற, ஆறு இருதோள் - பன்னிரண்டு புயங்களையும், செச்சைப் படலை - வெட்சிமாலையை யணிந்த, நறு குஞ்சி - நறுமணமுள்ள சிகையையுமுடைய, சிறுவன் தனக்கு - இளைஞனை முருகவேளுக்கு, பெருந்தடங்கண் - மிகவும் விசாலமான கண்களையுடைய, கொச்சை - இளமையாகிய, சிறுமிதனை கொடுத்த - சிறுமியாகிய வள்ளியைக் கொடுத்த, குறவர்குலம் - குறவர்குலமே, எம்குலம் - எங்கள் குலமாகும். எ - று. (௬௭)

சிந்து.

கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக் கிழங்குகல்லி யெடுப்போம், குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக் கொடியில்லைத்துத் தொடுப்போம்; பழம்பிழிந்த கொழுஞ்சாறுந் தேற

லும்வாய் மடுப்போம், பசுந்தழையு மரவுரியு மிசைந்திடை வுடுப்போம், செழுந்தினையு நறுந்தேனும் விருந்தருந் தக் கொடுப்போம், சினவேங்கைப் புலித்தோலின் பாயல் லிற்கண் படுப்போம், எழுந்துகயற் கணிகாலில் விழுந்து வினை கெடுப்போம், எங்கள்குறக் குடிக்கடுத்த வியல்பி துகாணம்மே

(இ - ள்.) அம்மே - தாயே, கொழுங்கொடியின் விழுந்த - கொழுமையாகிய கொடிகளில் உண்டாகிய, வள்ளிக்கிழங்கு - வள்ளிக்கிழங்கை, கல்லியெடுப்போம் - தோண்டியெடுப்போம், குறிஞ்சிமலர் - குறிஞ்சி மலர்களை, தெரிந்து - ஆராய்ந்தெடுத்து, முல்லைக்கொடியில் வைத்துத் தொடுப்போம் - முல்லைக்கொடியி லமைத்துத் தொடுப்போம், பழம்பிழிந்த கொழுஞ்சாறும் - கனிகளைப் பிழிந்த கொழுவிய சாற்றையும், தேறலும் - தேனையும், வாய்மடுப்போம் - வாயிற்பெய்து கொள்வோம், பசுந்தழையும் - பசிய தழையையும், மரவுரியும் - மரவுரியையும், இசைந்திட உடுப்போம் - இசைவாக வுடுத்துக்கொள்வோம், செழுந்தினையும் - செழியதினை மாவையும், நறுந்தேனும் - நல்லதேனையும், விருந்து அருந்தக் கொடுப்போம் - விருந்தினர் உண்ணத்தருவோம், சினவேங்கைப் புலித் தோலின் பாயலில் - கோபத்தையுடைய புலியின் தோலாகிய சயனத்தில், கண்படுப்போம் - தூங்குவோம், எழுந்து - விழித்தெழுந்து, கயற்கண்ணி காலில்விழுந்து - மீநாக்ஷியம்மையின் திருவடியில் வீழ்ந்து, வினைகெடுப்போம் - வினைகளை யழிப்போம், எங்கள் - எங்களுடைய, குறக்குடிக்கு - குறக்குடிகளுக்கு, அடுத்த இயல்பு - பொருந்தின இயற்கை, இது - இதுவாகும். எ - று. (௧அ)

புல்வாயின் பார்வையைவெம் புலிப்பார்வை யிணைங்கும்
பிறைத்தினைகல் லுரற்பாறை முன்றிற்றொறு முணங்கும்

கல்விடரில் வரிவேங்கை கடமானோ டுறங்கும்
  கருமலையில் வெள்ளருவி கறங்கிவழிந் திறங்கும்
சில்வலையும் பல்வாரு முன்னிறப்பிற் றூங்கும்
  சிறுதுடியும் பெருமுரசுந் திசைதொறுநின் றேங்கும்
கொல்லையின்மான் பிணையுமிளம் பிடியும்விளை யாடும்
  குறிச்சியெங்கள் குறச்சாதி குடியிருப்ப தம்மே.

(இ - ள்.) அம்மே - தாயே, புல்வாயின் பார்வையை - மானின் பார்வையை, வெம்புலிப் பார்வை - வெவ்விய புலிப்பார்வையானது, இணங்கும் - இசைந்திருக்கும், புதுதினை - புதிய தினையானது, கல்லுரல் - கல்லுரல்களுள்ள, பாறைமுன்றில் தொறும் - பாறைகளின் முற்றங்களிலெல்லாம், உணங்கும் - உலரும், கல்விடரில் - கல்வெடிப்பில், வரிவேங்கை - கீற்றுக்களையுடைய வேங்கைப் புலிகள், கடமானோடு உறங்கும் - கடமான்களுடனுறங்கும், கருமலையில் - கரியமலையினின்றும், வெள்ளருவி - வெள்ளிய அருவியாறுகள், கறங்கி - முழங்கி, வழிந்து இறங்கும் - வழிந்திழியும், சில்வலையும் - சில வலைகளும், பல்வாரும் - பலதோல்வார்களும், முன் இறப்பில் தூங்கும் - முன்னிறப்புக்களில் தொங்கும், சிறுதுடியும் - சிறிய துடிகளும், பெருமுரசும் - பெரிய முரசங்களும், திசைதொறும் - திக்குகள்தோறும், நின்றுஏங்கும் - நின்று ஒலிக்கும், கொல்லையில் - கொல்லைகளில், மான்பிணையும் - பெண்மான்களும், இளம்பிடியும் - இளமையாகிய பெண்யானைகளும், விளையாடும் - விளையாடிக்கொண்டிருக்கும், (இப்படிப்பட்ட) குறிச்சி - குறிஞ்சி நிலமானது, எங்கள் குறச்சாதி குடியிருப்பு - எங்கள் குறச்சாதியார் குடியிருக்குமிடம். எ - று.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வெள்ளிமலைக் குறவன்மகன் பழனிமலைக் குறவனெங்கள்
  வீட்டிற் கொண்ட

வள்ளிதனக் கேகுறவர் மலையாட்சி சீதனமாய்
 வழங்கி னாராற்
பிள்ளைதனக் கெண்ணெயில்லை யரைக்குமொரு துணியில்லையெ
 பிறகே வந்த [ன்
கள்ளிதனைக் கொண்டவன்றே குறவனுக்கு மெனக்குமில்லை
 கஞ்சி தானே.

(இ - ள்.) வெள்ளிமலைக்குறவன் மகன் - வெள்ளிமலைக் குறவனுக்கு மகனாகிய, பழனிமலைக்குறவன் - பழனிமலைக் குறவனானவன், எங்கள் வீட்டில்கொண்ட - எங்கள் வீட்டில் வாங்கின, வள்ளிதனக்கே - வள்ளியென்னும் பெண்ணுக்கே, குறவர் - குறவர்கள், மலையாட்சி - குறிஞ்சி நிலத்தரசாட்சியை, சீதனமாய் வழங்கினார் - சீதனமாய்க் கொடுத்தார்கள், பிள்ளை தனக்கு எண்ணெய் இல்லை - பிள்ளைக்கு எண்ணெயில்லை, அரைக்கும் ஒரு துணியில்லை - அரையி லுடுத்தவும் ஒரு ஆடையில்லை, என்பிறகே வந்த - என்பின்னே வந்த, கள்ளிதனைக்கொண்ட அன்றே - கள்ளியாகிய என் சக்களத்தியைக் கொண்ட அப்பொழுதே, குறவனுக்கும் எனக்கும் - என் கணவனாகிய குறவனுக்கும் எனக்கும், கஞ்சி இல்லை - கஞ்சி கிடைப்பது அருமையாய்விட்டது. எ - று. (உ0)

சிந்து.

கூடல்புன வாயில்கொடுங் குன்றுபாங் குன்று
 குற்றால மாப்பனூர் பூவணநெல் வேலி
ஏடகமா டானைதிருக் கானப்பேர் சுழியல்
 இராமேசந் திருப்புத்தூ ரிவைமுதலாந் தலங்கள்
நாடியெங்க ளங்கயற்கண் ணாண்டதமிழ்ப் பாண்டி
 நன்னாடும் பிறநாடு மென்னுடை தாகக்

காடுமலை யுந்திரிந்து குறிசொல்லிக் காலங்
கழித்தேனென் குறவனுக்குங் கஞ்சிவரா தம்மே.

(இ - ள்.) கூடல் - திருக்கூடல், புனவாயில் - திருப்புனவாயில், கொடுங்குன்று - திருக்கொடுங்குன்று, பரங்குன்று - திருப்பரங்குன்றம், குற்றாலம் - திருக்குற்றாலம், ஆப்பனூர் - திருவாப்பனூர், பூவணம் - திருப்பூவணம், நெல்வேலி - திருநெல்வேலி, எடகம் - திருவேடகம், ஆடானை - திருவாடானை, திருக்கானப்பேர்————, சுழியல், திருச்சுழியல், இராமேசம் - இராமேச்சுரம், திருப்புத்தூர்————, இவைமுதலாம் தலங்கள் நாடி - இவை முதலாகிய க்ஷேத்ரங்களைத் தரிசித்து, எங்கள் அங்கயற்கண் - எங்களுடைய மீநாக்ஷியம்மை, ஆண்ட - அரசாண்ட, தமிழ்ப்பாண்டி நல்நாடும் - தமிழ்ப்பாண்டியாகிய நல்ல நாடும், பிறநாடும் - பிறநாடுகளும், என்நாடு ஆக் - என்நாடாகக்கொண்டு; காடும் மலையும் திரிந்து - காட்டிலும் மலையிலும் திரிந்து, குறிசொல்லி - குறியைச்சொல்லி, காலம்கழித்தேன் - காலம்போக்கினேன், (இவ்வளவு பிரயாசப் பட்டும்) என் குறவனுக்கும் - என் கணவனாகிய குறவனுக்கும், கஞ்சிவராது - கஞ்சி கிடைக்காது, அம்மே - தாயே. எ - று.

பொற்கொடிவள் ளிக்கிளைய பூங்கொடியென் பாட்டி
பூமகண்மா யவன்மார்பிற் பொலிவளென்று சொன்னாள்
மற்றவள்பெண் களிலெங்கள் பெரியதாய் கலைமான்
மலரயனார் திருநாவில் வாழ்வளென்று சொன்னாள்
பெற்றவெங்கள் நற்றாயுஞ் சுந்தரியீந் திரன்றோள்
பெறுமென்றாள் பின்னெங்கள் சிறியதா யம்மே
சொற்றகுறிக் களவிலையென் கன்னிமா றறியச் [துவே.
சொன்னேன்பொய் யலநாங்கள் சொன்னதுசொன் ன

(இ - ள்.) பொற்கொடி வள்ளிக்கு இளைய - பொற்கொடி போல்பவளாகிய வள்ளிக்கிளைய, பூங்கொடி - பூங்கொடிபோல் வளாகிய, என்பாட்டி - என் பாட்டியானவள், பூமகள் - திருமகள், மாயவன் மார்பில் - திருமாலின் மார்பில், பொலிவள் என்று சொன்னாள் - விளங்குவாளென்று சொன்னாள், அவள் பெண்களில் - அவளுடைய பெண்களுக்குள்ளே, எங்கள் பெரியதாய் - எங்கள் பெரிய தாயானவள், கலைமான் - சரசுவதி, மலர் அயனார் திருநாவில் - தாமரை மலரில் வாழ்கின்ற பிரமனது திருநாவில், வாழ்வள் என்று சொன்னாள் - வாழ்வாளென்று சொன்னாள், பெற்ற எங்கள் நற்றாயும் - ஈன்ற எங்கள் நற்றாயும், சுந்தரி - இந்திராணி, இந்திரன் தோள் - இந்திரன் புயத்தை, பெறுமென்றாள் - அவளைப் பெறுவாளென்று சொன்னாள், பின் - பிறகு, எங்கள் சிறிய தாய் - எங்கள் சிற்றன்னையானவள், சொற்ற குறிக்கு - சொன்ன குறிக்கு, அளவு இல்லை - எல்லையில்லை, என் கன்னிமார் அறிய - என் கன்னிமார் அறியும்படி, சொன்னேன் - சொல்லினேன், பொய் யல்ல———, நாங்கள் சொன்னது சொன்னதுவே - நாங்கள் சொன்னது சொன்னதாகவே பலிக்கும். எ - று. (உஉ)

முன்னொருநா ளம்மைதடா தகைபிறந்த நாளில்
முகக்குறிகண் டுலகுலக முழுதாளு மென்றேன்
பின்னொருநாள் கைக்குறிபார்த் தம்மையுனக் கெங்கள்
பிஞ்ஞகர்தா மணவாளப் பிள்ளையென்று சொன்னேன்
அன்னையவள் மெய்க்குறிகளனைத்தையும்பார்த் துனக்கோர்
ஆண்பிள்ளை யுண்டுபிறந் தரசாளு மென்றேன்
சொன்னகுறி யெல்லாமுன் சொற்படியே பலிக்கும்
தொகுத்துநீ நினைந்தகுறி யினிச்சொலக்கே ளம்மே.

(இ - ள்.) அம்மே - தாயே, முன் ஒருநாள் - முன்னொருகாலத்தில், அம்மை தடாதகை - லோகமாதாவாகிய தடாதகைப்

பிராட்டி, பிறந்தநாளில் - அவதரித்த தினத்தில், முகக்குறி கண்டு - அவளது முகக்குறியைப் பார்த்து, இவள் உலகமுழுது ஆளும் என்றேன்-இவள்எல்லா வுலகங்களையும் ஆளுவாளென்று சொன்னேன், பின் ஒருநாள் கைக்குறி பார்த்து - பின் பொருதினத்தில் கைக்குறியைப் பார்த்து, அம்மை-தாயே, உனக்கு-உனக்கு,எங்கள் பிள்ளைகள்-எங்கள் சிவபெருமானார், மணவாளப்பிள்ளை யென்று சொன்னேன்-மாப்பிள்ளை யாவாரென்று சொன்னேன், அன்னை அவள் - தாயாகிய அவளது, மெய்க்குறிகள் அனைத்தையும் பார்த்து - சரீரக் குறிகளெல்லாவற்றையும் பார்த்து, உனக்கு ஒரு ஆண்பிள்ளை உண்டு - உனக்கு ஒரு ஆண் மகன் உண்டாவான், பிறந்து - அவன் பிறந்து, அரசு ஆளும் என்றேன்-அரசாட்சி செய்வானென்று சொன்னேன், சொன்ன குறியெல்லாம் - நான் சொன்ன குறிகள் யாவும், என் சொற்படியே பலிக்கும் - என் சொல்லின்படியே பலங்கொடுக்கும், இனி - இனி, நீ நினைத்தகுறி - நீ நினைத்த குறியை, தொகுத்துச் சொல்லக்கேள் - நான் தொகுத்துச் சொல்லக் கேட்பாயாக. எ - று.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒருகாலங் கஞ்சியுமென் குஞ்சிதலைக் கெண்ணெயுமோ
 ருடுப்பு மீந்தாற்
பொருகால வேற்கண்ணாய் மனத்துநீ நினைந்தவெலாம்
 புகல்வன் கண்டாய்
வருகால நிகழ்காலங் கழிகால மூன்றுமொக்க
 வகுத்துப் பார்த்துத்
தருகாலந் தெரிந்துரைப்ப தெளிதுநீ தங்கள்குறச்
 சாதிக் கம்மே. ௦

(இ - ள்.) அம்மே - அம்மா, பொரு - போர்செய்தற்குரிய, காலவேல் - காலனைநிகர்த்த வேல்போன்ற, கண்ணாய் - கண்களை

யுடையவளே, கஞ்சியும் - கஞ்சியையும், என்குஞ்சித்தலைக்கு எண்ணெயும் - என்மயிர்த்தலைக்கு எண்ணெயையும், ஓர்உடுப்பும் - ஒரு ஆடையையும், ஈந்தால் - கொடுத்தால், நீமனத்துநினைந்த எல்லாம் - நீமனத்தில்நினைத்தவை யாவும், புகல்வேன் - சொல்லுவேன், வருகாலம் நிகழ்காலம் கழிகாலம் மூன்றும் - பவிஷ்யத்வர்த்தமானபூதகாலங்களாகிய மூன்றையும், ஒக்கவகுத்துப்பார்த்து - ஒப்பவகுத்துநோக்கி, தருகாலம் தெரிந்துஉரைப்பது - பயனைத்தருகிற காலத்தையறிந்துசொல்லுவது, எங்கள் குறச்சாதிக்கு - எங்கள் குறச்சாதியார்க்கு, எளிது - எளிதாகும், அரிது அன்று - அரிதல்ல. எ - று.

சிந்து.

குங்குமஞ்சந் தனக்குழம்பிற் குழைத்துத்தரை மெழுகிக்
கோலமிட்டுக் குங்குலியக் கொழும்புகையுங் காட்டிச்
செங்கனக நவமணிகள் திசைநான்கும் பரப்பித்
தென்மேலை மூலைதனிற் பிள்ளையாரும் வைத்துப்
பொங்குநறு மலரறுகோ டைங்கரர்க்குச் சாத்திப்
புழுகுநெய்வார்த் திருவிளக்கு நிறைநாழி வைத்து
மங்கையருக் கரசியெங்க ளங்கயற்கண் ணமுதை [மே.
மனத்துள்வைத்து நினைத்தருமி யினிச்சொலக்கே ளம்

(இ - ள்.) அம்மே - தாயே, சந்தனக்குழம்பில் - சந்தனக்குழம்பிலே, குங்குமம்குழைத்து - குங்குமமிட்டுக் குழைத்து, (அந்தக்குழம்பினால்) தரைமெழுகி - நிலத்தைமெழுகி, கோலமிட்டு - கோலத்தையிட்டு, கொழு - செழிய, குங்கிலியப்புகைகாட்டி - குங்கிலியப்புகையையும் காட்டி, செங்கனகம் - செம்பொன்னையும், நவமணிகள் - நவரத்நங்களையும், திசைநான்கும் பரப்பி - நான்குதிக்குகளிலும்பரப்பி, தென்மேலைமூலைதனில் - தென்மேற்கு மூலையில், பிள்ளையாரும் வைத்து - பிள்ளையாரையும்பிடித்துவைத்து, பொங்

கு - விளங்குகின்ற, நறுமலர்-மணமலர்களோ, அறுகோடு-அறுகம்புல்லுடன், ஐங்கரர்க்கு சாத்தி-விநாயகர்க்குச்சாத்தி, நிறைநாழிவை-து-நிறைபடிவைத்து, புழுகுநெய்வார்த்து - புழுகுநெய்பெய்து, விளக்கு இடு-தீபம்வை, மங்கையருக்குஅரசி - மங்கையர்க்கரசியாகிய எங்கள் அங்கயற்கண் அமுதை-எங்கள் அங்கயற்கண் ணமுதத்தை, மனத்துள்வைத்து - மனத்திலிருத்தி, நினைத்த குறி - நீ நினைத்த குறியை, இனி சொலக்கேள் - இனி நான் சொல்லக் கேட்பாயாக. எ - று. (உ௫)

முந்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
முறத்திலொரு படிநெல்லையென் முன்னேவை யம்மே
இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை
இரட்டைபட வெண்ணினபோ தொற்றைபட்ட தம்மே
உன்னுமுன் வெள்ளிமலைப் பிள்ளையார்வந் துதித்தார்
உனக்கினியெண் ணினகரும மிமைப்பினிற்கை கூடும்
என்னுடைய பெங்கள்குலக் கன்னிமா ரறிய
எக்குறிதப் பினுந்தப்பா திக்குறிகா ணம்மே.

(இ - ள்.) முந்நாழி முச்சிறங்கைநெல் - முந்நாழிமுச்சிறங்கை நெல்லை, அளந்துகொடுவா - அளந்துகொண்டுவா, ஒருபடி நெல்லை முறத்தில் - ஒருபடிநெல்லைமுறத்திலிட்டு, என்முன்னே வை அம்மே - என்னெதிரேவையம்மா, இந்நாழிநெல்லையும் - இந்த ஒருபடி நெல்லையும், முக்கூறுசெய்து-மூன்றுபங்காக்கி, ஓர்கூற்றை-ஒருபங்கை, இரட்டைபட எண்ணினபோது-இரட்டைபடஎண்ணினபொழுதில், ஒற்றைபட்டது அம்மே-ஒற்றைபட்டது அம்மா, உன்னுமுன் - நினைப்பதற்குமுன்னே, வெள்ளிமலைப்பிள்ளையார் - வெள்ளிமலையிலுள்ள பிள்ளையார், வந்து உதித்தார் - வந்துதோன்றினார், உனக்கு - உனக்கு, எண்ணின கருமம் - நினைத்தகாரியம், இனி

இமைப்பினில் - இனி யிமையளவில், கை கூடும் - கைவசப்படும், என் ஆணை - என்மேலாணை, எங்கள் குலக்கன்னிமார் அறிய - எங்கள் குலக்கன்னிமார் அறியும்படி, எக்குறிதப்பினும் - எந்தக் குறிதவறினாலும், இக்குறிதப்பாது - இந்தக்குறிதவருது, அம்மே - தாயே. எ - று. (உசு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நெல்லளந் திட்ட போது நிமித்தநன் றிடத்தெ ழுந்த
பல்லியும்வரத்தேசொல்லும்பத்தினிப்பெண்கள்வாயாற்
சொல்லிய வாய்ச்சொ லன்றித் தும்மலு நல்ல தேகாண்
அல்லது கிளைகூட் டும்புற் ருந்தைவீச் சழகி தம்மே.

(இ - ள்.) நெல்அளந்திட்டபோது - நெல்லளந்தகாலத்தில் காணப்பட்ட, நிமித்தம்நன்று - நிமித்தம் நன்ருயிருக்கின்றது, இடத்து எழுந்த - இடப்பக்கத்திலெழுந்த, பல்லியும் - கெவுளியும், வரத்தேசொல்லும் - வரவையே சொல்லுகின்றது, பத்தினிப்பெண்கள்வாயால்சொல்லிய வாய்ச்சொல்அன்றி - கற்புள்ளமாதர்கள் வாயினுற்சொன்ன வாய்ச்சொற்களேயல்லாமல், தும்மலும்நல்லதே - தும்மலும் நன்ருகவே யிருக்கின்றது, அல்லது - அன்றியும், கிளைகூட்டும்-உறவினரைச் சேர்க்கின்ற, புற்ருந்தை வீச்சு-புற்ருந்தையின் வீச்சும், அழகிது - நன்ருயிருக்கின்றது, அம்மே-தாயே. ()

சிந்து.

கொண்டுவா வம்மேகை கொண்டுவா வம்மே
  கொழுங்கனக நவமணிக ளிளைந்திடுமுன் கையே.
வண்டுலா மலர்கொயய வருந்திடுமுன் கையே
  வருந்தினர்க்கு நவநிதியுஞ் சொரிந்திடுமுன் கையே
புண்டரிகம் பூத்தழகு பொலிந்திடுமுன் கையே
  புழுகுநெய்ச் சொக்கர்புயந் தழுவிடுமுன் கையே

அண்டர்நா யகியெங்கள் மதுரைநா யகியை
அங்கயற்கண் ணாயகியைக் கும்பிடுமுன் கையே.

(இ - ள்) அம்மே - அம்மா, கைகொண்டுவா - கைகொண்டு வா, உன்கை - உன்கையானது, கொழு - செழுமையாகிய, கனகம் பொன்னையும், நவமணிகள் - நவமணிகளையும், அளந்திடும் - பொருந்திடும், உன் கை - உன்கையானது, வண்டுஉலாம் - வண்டுகள் பயில்கின்ற, மலர் கொய்ய - பூவைப்பறிக்க, வருந்திடும் - வருந்தும், உன்கை - உன்கையானது, வருந்தினர்க்கு - (வறுமையால்) வருந்தினவர்களுக்கு, நவநிதியும் - நவநிதிகளையும், சொரிந்திடும் - பொழியும், உன் கை - உன்கையானது, புண்டரிகம் பூத்து - தாமரைமலர் போலமலர்ந்து, அழகு பொலிந்திடும் - அழகோடுவிளங்கும், உன்கை - உன்கையானது, புழுகுநெய் - புழுகுநெய்யாடிய, சொக்கர் - சொக்கேசரது, புயம் - தோளை, தழுவிடும் - தழுவும், உன்கை - உன்கையானது, அண்டர்நாயகி - தேவநாயகியாகிய, எங்கள்மதுரை நாயகியை - எங்கள் மதுரைக்கரசியை, அங்கயற்கண்நாயகியை - மீனாக்ஷியம்மையை, கும்பிடும் - வணங்கும். எ - று. (உஅ)

அம்மைநின் செங்கையைநின் கொங்கையில்வைத் ததுதா
னபிஷேகர் சொக்கருனை யணைவரென்ற குறிகாண்
இம்மேலைத் திசையினிற்கை யெடுத்ததுவு மவர்தாம்
இன்றந்திப் பொழுதினில்வந் தெய்துவரென் றதுகாண்
கைம்மேற்கை கட்டியதுந் தப்பாம லுனக்குக்
கைகூடு நீநினைத்த காரியமென் றதுகாண்
செம்மேனி மணிவயிற்றிற் கைவைத்த தினிநீ
சிறுவர்பதி னறுவரையும் பெறுவையென்ற தம்மே.

(இ - ள்.) அம்மே - தாயே, நின்செங்கையை - உன்செங்கையை, நின்கொங்கையில் வைத்தது - உன்கொங்கைமீது வைத்த

து, அபிடேகச்சொக்கர் - அபிடேகச்சொக்கநாதர், உன்னையணைவர் என்றகுறி-உன்னைத்தழுவுவார் என்றகுறியாம், இம்மேலைத்திக்கிலே - இந்தமேற்றிசையில், கையெடுத்ததுவும் - கைதூக்கினதும், அவர் - அந்தச்சொக்கநாதர், இன்று அந்திப்பொழுதினில் - இன்று அந்திக்காலத்தில், வந்து எய்தவர் என்றது - வந்துசேர்வார் என்ற குறியாம், கைமேல்கைகட்டியதும் - கைமேல்கையைக்கட்டினதும், நீ நினைத்தகாரியம்-நீ எண்ணினகாரியம், தப்பாமல்-தவறாமல், உனக்கு கைகூடும் என்றது-உனக்கு கைவசப்படுமென்ற குறியாம், செம்மேனி மணிவயிற்றில்-செப்பமாகிய திருமேனியிலே குறுப்பாகிய திருவயிற்றில், கைவைத்தது - கையைவைத்தது, இனி-இனி, நீ-நீ, சிறுவர்பதினாறுவரையும் - பதினாறு புதல்வரையும், பெறுவையென்றது - பெறுவாயென்றகுறியாம். எ - று. (௨௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அங்கைத் தலத்துத் தனரேகை யளவில் செல்வந் தருமுனது, செங்கைத் துடிதென் மதுரேசர் செம்பொற் புயத்திற் சேர்க்குமால், இங்கிப் படிபுத் திரரேகை யெவர்க்கு மிலையிப் படிதோளில், தங்கு மறுவங் கயற்கணம்மை தன்னோ டிருக்கத் தருமம்மே.

(இ - ள்.) அம்மே - தாயே, அங்கைத்தலத்து - அழகிய கைத்தலத்திலுள்ள, தனரேகை - தனரேகையானது, அளவுஇல் செல்வம்தரும்-அளவற்ற ஐசுவரியத்தைக் கொடுக்கும், உனது செங்கைத்துடி-உன்செங்கையின் துடிப்பானது, தென்மதுரேசர் - தென்மதுரையீசரது, செம்பொன்புயத்தில்-செம்பொன்மலைபோலும் புயத்தில், சேர்க்கும்-கூட்டும், இங்குஇப்படி-இங்கு உனக்கிருக்கிற இந்தப்பிரகாரம், புத்திரரேகை-புத்திரரேகையானது, எவர்க்கும் இல்லை-யாவருக்கும் இல்லை, இப்படிதோளில் தங்கும் மறு - இவ்வாறு

தோளிலுள்ள மறுவானது, அங்கயற்கண் அம்மைதன்னோடு இருக்கத்தரும் - மீநாகூஷியம்மையோடு கூடியிருக்கும்படியான பாக்கியத்தைக்கொடுக்கும். எ - று. (கூ0)

சிந்து.

பொன்பொதியுந் துகிலெனவெண் புயலொடுதண் பனிமூடுந், தென்பொதிய மலையாட்டி பேரைச்சொல்லாய் பாடநான்.

(இ - ள்.) நான்பாட - நான்பாட, பொன்பொதியும் துகில் என - அழகுபொருந்திய வஸ்திரம்போல, வெண்புயலோடு - வெள்ளியமேகத்தோடு - தண்பனிமூடும் - குளிர்ச்சியாகிய பனிமூடுகின்ற, தென்பொதியமலையாட்டி-தென்பொதிகைமலையாட்டியாகிய மீநாகூஷியம்மையின், பேரைச்சொல்லாய் - திருநாமத்தைச் சொல்வாயாக. எ - று. (கூக)

பலநதிகள் புணர்ந்தநதிப் பதியையணை யாதவைகைக் குலைநதித்தண் டுறைச்செல்வி பேரைச்சொல்லாய் பாடநான்.

(இ - ள்.) நான்பாட - நான்பாட, பல நதிகள் புணர்ந்த - பல நதிகள் சேர்ந்த, நதிப்பதியை - கடலை, அணையாத - சேராத, குலம் - மேன்மையுள்ள, வைகை நதி - வையை நதியின், துறை - துறையையுடைய, செல்வி - செல்வியின், பேரை சொல்லாய் - திருநாமத்தைச் சொல்வாயாக. எ - று. (கூஉ)

அன்பாண்டு கல்வலிதென் றவ்வைபா டியவெங்கள் தென்பாண்டி நாட்டாடன் பேரைச்சொல்லாய் பாடநான்.

(இ - ள்.) நான் பாட - நான் பாட, அவ்வை - ஔவையாரவள், அன்பு ஆண்டு - அன்பையுடையளாய், கல் வலிது என்று பாடிய - கல்வலிதென்று பாடின, எங்கள் தென்பாண்டிநாட்டாள்

தன் - தென்பாண்டிநாட்டை யுடையவளாகிய மீநாக்ஷியம்மையின், பேரை சொல்லாய் - திருநாமத்தைச் சொல்வாயாக. எ - று.

ஔவை பாடிய பாடல் "வஞ்சி வெளிய குருகெல்லாம் பஞ்சவன்றன், ஞன்மாடக்கூடலிற் கல்வலிது, சோழனுறந் தைக்கரும்பி னிதுதொண்டைமான், கச்சியுிற் காக்கை கரிது" என்பது.

பொன்மாடஞ் சூழ்ந்தகரும் புயலமலன் போர்வைநிகர்
பன்மாடக் கூடலாள் பேரைச்சொல்லாய் பாடநான்.

(இ - ள்.) நான் பாட - நான் பாட, பொன் மாடம் சூழ்ந்த - பொன்மாடங்களைச் சூழ்ந்திருக்கிற, கரும் புயல் - கரிய மேகம், அமலன் போர்வை நிகர் - பரிசுத்தனுகிய சிவபெருமானது மேற்போர்வையை நிகர்த்த, பன்மாடக்கூடலாள் - பல் மாளிகைகள் நெருங்கிய கூடற்பதியை யுடையவளாகிய மீநாக்ஷியம்மையின், பேரை சொல்லாய் - திருநாமத்தைச் சொல்வாயாக. (௬௪)

எண்டிசைக்கும் வேம்பாயெம் மிறையவர்க்குக் கரும்பாகும், வண்டிசைக்குந் தாரினுள் பேரைச்சொல்லாய் பாடநான்.

(இ - ள்.) நான் பாட - நான் பாட, எண்டிசைக்கும் வேம்பாய் - அஷ்டதிக்குகளுக்கும் வேம்பாகி, எம் இறைவருக்கு - எம்மிறைவராகிய சொக்கேசருக்கு, கரும்பு ஆகும்-கரும்பாகின்ற, வண்டு இசைக்கும் தாரினுள் - வண்டுகள் இசைபாடுகின்ற பூமாலையையுடையவளாகிய மீநாக்ஷியம்மையின், பேரை சொல்லாய் - திருநாமத்தைச் சொல்வாயாக. எ - று. (௬௫)

தினவட்ட மிடும்பரிதித் திண்பரிமஞ் பரியாக்குங்
கனவட்ட வாம்பரியாள் பேரைச்சொல்லாய் பாடநான்.

(இ - ள்.) நான் பாட - நான்பாட, தினவட்டமிடும் - நாடோறும் மேருவை வலம்வருகிற, பரிதி - சூரியனது, திண் பரி - திண்ணிய குதிரைகளை, மண்பரி ஆக்கும் - நிலவுலகத்துக் குதிரைகளாக்கின, கனவட்டம் - கனவட்டமென்கிற பெயரையுடைய, வாம்பரியாள் - தாவுகின்ற குதிரையையுடையவளாகிய ஸ்ரீநாகஷியம்மையின், பேரை சொல்லாய் - திருநாமத்தைச் சொல்வாயாக. எ - று. (கூசு)

திக்கயங்கள் புறங்கொடுப்பத் திசையெட்டுந் திறைகொண்ட, கைக்கயத்தை மேற்கொண்டாள் பேரைச்சொல்லாய் பாடநான்.

(இ - ள்.) நான் பாட - நான் பாட, திக்கயங்கள் புறங்கொடுப்ப - அஷ்டதிக்கஜங்கள் புறங்காட்ட, திசையெட்டும் திறைகொண்ட - எட்டுத்திக்குகளையும் திறைகொண்ட, கை கயத்தை மேற்கொண்டாள் - ஒழுங்காகிய மேன்மையைக்கொண்டவளாகிய ஸ்ரீநாகஷியம்மையின், பேரை சொல்லாய் - திருநாமத்தைச் சொல்வாயாக. எ - று. (கூஎ)

ஆனேற்றுங் கொடியானை யைங்கணையான் வென்றிடவம், மீனேற்றின் கொடியுயர்த்தாள் பேரைச்சொல்லாய் பாடநான்.

(இ - ள்.) நான் பாட - நான் பாட, ஆனேற்றும் கொடியானை - இடபக்கொடியையுடையவனாகிய சிவபெருமானை, ஐங்கணையான் - பஞ்சபாணங்களையுடையவனாகிய மன்மதன், வென்றிட - வெல்ல, அம் - அழகாகிய, மீனேற்றின் கொடி உயர்த்தாள் - மகரக்கொடியை யுயர்த்தவளாகிய ஸ்ரீநாகஷியம்மையின், பேரை சொல்லாய் - திருநாமத்தைச் சொல்வாயாக. எ - று. (கூஅ)

இனியானை யிலைபரசர்க் கென்றுதிசை யெட்டுமொரு தனியானை செலுத்தினாள் பேரைச்சொல்லாய் பாடநான்.

(இ - ள்.) நான் பாட - நான் பாட, அரசர்க்கு - வேந்தர்க ளுக்கு, இனி ஆணை யிலையென்று - இனி ஆணைச்சக்கர மில்லையெ ன்று, திசை யெட்டும் - எட்டுத்திக்கிலும், ஒரு தனி யாணை - ஒப் பற்ற தன் ஆணையை, செலுத்தினாள் - செலவிட்டவளாகிய மீநா க்ஷியம்மையின், பேரை சொல்லாய் - திருநாமத்தைச் சொல்வா யாக. வி - று. (௩௯)

கருமலையச் செருமலையுங் கைம்மலைய மன்னர்தொழ
வருமலையத் துவசனருள் மடக்கொடியைப் பாடுவனே.

(இ - ள்.) செருமலையும் - போர்செய்கின்ற, கை மலைய - யானைப்படையையுடைய, மன்னர் தொழ - அரசர் வணங்கும்படி, வரும் - அவதரித்த, மலயத்துவசன் அருள் - மலயத்துவசபாண்டி யன் ஈன்ற, மடக்கொடியை - இளங்கொடிபோல்வாளாகிய மீநாக்ஷி யம்மையை, கருமலைய - எமது பிறவி கெடும்படி, பாடுவன் - பாடு வேன். எ - று. (௪0)

விண்புரக்குங் கதிர்மௌலி முடிகவித்து வெண்குடைக்கீழ்
மண்புரக்கு மபிடேக வல்லியைநான் பாடுவனே.

(இ - ள்.) விண் புரக்கும் - விண்ணுலகைக் காக்கின்ற, கதிர் - சந்திரனை யணிந்த, மௌலி - சிரத்தில், முடி கவித்து - முடி தரி த்து, வெண்குடைக்கீழ் - வெண்மையாகிய சந்திரவட்டக்குடையின் கீழேவைத்து, மண் - நிலவுலகத்தை, புரக்கும் - காக்கின்ற, அபி டேகவல்லியை - அபிடேகவல்லியாகிய மீநாக்ஷியம்மையை, நான் பாடுவன் - நான் பாடுவேன். எ - று. (௪௧)

வெம்புருவச் சிலைகுனித்து விழிக்கணைக ளிரண்டெடுத்தே
மொய்ம்புருவக் கொடுந்தெய்வ மொய்குழலைப் பாடுவனே.

(இ - ள்.) வெம்புருவச்சிலைகுனித்து - வெவ்வியபுருவமா கிய வில்லைவளைத்து, விழிக்கணைகள் இரண்டு - கண்களாகிய பாணங்

களிரண்டையும், எந்தை - எமது தந்தையாகிய சிவபெருமானது மொய்ம்புஉருவ - தோளிற்பட்டுருவும்படி, தொடுத்துஎய்த - தொட்டுப் பிரயோகித்த, மொய்குழலே - நெருங்கின கூந்தலையுடையவளாகிய மீநாக்ஷியம்மையை, பாடுவன் - பாடுவேன். எ - று. (௬௨)

ஊன்கொண்ட முடைத்தலையிற் பலிகொண்டார்க்குலகேழுந்
தான்கொண்ட வரசாட்சி தந்தாளைப் பாடுவனே.

(இ - ள்.) ஊன்கொண்ட - தசையைக்கொண்ட, முடைத் தலையில் - புலால் நாற்றத்தையுடைய தலையோட்டில், பலிகொண்டார்க்கு - பிக்ஷையேற்றவராகிய சிவபிரானார்க்கு, உலகு எழும் தான் கொண்ட அரசாட்சி - தான் கொண்ட அரசாட்சியாகிய உலகேழையும், தந்தாளை - கொடுத்தவளாகிய மீநாக்ஷியம்மையை, பாடுவன் - நான் பாடுவேன். எ - று. (௬௩)

வானவர்கோன் முடிசிதறி வடவரையிற் கயலெழுது
மீனவர்கோன் றனைப்பயந்த மெல்லியலைப் பாடுவனே.

(இ - ள்.) வானவர்கோன் முடி சிதறி - இந்திரனது மகுடத்தைச் சிதறடித்து, வடவரையில் - இமயமலையின்மேல், கயல் எழுதும் - மீனக்கொடியை நாட்டின, மீனவர்கோன் தன்னை பயந்த - உக்கிரவழுதியைப்பெற்ற, மெல் இயலை - மிருதுத்தன்மை யுடையவளாகிய மீநாக்ஷியம்மையை, பாடுவன் - நான் பாடுவேன். எ - று.

கான்மணக்குஞ் சடைக்காட்டிற் கவின்மணக்குங் கடிக்கொன்றைத், தேன்மணக்கும் பிறைநாறுஞ் சீறடியைப் பாடுவனே.

(இ - ள்.) கான் மணக்கும் - வாசனை வீசுகின்ற, சடைக்காட்டில் - சடாடவியில், கவின் மணக்கும் - அழகு பெருகுகின்ற, கடி - மணமுள்ள, கொன்றை - கொன்றைமலரின், தேன் மணக்கும் -

தேனளைந்த, பிறைநாறும் - பிறைச்சுவடு தோன்றுகின்ற, சிறடி யை - சிற்றடியை யுடையவளாகிய மீநாக்ஷியம்மையை, பாடுவேன் - நான் பாடுவேன். எ - று. (சுரு)

எவ்விடத்துந் தாமாகி யிருந்தவருக் கருந்தவரும் [னே.
வெவ்விடத்தை யமுதாக்கும் விரைக்கொடியைப் பாடுவே

(இ - ள்.) எவ்விடத்தும் - எந்த இடத்திலும், தாமாகியிருந்த வருக்கு - தாமேயாகி யிருந்த சிவபிரானுக்கு, அருந்த அரும்-உண்ணுதற்கரிய, வெவ்விடத்தை - கொடிய நஞ்சை, அமுது ஆக்கும் - அமுதாகச்செய்த, விரைக்கொடியை - மணமுள்ள பூங்கொடிபோல் பவளாகிய மீநாக்ஷியம்மையை, பாடுவேன் - நான் பாடுவேன். எ - று.

வைத்தபகி ரண்டமெனு மணற்சிற்றி லிழைத்திழைத்தோர்
பித்தனுடன் விளையாடும் பெய்வளையைப் பாடுவேனே.

(இ - ள்.) வைத்த - அமைத்துவைக்கப்பட்ட, பகிரண்டமென்னும் - புறவண்டங்களென்கிற, மணற்சிற்றில் - மணலாலியன்ற சிறு வீடுகளை, இழைத்து இழைத்து - செய்து செய்து, ஓர் பித்தனுடன் விளையாடும் - ஒரு பித்தனாகிய சிவபெருமானோடு விளையாடுகிற, பெய் வளையை - இடப்பட்ட வளையலையுடையவளாகிய மீநாக்ஷியம்மையை, பாடுவேன் - நான் பாடுவேன். எ - று.

இலைக்குறியுங் குணமுநமக் கென்பார்க்கு வளைக்குறியும்
முலைக்குறியு மணிந்திட்ட மொய்குழலைப் பாடுவேனே.

(இ - ள்.) குறியும் குணமும் - குறியுங் குணமும், நமக்கு இல்லை யென்பார்க்கு - எமக்கில்லையென்பவராகிய சிவபெருமானுக்கு, வளைக்குறியும் முலைக்குறியும் அணிந்திட்ட - வளைக்குறியையும் முலைக்குறியையும் அலங்கரித்துவைத்த, மொய் குழலை-நெருங்

னை கூந்தலையுடையவளாகிய மீநாக்ஷியம்மையை, பாடுவேன் - நான் பாடுவேன். எ - று. (௪௩)

ஒன்றாகி யனைத்துயிர்க்கு முயிராகி யெப்பொருளும்
அன்றாகி யவையனைத்து மானாளைப் பாடுவேனே.

(இ - ள்.) ஒன்று ஆகி - ஒரு பொருளாகி, அனைத்து உயிர்க்கும் - எல்லா வுயிர்களுக்கும், உயிராகி - உயிராகி, எப்பொருளும் அன்று ஆகி - எந்தப்பொருளும் அல்லளாகி, அவை அனைத்தும் ஆனாளை - அந்தப்பொருள்களெல்லாம் தானேயானவளாகிய மீநாக்ஷியம்மையை, பாடுவேன் - நான் பாடுவேன். எ - று. (௪௪)

பரசிருக்குந் தமிழ்க்கூடற் பழியஞ்சிச் சொக்கருடன்
அரசிருக்கு மங்கயற்கண் ணாரமுதைப் பாடுவேனே.

(இ - ள்.) பரசு இருக்கும் - புகழ்நிலை பெற்றிருக்கிற, தமிழ் - தமிழ் பயில்கின்ற, கூடல், மதுரைப்பதியில், பழியஞ்சி - பழியை அஞ்சினவராகிய, சொக்கருடன் - சொக்கநாயகரோடு, அரசிருக்கும் - அரசு வீற்றிருக்கிற, அங்கயற்கண் - அங்கயற்கண்ணையுடைய, ஆர் அமுதை - அரிய அமிர்தத்தை, பாடுவேன் - நான் பாடுவேன். எ - று.

நீர்வாழி தென்மதுரை நின்மலனா ரருள்வாழி
கார்வாழி யங்கயற்கட் கன்னிதிரு வருள்வாழி
சீர்வாழி கூடனகர்த் திருமலிபூ பதிவாழி
பேர்வாழி யவன்செல்வம் பெரிதாழி வாழியவே.

(இ - ள்.) நீர் வாழி - நீர் வாழ்க, தென்மதுரை நின்மலனார் - தென்மதுரைப்பதியில் வாழ்கின்ற நின்மலராகிய சிவபெருமானாரது, அருள் வாழி - திருவருள் வாழ்க. கார் வாழி - மேகங்கள் வாழ்க, அங்கயற்கண் கன்னி - மீநாக்ஷியம்மையின், திருவருள் வாழி - திருவருள் வாழ்க, சீர் வாழி - எல்லாச்சிறப்புக்களும் வாழ்க, கசி

நேரிசைவெண்பா.

தென்மலையுங் கன்னித் திருநாடும் வெள்ளிமலைப்
பொன்மலைக்கே தந்த பொலங்கொம்பே—நின்மா
முலைக்குவடு பாய்சுவடு முன்காய மாலம்
மலைக்குவடு வன்றே மணம்.

(இ - ள்.) தென்மலையும் - தென்பொதியமலையையும், திரு - சிறப்புள்ள, கன்னிநாடும்-கன்னிநாட்டையும், வெள்ளிமலை - வெள்ளிமலையையுடைய, பொன்மலைக்கு-பொன்மலைபோலுஞ் சிவபெருமானுக்கு, தந்த-கொடுத்த, பொலங்கொம்பே - பொற்கொடியே; நின்-உனது, மா - பெரிய, முலைக்குவடு - முலையாகிய குவடுகள், பாய்சுவடு - பாய்ந்ததாலுண்டாகிய குறி, அ மலைக்கு-அந்தப்பொன் மலைபோலுஞ் சிவபெருமானுக்கு, முன் - முன்னே, காயம் - காயமேயாயினும், (பின்னே) மணம் - மணக்குறியாதலால். வடு அன்று - காயமன்று. எ - று.

மாமுலையென்பதற்கு அழகிய முலை என்றும், யானைபோலும் முலையென்றும் உரைத்தலுமாம். ஆல் - அசை. மால் அம்மலை-பெருமைபொருந்திய அம்மலை. நன்கீட்டமுகைக்கண்டு மயங்காநின்ற அம்மலை. இதற்கு அரிபிரமர்கள் அடிமுடிகாணாது மயங்குதற்கேதுவாகிய அம்மலை என்றுரைத்தலும் ஒன்று. அம்மலைக்கு - முன்காயம் நின்முலைக்கு வடுபாய்சுவடு வடுஅன்று மணமே என்று அந்வயித்து, அச்சிவபெருமானுக்கு முற்காலத்து அவரதுதிருமேனியில் நின்மா முலைக்கு வடுபாய்சுவடு வடுவென்றுமணக்குறியேயாம் எனவும் உரைத்துக்கொள்க. வடு - பழியுமாம். சிவபெருமான் தானே ஓர் பொன் மலையாய் இருத்தலன்றித் தமதிருப்பிடமும் வெள்ளிமலையாக விரும்பிக்கோடல் நோக்கி இவர்க்கு மலையிருப்பு மிக்கதெனக் கருதியாமும் மலையையே இவர்க்களித்தல் தகுதியாம் என்றெண்ணித் தந்த

மையை, தென்மலையும் கன்னித்திருநாடும் வெள்ளிமலைப் பொன்மலைக்கேதந்த பொலங்கொம்பே என்றது விளக்காநின்றது. (க௩.)

### கட்டளைக்கலித்துறை.

மணியே பொருபச்சை மாணிக்க மேமருந் தேயென்று
னின்னைப், பணியேன் பணிந்தவர் பாலுஞ்செல் லேனவர்
பாற்செலவுந், துணியேன் றுணிந்ததை யென்னுரைக் கே
ன்மது ரைத்திருநாட், டணியே யனைத்துயிர்க்கு மன்னைநீ
யென் றறிந்துகொண்டே.

(இ-ள்.) மதுரைத்திருநாட்டு அணியே - மதுரைத்திருநாட்டுக்கோரலங்காரமா யிருப்பவளே, நீ அனைத்து உயிர்க்கும் அன்னையென்று அறிந்துகொண்டு - நீ எல்லாவுயிர்களுக்கும் தாயென்றறிந்துகொண்டும், மணியே - நீலமணியே, ஒருபச்சைமாணிக்கமே - ஒப்பற்ற பச்சைமாணிக்கமே, மருந்தே - மருந்தே, என்று - என்று தோத்திரித்து, உன்னை பணியேன் - உன்னை வணங்கேன், பணிந்தவர் பாலும் செல்லேன் - வணங்கினவரிடத்துஞ்செல்லேன், அவர் பால் செல்லவும் துணியேன் - அவரிடத்துச்செல்லவுந் துணிவுகொள்ளேன், துணிந்ததை என் உரைக்கேன் - (அவ்வாறு நான்செல்லாமைக்குத்) துணிவுகொண்டதை யாதென்று எடுத்துச் சொல்லுவேன். எ-று.

மணி நவமணிக்கும் பொதுவாயினு மீண்டு நீலமணிக்காயிற்று. மருந்து என்பதற்குப் பிறவிப்பிணிக்கு மருந்தென்றும், என்றும் அழியாமைக்கேதுவாகிய அமிழ்தமென்றும் உரைத்துக்கொள்க. அறிந்துகொண்டு என்பதனீற்றெச்சவும்மை தொக்கது. ஒப்பிடப் பச்சைமாணிக்கமொன்றின்மையான், ஒரு என்பதற்கு ஒப்பற்ற எனப்பொருளுரைக்கப்பட்டது. (கச).

## நேரிசைவெண்பா.

கொண்டைச் செருக்குங் குறுநகையு நெட்டயிற்கட்
கெண்டைப்பிறக்கமும்வாய்க் கிஞ்சுகமுங்--கொண்டம்மை
கற்பூர வல்லி கருத்திற் புகப்புகுந்தா
ணற்பூர வல்லியுமென் னா.

(இ - ள்.) அம்மை கற்பூரவல்லி - எமதன்னையாகிய மீநாக்ஷியம்மை, கொண்டைச் செருக்கும் - செருக்கின கொண்டையையும், குறுநகையும் - குறுநகையையும், நெடுஅயில்கண்கெண்டைப்பிறக்கமும் - நெடியவேல்போலுங் கண்களாகிய கெண்டைமீன்களின் விளக்கத்தையும், வாய்கிஞ்சுகமும் - திருவதரமாகிய முருக்கம்பூவையும், கொண்டு - உடையவளாய், கருத்தில்புக - என்மனத்திற் புகுதலும், நல்பூரவல்லியும்-அழகாகிய கலைமகளும், என் நா புகுந்தாள் - எனதுநாவிற் புகுந்தனள். எ - று.

கொண்டை - ஐம்பாலினொன்று, அதுபக்கன் முடித்தல். குறுநகை - புன்சிரிப்பு. கட்கெண்டை வாய்க்கிஞ்சுகம் என்பவற்றைக் கெண்டைக்கண் கிஞ்சுகவாய் எனமுன்பின்னாக மாற்றி, கெண்டைபோலுங்கண்கிஞ்சுகம் போலும் வாய் என்றுரைத்தலுமாம். (௧௬)

## கட்டளைக்கலித்துறை.

நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமிழ் முண்டு நயந்தசில
பாவுண்டினங்கள் பலவுமுண்டேடங்கிற்கொண்டிருந்தோ தார்
தேவுண்டு வைக்குங் கடம்பா டவிப்பசுந் தேனினைப்பாட்
பூவுண்டு நாமொன் றில்லையாந் தொடுத்துப் புனைவதற்கே.

(இ - ள்.) நாவுண்டு - நாவுளது, நெஞ்சஉண்டு-மனமுளது, நல்தமிழ்உண்டு - இனிய தமிழுளது, நயந்த சிலபாவுண்டு - யாவரானும் விரும்பப்பட்ட சிலபாக்களுள்ளன, இனங்கள் பலவும் உண

இ - அப்பாவினங்கள் பலவும் உள்ளன, ஓர்தே - ஒப்பற்ற தெய்வமாகிய பரமசிவன், பங்கில்கொண்டிருந்து - இடப்பாகத்திற்கொண்டிருந்து, உண்டு உவக்கும் - அநுபவித்துக் களிக்கின்ற, கடம்பஅடவி பசுந்தேனின் - கடம்பவனத்துள்ளதாகிய பசிய தேனின், பைங்தாள் பூ உண்டு - பசியதாட்டாமரை மலர்களுமுள்ளன, யாம் தொடுத்துப் புனைவதற்கு - நாம் தொடுத்துப் புனைவதற்கு, நார் ஒன்று இல்லை - நாரொன்று மேயில்லை யாயிற்று. எ - று.

நார் பாத்தொடுத்துப் புனைவதில் அன்பென்றும், பூத்தொடுத்துப்புனைவதில் நாரென்றும் பொருள்படவந்தது. நற்றமிழ்-செந்தமிழ். பா - வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன. இனங்களென்றது துறை தாழிசை விருத்தம் என்பவற்றை. பசுந்தேனின் பைந்தாட்பூவென்பதற்குப் பசுந்தேனோடுகூடிய பசிய நாளத்தையுடைய மலர் என்றுரைத்துக்கொள்க. (௧௫)

## நேரிசைவெண்பா.

புனைந்தாள் கடம்பவனப் பூவைசில பூவை
வனைந்தாளென் வாயும் மனமுந் — தினந்தினமும்
பொற்பதமே நாறுமவள் பூம்பதமன் றேநமது
சொற்பதமே நாறுஞ் சுவை.

(இ - ள்.) கடம்பவனப் பூவை - கடம்பவனத்துப் பூவை போல்பவளாகிய மீநாக்ஷியம்மை, சில பூவைபுனைந்தாள் - சில மலர்களால் தன்னை யலங்கரித்துக்கொண்டாள், என் வாயும் மனமும் வனைந்தாள் - என் வாயையு மனத்தையு மலங்கரித்தாள், தினம் தினமும் - நாடோறும், பொற்பதமே நாறும் - பொன்னொளியையே வீசுகின்ற, அவள், அவளது, பூம்பதம் அன்றே - அழகிய சிர்பாதங்களன்றோ, நமது சொற்பதம் நாறும் சுவை - எமது சொற்பொருள்களிற் றோன்றுஞ் சுவையாயிருப்பது. எ - று.

ராயிற்று. பொருள்கள் யாவும் இவ்விருவரையன்றி வேறில வாகலா னிவ்வாறு கூறினர். மற்று - அசை. (கஅ)

நேரிசைவெண்பா,

விண்டிருந்த பொற்கமல மீதிருந்த பொன்னினையுந் [ர்
கொண்டிருந்து குற்றேவல் கொள்ளுமாற்—றொண்டரண்ட
தேங்காவில் வீற்றிருப்பத் தென்மதுரைக் கேகடப்பம்
பூங்காவில் வீற்றிருந்த பொன்.

(இ - ள்.) தொண்டர் - தன்னடியார், அண்டர் - தேவர்களுடைய, தேங்காவில் வீற்றிருப்ப - மணமுள்ள கற்பகச்சோலையிலே வீற்றிருக்க, தென்மதுரைக்கு - தென்மதுரையில், கடப்பம்பூங்காவில் வீற்றிருந்த - கடப்பம்பூஞ்சோலையில் வீற்றிருந்த, பொன் - பொன்னானது, விண்டிருந்த - விரிந்திருந்த, பொற்கமலமீதிருந்த பொன்னினையுங் கொண்டிருந்து - அழகிய தாமரைமலரின்மேல் வீற்றிருந்தபொன்னினையும் தன்வயப்படுத்தி, குற்றேவல்கொள்ளும் - குற்றேவலைக் கொண்டிருக்கும். எ - று.

பொற்கமலமீதிருந்த பொன்னென்றது திருமகளை. பூங்காவில் வீற்றிருந்த பொன் என்றது அங்கயற்கண்ணம்மையை. தொண்டரண்டர் தேங்காவில் வீற்றிருப்பத் தென்மதுரைக்கே கடப்பம்பூங்காவில் வீற்றிருந்தபொன் என்றமையான் இறைவியி னருட்குணப்பெருமை விளங்குகின்றது, என்னை, தொண்டர்க்குத்தேவலோகத்துக் கற்பகச்சோலையை யிடமாக்கித் தான் பூலோகத்துத் தென்மதுரைக் கடப்பஞ்சோலையை யிடமாக்கிக் கொண்டமையான். (க௯)

கட்டளைக் கலித்துறை.

பொற்பூர வல்லிக் கமலத் தளைகொல் புகுந்தகமும்
வெற்பூர வல்லி பிறந்தக மும்மது மீட்டுமென்னே

பற்பூர வல்லியென் வன்னெஞ்சக் கஞ்சத்தெம் மையனொ
கற்பூர வல்லி குடிபுகுந் தேநின்ற காரணமே. [நீ]

(இ - ள்.) வெற்பு ஊர் அ வல்லி - இமையமலையில் தோன்றிய பூங்கொடிபோல்வாள், பொற்பு ஊர - அழகுமிக, அல்லி கமலத்தளே - அகவிதழ்களையுடைய கமலத்தவளே ஆவள், (என்னை), புகுந்த அகமும் - புகுந்த இடமும், பிறந்த அகமும் - பிறந்த இடமும், அது - அக்கமலமேயாதலால், (அங்ஙனமாக) மீட்டும் - மறுபடியும், கற்பூரவல்லி-மீனாக்ஷியம்மை, எம் ஐயனொடும் - எம்மிறைவராகிய சிவபெருமானொடும், வல்லி - பாசத்தளையோடுகூடிய, வல் - வலிய, என் நெஞ்சம் கஞ்சத்து - என்மனத் தாமரையில், அன்பு ஊர - அன்புமிகும்படி, குடிபுகுந்து நின்ற காரணம்-குடிபுகுந்து நின்றமைக்கு ஏது, என்னே - யாதோ. (அறிகிலேன்.) எ - று.

புகுந்த அகம், பிறந்த அகம் என்பவற்றில் நிலைமொழியீற்று அகரங்கெடாக்கன, "புகழ் புரிந்தில்லிலோர்க்கு என்பதிற்போல." பிறந்தகம் - இமையத்தடத்துப் பொற்றாமரை. புகுந்தகம் - மதுரைத் தலத்துப் பொற்றாமரை. ஐயனொடும் - என்பதில் ஒடு உடனிகழ்ச்சிப்பொருட்டு. குடிபுகுந்தென்றது மையாது, நின்ற என்றமையால் பிறந்தகம் புகுந்தகங்களை யொருவினும் என்னெஞ்சத்தை யொருவாள் என்றதாயிற்று. எம் என்றது தம்மனோரையும் உளப்படுத்தலான் உளப்பாட்டுத்தன்மைப்பன்மை. (உ0)

மீனாக்ஷியம்மை இரட்டைமணிமாலை

முற்றிற்று.

---

# புத்தக விளம்பரம்.

ஸ்ரீ சைவ பரம்பரை திருவண்ணாமலை ஆதீனம் ஸ்ரீமத் - 
தத்தம்பிரான் சுவாமிகள் பெரியபுராணத்திற்குப் பதவுரை வி
வுரை சித்தாந்தக்கருத்து முதலிய வெழுதி படத்துடன் நான்
த்தகமாக அச்சிட்டு முடித்தனர்.

| | | | |
|---|---|---|---|
| தற் புத்தகம் | விலை ரூபா | 6 | 0 |
| வது ,, | | 3 | 0 |
| வது ,, | | 6 | 8 |
| வது ,, | | 4 | 8 |
| சக்கிழார் சுவாமிகள் புராணம் திருமுறைகண்ட புராணம் பொழிப்புரை. | | 0 | 8 |
| வாக விதி | | 0 | 3 |
| ருமயிலைத் தலபுராணம் கலிகோபயிண்டு | | 1 | 0 |
| ,, மார்பில்பயிண்டு | | 0 | 12 |
| டணத்தார் ஐக்கியபடம் | | 0 | 1 |
| ருபெருந்துறையில் மாணிக்கவாசகர் உபதேச படம் | | 0 | 1 |

பட்டணத்துப்பிள்ளையார் புராண விருத்தியுரை பதவுரை ச
கை அணா - 4. 10 - சஞ்சிகையில் முடியுமெனபது உத்தேச

இப்புத்தகம் வேண்டுபவர்கள் அடியிற் கையொப்பமிட்ட
கடிதமெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

இங்ஙனம் :

☞ பெ - கிருஷ்ணசாமி முதலியார்,
28-நாகப்பமுதலிவீதி, சோமசேகரன்பேட்டை,
சென்னை